கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

**க**ன்னடக்காரர்கள் தகராறு செய்தால் என்ன? மகாராஷ்ட்டிரர்கள், அதுவும் மும்பைக்காரர்கள், மனமுவந்து தமிழ்நாட்டுக்குக் 'காவேரி'யை வழங்க இருக்கிறார்கள். (அட் லீஸ்ட் இரண்டரை மாதங்களுக்கு?) ஆம்! இந்தக் காவேரி துன்பமும் துயரமும் தாண்டி, பெருக்கெடுத்தோடி வரும் பெண் நதி!

"'காவேரி'யைச் 'சித்தி', 'அன்னை' என்றழைக்கலாம்; மும்பைக் கலைஞர்கள் தங்களுக்கு வாய்ப்பளித்தமைக்கு, காவேரிக்குக் கோயிலேகூட கட்டலாம். ஆனால் உலகெங்கிலுமுள்ள ரசிகர்கள் 'காவேரியை' எப்படி ஏற்கப் போகிறார்கள்?" இதுதான் காவேரியான மதுபாலாவின் பிரச்னை!

"சூப்பர் ஹிட்டான 'சித்தி' ஸ்லாட்டில் 'காவேரி' ஒளிபரப்பாவதைப் பற்றிய டென்ஷன் ஜாஸ்தியில்லை! ஆனால் நாலு வருடங்களுக்குப் பிறகு திரையில் முகம் காட்டப் போகிறேனே... அது எப்படி இருக்கும்? ரசிகர்கள் வரவேற்பார்களா? தொழிலதிபர் ஆனந்தை திருமணம் செய்து கொண்டபோது, 'இனி குடும்பமே பிரதானம்' என்று நடிப்புக்கு முழுக்குப் போட்டேன். ஹவுஸ் ஒய்ஃப் ரோலை செம்மையாகத் தான் செய்தேன். என் கணவரே கூட 'நீ இந்த வீட்டு மகளா? மருமகளா?' என்று கலாட்டா செய்யுமளவுக்கு, அந்த குஜராத்திக் குடும்பத்துடன் ஐக்கியமாகிவிட்டேன்..."

"ஆனால்... என்னுள் இருக்கும் 'creative urge' என்னைச் சும்மாவிடவில்லை. என் மனநிலையை உணர்ந்துகொண்டு, ஏதாவது 'லைட்டாக பிஸி'யாக இருப்பது போல் செய்' என்று ஊக்குவித்தார் என் மாமியார். இடையே ராதிகாவிடம், 'நான் எதையாவது



# நடந்தாய் வாழி காவேரி!

செய்ய விரும்புகிறேன்' என்று சொல்லி வைத்தேன். என்னைக் 'காவேரி'யாக்கி விட்டார்."

உண்மையில் மதுபாலாவை அன்று ஜுஹுவிலுள்ள 'லோட்டஸ் ஐ ஹாஸ்பிடலில்'தான் சந்திப்பதாகயிருந்தது. அங்கே காவேரியின் அப்பாவும் (சாரங்கன்) அம்மாவும் (சந்திரிகா) அண்ணனும் (ராமகிருஷ்ணன்) அவரை ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்யக் காத்திருந்தார்கள். ஷூட்டிங் யூனிட் வந்து சேராததால், அருகிலிருந்த ஹேமமாலினியின் இல்லத்தில் வைத்து மதுபாலாவைச் சந்தித்தோம்... (ஹேமமாலினி, இஷா தியோல் தரிசனங்கள் இலவச தீபாவளி போனஸ்!)



**"எ**ன் ஒரு வயதுக் குழந்தையை விட்டு விட்டு சென்னை செல்வது கஷ்டமென்பதால், பெரிய மனத்துடன் எனக்காகவே மும்பையில் 'ஷூட்' பண்ணுகிறார் ராதிகா!

"இங்கே 24 மணி நேர மும் வேலை செய்கிறார்கள். இங்கே ஸ்டெரஸ்ஸும் அதிகம்; செலவும் அதிகம்; அவர்களுடைய இத்தனை உழைப்புக்கும் நான் தகுதியானவளாக இருக்க வேண்டும் என்பது அடுத்த கவலை" என்கிறார் சென்னை – மும்பை ஷூட்டிங் கிலுள்ள வேற்றுமைகளைக் கோடிட்டவாறே.

"இது சித்தியைக் காட்டிலும் சூப்பர் ஹிட்டாக வேண்டும் என்பதுதான் என் மனசுக்குள் இருக்கும் ஆசை" என்று தன் உள்ளத்து ரகசியத்தை வெளியிடுபவர், அதற்குச் சாத்தியக்கூறுகள், காவேரியில் தென்படுவதை விவரிக்கிறார்.

"இது ஒரு சவாலான ரோல்தான்; சாதாரணமாக 'உமன்-பவரை'க் காட்ட, அந்த நாயகியை ஒரு போலீஸ் ஆபீசராகவோ, வக்கீலாகவோ, அரசியல்வாதியாகவோ சித்திரிப்பார்கள். ஆனால் இதில், ஒரு சாதாரண ஹவுஸ் ஒய்ஃப், தன் தந்தைக்குச் சொந்தமான வீட்டையும் நிலத்தையும் ஒரு தாதா அபகரிக்க முற்படும்போது, சிலிர்த்தெழுகிறாள். தந்தையைப் பறி கொடுத்த பின்னும், போராட்டத்தைத் தொடர்ந்து, வெற்றியும் பெறுகிறாள். இது பதவியில் இருப்பவளின் சக்தியல்ல; பதவிசாக இருப்பவளின் சக்தி. கொள்கைப் பிடிப்பும், நேர்மையும், அநீதி கண்டு பொங்கி எழும் திறமும் ஒரு சாதாரணப் பெண்ணுக்கும் இருக்கலாம் என்பதை சித்திரிக்கும், பெண்மையின் வெற்றி.

சேதன், ஷியாம் கணேஷ் போன்ற ஒரு சிலரைத் தவிர இதில் நடிக்கும் மற்றவர்களெல்லாம் மும்பைக் கலைஞர்கள்தான்.

"இவர்கள் ரொம்ப ஃப்ரெஷ்ஷாக, நாச்சுரலாக இருக்கிறார்கள். ரெகுலர் ஆர்ட்டிஸ்டுகளுடன் நடித்தால், மரியாதை எல்லாம் கொடுக்க வேண்டும்; இவர்களுடன் அந்தத் தொந்தரவெல்லாம் இல்லை. 'என்ன நடிக்கவே தெரியல்லியே உங்களுக்கு' என்று கிண்டல்கூடச் செய்யலாம். என் சொந்த அத்தை, சித்தி, பாட்டி, மாமி... ஆகியோருடன் உறவாடுவது போல்தான் இவர்களுடனும் பேசிக்கொண்டிருப்பேன். இந்த பதினைந்து எபிசோடுகளுக்குள்ளேயே எனக்கென்று தக்காளி ரசமெல்லாம் பண்ணிக் கொண்டு வந்தார்கள்" என்று புல்லரிப்பவர், "இந்தச் சீரியலுக்குப் பிறகு இவர்கள் ரெகுலர் ஆர்ட்டிஸ்டுகள் ஆகிவிடுவார்கள் பாருங்கள்" என்று நம்பிக்கை தெரிவிக்கிறார்.

**ஜெ**ன்டில்மேன், 'ரோஜா', 'ஃபூல் அவுர் காண்டே' போன்ற ஸூப்பர் ஹிட்களை எல்லாம் வழங்கி, நம்பிக்கை நட்சத்திரமாகத் திகழ்ந்த இவர், எப்படி திடீரென்று வனவாசம் மேற்கொண்டார்?

"நிறைய சிந்தித்தேன், மனிதர்களை அலசினேன்; இண்டஸ்ட்ரியில் யாரையெல்லாம் நண்பர்கள் என்று நினைத்திருந்தேனோ அவர்கள் நண்பர்கள் அல்ல என்று தெரிந்துகொண்டேன். உண்மையான உறவுகளை இனம் கண்டு, வளர்த்துக்கொண்டேன். என்னிடமுள்ள குறை நிறைகளையும் உணர்ந்து திருத்திக்கொண்டேன்" என்கிறார்.

இவரிடம் இவரே கண்ட குறை நிறைகள்தான் யாது? "டக்கென்று கோபிப்

பேன்- அது குறை; பட்டென்று அதை மறந்து, மன்னித்து விடுவேன் - அது நிறை'' என்பவர், மதுபாலா என்ற கலைஞரிடம் உள்ள விசித்திரங்களை அலசுகிறார்.

''நான் ஒரு டைரக்டர்ஸ் ஆர்டிஸ்ட்; அவர் சொன்னபடி செய்வேன்... இது நிறை; ஆனால் அப்படியே பாத்திரமாக மாறி விடுவதால், சில சமயம் அதிலேயே ஆழ்ந்து, அமிழ்ந்து, ஓவராகப் போய் விடுவேன். இது குறை; பொதுவாகவே எல்லா கலைஞர்களும் அதிக எமோஷனலாகி விடுபவர்கள்தான்; அவர்கள் மனம் ரொம்ப மென்மையானது. ஆனால் ஏனோ அதைக் கீறிப் பார்க்கும் எண்ணம் மற்றவர்களுக்கு அதிகமிருக்கும். வளரும் கட்டத்தில் லைட் பாயிலிருந்து ப்ரொடக்ஷன் அஸிஸ்டெண்ட் வரை அவரை மோசமாக நோகடிப்பார்கள். அந்த ரணம் மனத்தில் புரையோடிப் போய், அவர் வளர்ந்த பின் மற்றவர்கள் மீது கோபமாய் வெடித்துச் சிதறும். வளர்ந்த நிலையிலும் கூட, ஒரு கலைஞரை, பொதுச் சொத்தாகக் கருதி, யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் கன்னாபின்னாவென்று கமெண்ட்டடிப்பார்கள். இதுவும் அவரை பாதிக்கத்தான் செய்யும். ஆழ்மனத்திலிருக்கும் பாதுகாப்பின்மையை மறைக்க, அவர்கள், 'திமிர் பிடித்தவர்கள்' என்ற கவசத்தை மாட்டிக் கொண்டு, மற்றவர்களை அண்டவிடாமல் செய்கின்றனர்.

''என்னையும் ஒரு காலத்தில் திமிர் பிடித்தவள் என்று விமர்சித்திருக்கிறார்கள்; நிறைய கிசுகிசுத்திருக்கிறார்கள். நான் பெரிய ஸ்டார் என்ற மதர்ப்பில், 'ஐ டோண்ட் கேர்' என்ற விட்டேற்றியான மனப்பான்மையை வளர்த்துக் கொண்டேன். ஆனால் இப்போது முற்றிலும் மாறிவிட்டேன். எதிர்பார்ப்பின்றி எல்லையற்ற அன்பை வாரி வழங்கக் கற்றுக் கொண்டிருக்கிறேன். மனித நேயத்தை வளர்த்துக்கொண்டிருக்கிறேன். தவறு செய்யாத மனிதனே இல்லை; ஆனால் தான் செய்த தவறுகளிலிருந்து கற்றுக் கொள்ளாதவன், மனிதனே இல்லை'' என்ற பொன்மொழியை உதிர்த்தார்.

''மும்பையில் வளர்ந்த நான், ஒரு காலத்தில் தென்னாட்டைச் சார்ந்தவள் என்று சொல்லவே வெட்கப்பட்டேன்;



''தலைவருக்கு விவரம் பத்தாதுன்னு சொல்றியே... எப்படி?''

''வெளிநடப்பு செய்யும்போது சீட்டுலே கர்ச்சீப்பைப் போட்டு, பார்த்துக்கச் சொல்லிட்டுப் போறாரே!''

— தஞ்சை தாமு

ஆனால் இன்றோ, நான் தென்னிந்தியப் பெண், தமிழ்ப்பெண் என்பதில் மிகவும் பெருமை கொள்கிறேன். இப்போதெல்லாம் மரத்தைச் சுற்றி ஓடும் ரோல்கள் என்னைக் கவர்வதில்லை; வருடம் 365 நாளும் நடிக்க வேண்டும் என்ற வெறியுமில்லை; ஒன்றே செய்தாலும் அதை நன்றே செய்ய வேண்டும்; 'லகான்' போல் சர்வதேச அளவில் ஏதாவது வித்தியாசமாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியுள்ளது''

''என் உள்ளத்தில் ஒரு கதை இருக்கிறது. அதைப் பெரிதாக்கி உன்னதமான படம் செய்ய வேண்டும் என்ற உத்வேகம் இருக்கிறது. ஆனால் நான் எதிர்காலத்தைப் பற்றி திட்டமிடுவதில்லை; ஏனென்றால் நாம் நினைப்பதெல்லாம் நடப்பதில்லை; மேலேயுள்ள ஒருவன் போடும் திட்டங்கள்தான் நிறைவேறுகின்றன. 'ரோஜா'வை எனக்காக எடுக்கவில்லை, ஆனால் ரோஜாவாக மணம் வீசும் பாக்கியம் எனக்கல்லவோ கிடைத்தது: எதுவும் விதிப்படி நடக்கிறது. அதனால், நமக்களிக்கப்பட்டிருப்பதை நாம் சரி வரச் செய்ய வேண்டும் என்ற மனநிலையை வளர்த்துக் கொண்டிருக்கிறேன். காவேரியிலும் என் முழு உழைப்பையும் கலந்திருக்கிறேன். இனி தீர்ப்பு உங்கள் கையில்'' என்று தத்துவார்த்தமாகப் பேசிக் கொண்டிருக்கையில், காஸ்ட்யூமுடன் ப்ரொடக்ஷன் மானேஜர் வந்து விட, நடந்தாய்... வாழி... காவேரி!

— ஜெயஸ்ரீ ராஜ்

# பயில்வான் ஆகிறத தமிழக காங்கிரஸ்

தமிழக காங்கிரஸில் உற்சாகமும், புத்துணர்ச்சியும் பொங்கி வழிகின்றன. உள்ளாட்சித் தேர்தலில் தனி அணி அமைத்து போட்டியிட்டதில் அ.தி.மு.கவுக்குப் பலத்த சேதத்தை ஏற்படுத்த முடிந்திருக்கிறது. த.மா.கா. 'செல்வாக்கை' அம்பலப்படுத்த முடிந்திருக்கிறது. ஒவ்வொரு தேர்தல் முடிந்த பின்னும், அதன் முடிவுகளுக்கேற்ப மாநில காங்கிரஸ் தலைவரின் தலைவிதி நிர்ணயிக்கப்படும். அ.தி.மு.கவிடம் கெஞ்சிக் கூத்தாடி சில இடங்களைப் பெற்று அந்த இடங்களில் முழுமையான வெற்றி கிடைத்திருந்தாலும், இந்த அளவு சந்தோஷம் காங்கிரஸ்காரர்களுக்கு வந்திருக்குமா என்பது சந்தேகமே!

இளங்கோவனை எதிர்க்கும் கோஷ்டிகள் 'பெட்டிப்'பாம்பாக அடங்கிவிட, தமிழகத்தில் காங்கிரஸை வளர்க்க பல அதிரடியான செயல்திட்டங்களோடு சோனியாவைச் சந்தித்து விட்டு திரும்பி வந்திருக்கிறார் இளங்கோவன். தமிழகம், பாண்டிச்சேரியைக் கவனிக்கும் பொறுப்பிலிருந்து குலாம்நபி ஆசாத் விடுவிக்கப்பட்டு, கேரளத்தவரான ரமேஷ் சென்னிதாலா வந்திருக்கிறார்.

சென்னிதாலா - இளங்கோவன் கூட்டணி, தமிழகத்தில் காங்கிரஸை வெற்றிப் பாதைக்கு அழைத்துச் செல்லும் என்று மிகுந்த நம்பிக்கையுடன் சொல்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள்

பல்வேறு கட்சிகளிலும், தனித்தனியாகவும் இயங்கும் காங்கிரஸ் பிரமுகர்களை காங்கிரஸில் மீண்டும் இணைக்கும் பணி துவங்கியிருக்கிறது. த.மா.காவையும் பலவீனப் படுத்த சிக்னல் கொடுத்து விட்டாராம் சோனியா! முதல் கட்டமாக த.மா.கா. கொ.ப.செ.வாக இருந்த முனவர் பாட்சா மற்றும் சென்னை மாவட்டத் த.மா.கா. தலைவர்கள் நூற்றுக்கணக்கான தொண்டர்களுடன் காங்கிரஸில் இணைந்திருக்கிறார்.

உள்ளாட்சித் தேர்தலில் சிதம்பரத்தின் ஜனநாயகப் பேரவை, புதிய நீதிக்கட்சி, புதிய தமிழகம், மக்கள் தமிழ் தேசம் ஆகியவற்றோடு கூட்டணி அமைத்த காங்கிரஸ், மேயர் தொகுதிகளைப் பொறுத்தமட்டில் 15 சதவீத வோட்டுகளையும், மற்ற உள்ளாட்சித் தொகுதிகளில் 10சதவீதம் வோட்டுக்களையும் பெற்று மற்ற இரண்டு அணிகளையும் அசர வைத்துள்ளது.

"மொத்தம் 36 சதம் வோட்டு பதிவானதாகச் சொல்கிறார்கள். அதில் 20 சதம் அ.தி.மு.கவும், தி.மு.கவும் போட்ட கள்ள வோட்டுகள். மீதம் உள்ள 16சதத்தில் தான் நாங்கள் இவ்வளவு வோட்டு வாங்கியிருக்கிறோம்" என்கிறார் இளங்கோவன். இதே காங்கிரஸ் '98 பாராளுமன்றத் தேர்தலில் தனி அணி அமைத்து நின்றபோது அதற்கு கிடைத்தது மூன்று சதம் வோட்டுக்கள் தான்.

"ஒரு தேசியக் கட்சியான எங்களை மதிக்காமல் அ.தி.மு.க. செயல்பட்டதால்தான் நாங்கள் தனி அணி அமைத்தோம். மக்கள் செல்வாக்கை இழந்து கொண்டிருக்கும் இரண்டு கழகங்களோடும் இனி கூட்டணி வைத்துக் கொள்ள வேண்டியதில்லை என்பதே எங்கள் தொண்டர்களின் எண்ணம் என்று உற்சாகமாகச் சொல்கிறார் இளங்கோவன்.

"ஒரு சுயநலகும்பலின் பிடியில் த.மா.கா. சிக்கிக் கொண்டிருக்கிறது. தலைவர் மூப்பனாரின் கடைசி விருப்பம் என்பது கட்சியைக் காங்கிரஸோடு இணைப்பது தான். சென்னையில் இந்திராகாந்தி சிலை திறப்பு விழாவையும், இணைப்பையும் இந்திரா பிறந்த நாளில் வைத்துக் கொள்ள திட்டம் போட்டார் மூப்பனார். அவர் காலமாகிவிட்ட நிலையில், இனியும் தாமதம் செய்யாது த.மா.கவைக் காங்கிரஸில் இணைத்துவிட வேண்டும் என்கிறார் த.மா.காவிலிருந்து காங்கிரஸுக்குத் தாவி இருக்கும் முனவர் பாட்சா.

"1996லிருந்து, மூப்பனார் இறக்கும் வரை தமிழகத்தில் காங்கிரஸ் என்பது மூப்பனாரின் இடுப்புக் குழந்தையாகத்தான் இருந்தது. காமராஜ் இருந்தபோது அவரோடு இருப்பது தான் சரி என்று முதலில் முடிவெடுத்த மூப்பனார், அவர் இறந்தவுடன் இந்திரா தலைமையில் தம்மை இணைத்துக் கொண்டார். அது போல இப்போதும், மூப்பனார் இறந்த் பிறகு அவரால் உருவாக்கப்பட்ட த.மா.கா. காங்கிரஸில் இணைவதுதான் காமராஜ் ஆட்சியைத் தமிழகத்தில் கொண்டு வர

சிறந்த வழி" என்கிறார்.

"உள்ளூர் கட்சிக்காரர்களின் குரலைக் கேட்காமல், கூட்டணி பற்றிய தமது முடிவை காங்கிரஸ் மேலிடம் திணித்ததால்தான் த.மா.கா. உருவானது. ஆனால் த.மா.கா.- அ.தி.மு.கவோடு கூட்டணி அமைத்ததால் எல்லாமே அடிபட்டுப் போய்விட்டது" என்கிறார் அவர்.



"த.மா.காவிலிருந்து காங்கிரஸ் கட்சியில் சிலர் இணைவது பற்றி நாங்கள் பெரிய அளவில் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை" என்கிறார் மாநகராட்சி த.மா.கா. தலைவர் வெற்றிவேல். "நேரு குடும்பத்தின் மீது மிகுந்த பற்று கொண்டிருந்தவர் எங்கள் தலைவர் மூப்பனார். தேசிய அளவில் காங்கிரஸோடு இணக்கமாக இருக்க நாங்கள் விரும்புகிறோம். அதே சமயம் தமிழகத்தைப் பொறுத்தவரை த.மா.கா. தனித்து நின்று தன்னைப் பலப்படுத்திக் கொள்ளும். மாவட்ட மாநாடுகள், உறுப்பினர்கள் சேர்ப்பு என்று மிகவும் சீரியஸாக கட்சிப் பணிகளைத் துவக்க இருக்கிறோம். அவர்கள் இரண்டு பேரை இழுத்தால் நாங்கள் தமிழக காங்கிரஸைப் பலவீனப் படுத்த நான்குபேரை இழுப்போம் என்று அடித்துச் சொல்கிறார் வெற்றிவேல்.

த.மா.காவைப் பொறுத்தவரை மூன்று விதமான கருத்துக்கள் அந்தக் கட்சிப் பிரமுகர்களிடம் இருந்து வருகின்றன. 'காங்கிரஸோடு இணைந்து விடுவதுதான் சரி' என்று ஒரு தரப்பு; தனித்து இயங்குவது என்ற கோஷத்தோடு ஒரு தரப்பு. இந்த அபிப்ராயம் வைத்திருப்பவர்களைத்தான் 'சுயநல கோஷ்டி' என்று சொல்கிறார்கள். மூன்றாவதாக, அ.தி.மு.கவோடு தொடர்ந்து நல்லுறவு விரும்பும் பிரிவு. பா.ஜ.கவோடு அம்மா கூட்டணி அமைத்தாலும் தங்கள் உறவை அந்தக் கட்சியோடு நீட்டித்துக் கொள்ளலாம் என்ற கருத்தோடு இவர்கள் மூப்பனாரின் கொள்கையைக் குழி தோண்டிப் புதைப்பார்கள் என்கிறார்கள். "இப்போதைய நிலையில் தலைவர் வாசன் தமிழகம் முழுதும் கடுமையான சுற்றுப் பயணம் செய்து கட்சியை வளர்க்கப் போகிறார்" என்கிறார் வெற்றிவேல். உள்ளாட்சித் தேர்தலில் ஐந்து சதத்துக்கும் குறைவாகவே வோட்டுகள் பெற்றது த.மா.கா.

புதிய சூழ்நிலைக்கு ஏற்றபடி ஒரு சுறுசுறுப்புடன் செயல்படத் துவங்கியிருக்கிறார் இளங்கோவன். மாவட்ட மாநாடுகள், நடக்க இருக்கின்றன. "காங்கிரஸ் ஆல மரத்தில் இருந்து பறந்து சென்றவர்கள் மீண்டும் கட்சியில் இணைந்து சோனியா காந்தியின் கரத்தை வலுப்படுத்த வேண்டும்" என்கிறார் அவர். "வாழப்பாடி போன்ற தலைவர்களை வரவேற்கிறேன் அனால் அவர் காங்கிரஸ்காரராக வரவேண்டுமே தவிர, திராவிட இயக்கங்களின் ஜால்ராவாக இங்கு வரக்கூடாது" என்கிறார் இளங்கோவன்.

— ப்ரியன்



# தீபத்திற்கு எந்த எண்ணெய்விட்டால் என்ன பலன்




## எண்ணெய் பலன்

**நெய் :** தீபத்திற்கு நெய்விடுவது மிகச்சிறப்பு. சகலவித செல்வச் சுகத்தையும் வீட்டில் நலனையும் தருகின்றது.

**நல்ல எண்ணெய் :** நல்ல எண்ணெய் விட்டு ஏற்றுவதால் எல்லா பீடைகளும் விலகி விடுகிறது.

**விளக்கெண்ணெய் :** தேவதாசியம், புகழ்ஜீவன சீரகம், பந்து, சுகம், தாம்பத்திய சுகம் இவைகளை இது விருத்தி செய்கின்றது.

**கடலை எண்ணெய்:** இதில் தீபம் ஏற்றுவது மிகவும் தவறு. அந்த வீட்டில் நித்தியக் கடன், துக்கம், பயம், சோரநாசம், பீடை இவைகளே சேரும்.



## திரியின் வகைகள்

**பஞ்சு:** இதில் திரியிடுவது மிகவும் நல்லது.

**தாமரைத்தண்டு:** இதை திரித்து ஏற்றுவது முன்வினை பாவத்தை போக்கும். செல்வம் நிலைத்து நிற்கும்.

**வாழைத்தண்டு :** இதை நூல் பாகமாகப் பக்குவப்படுத்தித் திரியிட, குழந்தைச் செல்வம் உண்டாகும். தெய்வக்குற்றம், குடும்பச் சாபம் முதலியவை நீங்கி, சாந்தி உண்டாகும்.

**வெள்ளை எருக்கன் :** இதன் பட்டையைத் திரியாகச் செய்து தீபம் போட, பெருத்த செல்வம் தரும். பேய் பிடித்தவர்களுக்கு அதன் தொல்லை தீரும்.

**புது மஞ்சள் சேலைத்துண்டு :** இதிலிருந்து திரி செய்து ஏற்றினால் அம்மன் அருள் கிட்டி வியாதிகள் குணமாகும். காற்று சேஷ்டை நீங்கும்.

**சிகப்புகலர் சேலைத்துண்டு :** திருமணத் தடை, மலட்டுத்தன்மை, பைசாச செய்வினை, தோஷங்கள் விலகிவிடும்.

**புது வெள்ளை வஸ்திரம் :** இதில் பன்னீர் விட்டு காய வைத்து திரியாகப் பயன்படுத்த உத்தம பலனைக் காணலாம்.

## எண்ணெய் கலந்து விட்டு ஏற்றுவதால் ஏற்படும் பலன்

வேப்பெண்ணை, நெய், இலுப்பை எண்ணை மூன்றும் கலந்து தீபமிடுவதால் செல்வம் உண்டாகும். இது குலதெய்வத்திற்கும் உகந்தது.

நெய், விளக்கெண்ணை, வேப்பம் எண்ணை, இலுப்பை எண்ணை, தேங்காய் எண்ணை இந்த ஐந்தும் கலந்து ஏற்றி எவன் ஒருவன் ஒரு மண்டலம் (45 நாட்கள்) பூஜை செய்கிறானோ அவனுக்கு தேவியின் அருள், மந்திர சக்தி உண்டாகும்.



# தீபத்திற்கு எந்த எண்ணெய் விட்டால் என்ன பலன்



காலை 3 முதல் 5க்குள் தீபமேற்றுவது வீட்டில் சர்வ மங்கள யோகத்தை உண்டாக்கும்.

வேலை வேண்டுவோர், நல்ல கணவன் வேண்டுவோர் குடும்பசுகம், புத்திர சுகம் வேண்டுவோர், சாயங்கால வேளை தீபம் மகாலட்சுமியை வழிபட அப்பலன் அடையலாம்.

## இறைவனுக்கு உகந்த எண்ணெய்

| | |
|---|---|
| மகாலட்சுமி | - நெய் |
| நாராயணன் | - நல்லெண்ணை |
| கணபதி | - தேங்காய் எண்ணை |
| ருத்ராதி தேவதை | - இலுப்பை எண்ணை |
| தேவி | — ஐந்து வகை எண்ணைகளும் |
| சர்வ தேவதைகள் | — நல்லெண்ணை |





## முகம் ஏற்றுவதின் பலன்

| | |
|---|---|
| ஒரு முகம் ஏற்றுவது | : மத்திம பலன் |
| இரண்டு முகம் ஏற்றுவது | : குடும்ப ஒற்றுமையை பெருக்கும் |
| மூன்று முகம் ஏற்றுவது | : புத்திர சுகம் தரும் |
| நான்கு முகம் ஏற்றுவது | : பசு, பூமி இவற்றைத் தரும் |
| ஐந்து முகம் ஏற்றுவது | : செல்வத்தைப் பெருக்கும் |

மண்ணால் செய்யப்பட்ட அகல் அல்லது வெள்ளி பஞ்சலோகத்தால் செய்யப்பட்ட விளக்குகள் பூஜைக்கு மிகவும் உகந்தது.



பூஜை முடிந்தவுடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

கல்யாண வைபவங்களுக்கு: சீர்முறுக்கு, சீர்முள்ளுத் தேன்குழல், சீர் அதிரசம், தேன்குழல், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய் வகைகள் முதலியவை செய்து தரப்படும்.



**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24-2-வது மெயின் ரோடு,
காந்தி நகர் அடையாறு
சென்னை - 600 020
போன் : 4915662, 4914213

□ ஜி.எஸ்.எஸ்.

# ஆப்கான் துயரங்கள்!

காபுல் நகரில் ஆனந்தக் கூச்சல்கள். தாலிபன் படைகள் தோற்கடிக்கப்பட்டு விட்டன. அமெரிக்காவின் அமோக ஆதரவு பெற்ற வடக்குக் கூட்டணிப் படை வெற்றிகரமாக நகருக்குள் நுழைந்து விட்டது.

செப்டெம்பர் 11 அன்று வர்த்தகக் கோபுரங்களை அந்த விமானங்கள் தாக்கிய போது உலக நாடுகள் பதைபதைத்தன. ஆனால் சராசரி ஆப்கானியனுக்கு உயிரே பறிக்கப்பட்டது போலிருந்தது. இப்போது செத்துப் பிழைத்தவன் நிலை.

கந்தஹாரும் கைவசப்படும் நிலை. தாலிபனின் கோட்டை சரிகிறது என்பது பெரும்பான்மையான ஆப்கானியர்களுக்கு அற்புதச் செய்தி.

சரித்திரப் பக்கங்களை அதிகமாகக் கூடப் புரட்ட வேண்டாம். நடுவயதைத் தாண்டியுள்ள ஒரு ஆப்கானியனின் முகத்தைப் பார்த்தாலே அவன் முகத்தின் தென்படும் அழுத்தமான சோக ரேகைகளில் அதைப் படித்துவிடலாம். நம் நாட்டுப் பாட்டிகள் 'எங்க காலத்திலே ஃபேன் கிடையாது, டீ.வி. கிடையாது' என்று குழந்தைகளுக்குக் கூறி அவர்களை வியப்படைய வைப்பதுண்டு. ஆப்கானிஸ்தானில் இதற்கு நேரெதிர்! 'எங்க காலத்திலே மின்சாரம் உண்டு. டீ இன் ஒன் உண்டு' என்று கூறிக் குழந்தைகளை ஆச்சரியப்பட வைக்கலாம்.

'ஒரு ஊரிலே ஒரு டாக்டர் இருந்தாங்க. அவங்களுக்கு ஓவியம்னா உயிர்.'

'ஓவியம்னா?' என்று பேத்தி கேட்கும்



போது பாட்டிக்கு உடல் நடுங்குகிறது. தாலிபன் ஆட்சியில் ஓவியங்களுக்குத் தடை! ஓவியங்களை வரைய மட்டுமல்ல, ஓவியங்களை வீட்டில் மாட்டி வைக்கவும். மெல்லிய ரசனைகள் எல்லாமே அழிந்து போகட்டும் என்ற எண்ணத்தின் ஒரு துளிதான் இது.

ஓவியம் என்றால் என்ன என்பது குறித்து இலேசாக விளக்கிவிட்டு பாட்டி 'கதையைத்' தொடருகிறாள். 'அந்த டாக்டரம்மா ஒருநாள்...''

பேத்தி புத்திசாலி. இடைமறிக்கிறாள். 'என்ன பாட்டி, ஒரு பொண்ணு எப்படி டாக்டராக இருக்க முடியும்?'

இப்போது பாட்டியால் விளக்க முடியவில்லை. 'நானே டாக்டராகப் பணியாற்றியவள்தாம்மா' என்பதை எப்படிக் கூற? காபூலில் சிறுமிகளுக்கான பள்ளிக் கூடங்களெல்லாம் மூடப்பட்டுவிட்ட இன்றைய நிலையில் 'நீயும் நல்லாப் படிச்சா வருங் காலத்திலே...' என்பது போன்ற எந்த நம்பிக்கையைத் தன் பேத்திக்கு அவள் கொடுத்து விட முடியும்?

**பெண்கள் 'இது கனவா? நனவா?' என்று நம்ப முடியாமல் மலைத்துப் போயிருக்கிறார்கள். 'நிஜம்தான். பாரு நீ வீட்டுக்கு வெளியே வந்திருக்கே, பர்தா போட்டுக் கொன்னாமலேயே' என்று அந்தப் பெண்களின் உறவினர்கள் அவளுக்கு நம்பிக்கையூட்டுகிறார்கள்.**

'தெனாலி' திரைப்படத்தில் 'நின்றால் பயம், நடந்தால் பயம்'என்று கமல் தனது பயங்களை டாக்டர் ஜெயராமிடம் பட்டியலிடுவது ஒரு நகைச்சுவைக் காட்சி. ஆனால் ஆப்கன் மக்கள் இதைவிட அதிக பயங்களை அனுபவிக்கின்றனர். பயங்களுக்குக் காரணம் விதிக்கப்பட்ட தடைகள்.

டி.வி. பார்க்கக் கூடாது (செப்டெம்பர் 11 நிகழ்வைக் கூட 'கேள்விதான் பட்டனர்.) இசை கேட்கக் கூடாது. பெண்கள் வேலைக்குப் போகக் கூடாது. உச்சிமுதல் உள்ளங்கால் வரை எந்த உடல் பகுதியையும் வெளிப்படுத்தாத உடை அணிய வேண்டும். நெருங்கிய ஆண்துணை இல்லாமல் வெளியே போகக் கூடாது. அப்படிப் போனால் தாலிபன் ராணுவத்தினரின் கேவலமான பேச்சுக்களை எதிர்கொள்ள வேண்டும். சவுக்கடிகளை வாங்கத் தயாராக இருக்க வேண்டும்.



**'இனிமேல் மார்க்கெட்டுக்கு நாங்க ஜீன்ஸ் போட்டுக்கிட்டுப் போகலாமா?' என்று கேட்கிறான் ஒரு பதிமூன்று வயதுச் சிறுவன். 'போகலாம்' என்கிறார் தந்தை. 'மைதான தண்டனையெல்லாம் இடையாதில்லை?' என்று கேட்டு உறுதிப்படுத்திக் கொள்கிறான் சிறுவன்.**

இஸ்லாமிய நெறிகளைப் பின்பற்றுவதாகக் கூறிக் கொண்டு தாலிபன் ஆட்சியாளர்கள் நடத்திய அட்டகாசங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. வாரத்தின் குறிப்பிட்ட நாளில் பொது மைதானத்தில் தண்டனைகள் வழங்கப்படும்.

'என்ன இந்த ஆள் ஆங்கிலம் கற்றுக் கொடுக்கிறானா? அவன் நாக்கை

# ஓர் அமெரிக்கரின் எதிர்க் குரல்



**செ**ன்னை மியூசிக் அகடமி அரங்கம் நிரம்பி வழிந்தது என்றால் அது நூறு பர்செண்ட் உண்மை.

டிசம்பர் ஸீஸன் கச்சேரிக்குக் கூட இத்தனைக் கூட்டம் வந்திருக்குமா என்பது சந்தேகம்தான்.

இத்தனைக்கும், பேசியவர் 73 வயதுப் பெரியவர். அமெரிக்க எம்.ஐ.டி பேராசிரியர். அமெரிக்க சரித்திரத்திலேயே மிகத் துல்லியமான எதிர்க்குரல் எழுப்பியவர் என்று நியூ யார்க் டைம்ஸ் இதழ் இவரைப் புகழ்ந்திருக்கிறது. பேராசிரியர் நோம் சோம்ஸ்கி என்ற இந்த அதிசய மனிதரின் பேச்சைக் கேட்க உலகில் எல்லா இடங்களிலும் ஏராளமான விசிறிகள். சென்னை விதிவிலக்கு அல்ல என்பதையே அன்றைக்குக் கூடிய 'பயங்கரமான' கூட்டம் நிரூபித்தது.



• நோம் சோம்ஸ்கி

'செப்டம்பர் 11ம் அதற்குப் பிறகும் – உலகம் எங்கே போகிறது?' என்ற தலைப்பில் நோம் சோம்ஸ்கி பேசினார்: 'ஃப்ரண்ட்லைன்' இதழும், மீடியா டெவலப்மெண்ட் ஃபவுண்டேஷனும் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்தன.

## "அமெரிக்காதான் பயங்கரவாத நாடு"

அறுத்துவிடுங்கள்.'

'நீ முஸ்லீம் இல்லை. அப்படியிருக்க மஞ்சள் உடையைத்தானே அணிந்திருக்க வேண்டும்? ஏன் அணியவில்லை? வாங்கிக் கொள் நூறு கசையடிகளை.'

'சித்தப்பா மகனைப் பாம்பு கடித்தால் என்ன? அதற்காக இந்தப் பெண் அவனுக்கு முதலுதவி செய்து விஷத்தைக் கடிவாயிலிருந்து வெளியேற்றியது பெரிய தவறுதான். டாக்டராகவே அந்தப் பெண் இருந்தாலும் ஒரு ஆணுக்கு எப்படிச் சிகிச்சையளிக்கலாம்? அவளது இரண்டு விரல்களை இப்போதைக்கு அறுத்துவிடுங்கள்.'

'முஸ்லீமாக இருந்து கொண்டும் முஸ்லீம் அல்லாத ஒருவருக்குத் தன் வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்கு விட்டிருக்கிறானென்றால் அது எவ்வளவு பெரிய குற்றம்! இந்த இரண்டு குடும்பத் தலைவர்களும் எதற்கு இனி இருக்க வேண்டும்? தூக்கிலிடுங்கள் இவர்களை.'

கிட்டத்தட்ட இப்படித்தான் நீதிபரிபாலனம்! ஆப்கானிஸ்தானில் பெண்களில் பொது மருத்துவம் படித்தவர்கள்தான் உண்டு. ஸ்பெஷலிஸ்டுகள் இல்லை. இந்த நிலையில் ஆண் மருத்துவர்களும் பெண்களுக்குச் சிகிச்சை அளிக்கக் கூடாதென்றால்? அதாவது இதயத்தில் ஒரு பெண்மணிக்குச் சிக்கல் என்றால் கூட பொதுமருத்துவர்தான் அதைக் கவனிக்க முடியும். இதயநோய் நிபுணரின் சேவை அவளுக்குக் கிடைக்காது.

***'அம்மா நீ இனிமேல் என் கூடவே இருப்பியா?' என்று அந்தப் பதினான்கு வயதுச் சிறுமி கேட்க, அவளது விதவைத் தாய் 'நிச்சயமா' என்று அவளைக் கட்டிக் கொண்டு கண்ணீர் விடுகிறாள்.***

தாலிபன் ஆட்சியில் மிகவும் துயரமுற்றவர்கள் விதவைகள்தான். குழந்தைகளுக்குக் குறைவில்லாத குடும்பங்கள். அப்படி ஒரு குடும்பம்தான் சாயிராவுடையது. அவளது கணவன் திடீரென்று இறந்துவிட, வேலை செய்து சம்பாதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் சாயிராவுக்கு. படிக்காதவள் என்பதால் ஒரு அனாதைவிடுதியில் பணியாளாகச் சேர்ந்தாள் அந்த விதவைத்தாய். முழுக் குடும்பத்துக்கும் ஒருவேளை சோறும் ஓரளவு மகிழ்ச்சியும் கிடைத்தன. ஆனால் தாலிபன் ஆக்கிரமிப்புக்குப் பிறகு அதிலும் மண். பெண்கள் வேலைக்குப் போகக் கூடாதே! எனவே ரகசியமாகத் தன் பணியைத் தொடர்ந்தாள் சாயிரா. வேலை முடிந்து திரும்பும்போது தாலிபான் வீரர்களிடம் சிக்கிவிட்டால்? ரகசியம் வெளிப்பட்டுவிடுமே! எனவே வாரம் ஒரு முறை தன் வீட்டுக்குச் சென்று பதிமூன்று வயதான தன் மூத்த மகளிடம், இருக்கும்

கல்கி 25.11.2001

என்று எடுத்த எடுப்பிலே குற்றம் சாட்டினார் சோம்ஸ்கி.

''ஓசாமா பின் லாடனை ஒப்படையுங்கள்' என்று இப்போது அமெரிக்கா கேட்கிறது. தொண்ணூறுகளில் ஹைதி நாடு ஒரு குற்றவாளியைத் தன்னிடம் ஒப்படைக்கச் சொல்லிக் கேட்ட போது அமெரிக்கா அப்போது மட்டும் ஒப்படைத்ததா? இதுதான் சரியான இரட்டை வேடம்!

''பயங்கரவாதம் தீமையானதுதான். அதை ஒழித்துக் கட்ட வேண்டும் என்பது புனித எண்ணம்தான். ஆனால் பலவீனமான நாட்டின் மீது தாக்குதல் நடத்துவது நியாயமல்ல.

''தன்னுடைய ஆளுமையைப் பரவலாக்குவதை இந்தப் போரின்மூலம் அமெரிக்கா சாதிக்க நினைக்கிறது. இது உலகமயமாக்கல் கொள்கையை விரிவாக்க அமெரிக்காவுக்கு உதவும். இதனால் யாருக்குப் பயன்? அமெரிக்காவுக்கும், அதன் வர்த்தக நிறுவனங்களுக்கும், அதன் கூட்டணி நாடுகளான மேற்கத்திய நாடுகளுக்கும்தான்!

''பலவீனமான நாடுகளைத் தவிர, மற்ற நாடுகள் எல்லாமே பயங்கரவாத நாடுகள்தாம்!''

பீட்டர் அல்ஃபோன்ஸின் நீண்ட கேள்விக்கு, நறுக்கென்று, ''மிகப் பெரிய ஃபண்டமெண்டலிஸ்ட் நாடு அமெரிக்காதான்'' என்று ஒரு தாக்குத் தாக்கினார் சோம்ஸ்கி.

'டீகோ கார்ஸியா மாதிரி இடத்தில் அமெரிக்கக் கடற்படையை நிறுத்திக் கொள்ளலாம். அது அச்சுறுத்தல் இல்லை. அது மாதிரி இந்தியா போன்ற நாடு இன்னோர் இடத்தில் படையை நிறுத்தி வைத்துக் கொள்ள அமெரிக்கா அனுமதிக்குமா?' என்று ஒருவர் எழுப்பிய கேள்விக்கும் அமெரிக்க அரசைக் குறை கூறினார் சோம்ஸ்கி.

'இருநூறு ஆண்டுகளுக்கு முன் அமெரிக்கப் பூர்வ குடிகளான செவ்விந்தியர்களை விரட்டினோம். அதற்கான பலனை அனுபவிக்கிறோம்' என்று கிளின்டன் மனம் திறந்து பேசியிருக்கிறாரே?' என்று ஒரு பெண்மணி கூற, 'இப்போதாவது கிளின்டன் உண்மையை ஒப்புக் கொண்டாரே!'' என்றார் சோம்ஸ்கி, கிண்டலாக.

வியட்நாம் போரின்போதே, 67ல் அமெரிக்காவுக்கு எதிர்ப்புக்குரல் எழுப்பியவர் நோம் சோம்ஸ்கி. அவருடைய நாட்டுக்கு எதிராக இப்போதும் அவர் குரல் உயர்ந்தே கேட்கிறது!

**— சித்தார்த்**

படம்: **வெங்கடேஷ்**

---

பணத்தைக் கொடுத்துவிட்டு 'உன் தம்பி தங்கைகளைப் பொறுப்பாகப் பார்த்துக்க. அடுத்த வாரம் வரேன்' என்றபடி வழிந்த கண்ணீரைத் துடைத்தபடி இரவோடிரவாக நழுவ வேண்டிய கட்டாயம்.

***'ஏங்க, நம்ம அப்துலை ஸ்கூலுக்கு அனுப்பிட்டு இனிமே கவலைப்பட்டுக்கிட்டே இருக்க வேண்டாம் இல்ல' என்று ஆனந்தக் கண்ணீர் வடிக்கின்றாள் ஒரு இளம் தாய் தன் கணவரிடம்.***

பள்ளிக்குச் செல்லும் மாணவர்களுக்குக் கட்டாய ராணுவப் பயிற்சி மட்டுமல்ல, யுத்த களத்திலும் அவ்வப்போது இறக்குவார்கள்.

***சுற்றுமுற்றும் பார்க்கிறாள் அந்த இளம் பெண். எங்கோ அரிதாகத்தான் இளைஞர்கள் கண்ணில் தட்டுப்படுகிறார்கள். விழி நீரைச் சுண்டிவிட்டுக் கொள்கிறாள். காலம் கடந்துவிட்டதோ?***

எப்போதும் போர்மேகங்கள் சூழ்ந்துள்ள நாடு. பல இளைஞர்கள் யுத்த களத்தில் இறந்துவிட, நாட்டின் சராசரி ஆயுளே நாற்பதுக்கும் கீழே என்றாகிவிட்டது. எனவே பெண்களுக்குத் தகுந்த மாப்பிள்ளைகள் கிடைப்பதில்லை. சண்டே டெலிகிராப் இதழுக்கு ஒரு ஆப்கான் பெண்மணி எழுதியுள்ள கடிதம் மனத்தை உலுக்குகிறது. 'இப்போதைய சுதந்திரமில்லாத சூழலில் நான் திருமணம் செய்து கொள்வது இயலாதது. காதல் இல்லாத வாழ்க்கையாகத்தான் அது இருக்கும். அந்த அளவு பாதுகாப்பில்லாத நிலை இங்கே. தவிர ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்வதென்பது அதற்குச் செய்யக் கூடிய அநியாயம். அதுவே பெண் சிசுவாகவும் இருந்து விட்டால், நான் செய்வது மன்னிக்க முடியாத குற்றமாகவே ஆகிவிடும்' என்று குமுறி அழுதிருக்கிறாள் அவள்.

***'இனிமேல் நமக்குக் கவலையில்லை. தாலிபன் ஆட்சி போச்சு. நமக்கு நல்ல காலம்தான்' என்று உரத்துக் குரல் எழுப்புகிறார்கள் காபுல்வாசிகள்.***

சுற்றிலும் நாகங்களாலும், மலைப்பாம்புகளாலும் சூழப்பட்டிருக்கும் ஒருவன், ஒரே ஒரு நாகம் (அது ராஜநாகமாகவே இருக்கட்டும்) வேறிடத்திற்குச் சென்றுவிட்டால் மகிழ்ச்சி அடைவதைப் போன்றதுதான் இது. சீறும் நாகங்கள் மற்றும் நொறுக்கத் துடிக்கும் மலைப்பாம்புகள் எவை? அவற்றால் அவனுக்கு உண்டான மற்றும் உண்டாகக் கூடிய சோகங்கள் என்னென்ன?

(அடுத்த இதழில்)

# ஜெமினிக்கு டீச்சர்!

நடிகர் ஜெமினி கணேசனின் வாழ்க்கை வரலாறு 'வாழ்க்கைப் படகு' புத்தமாக வெளி வந்திருக்கிறது. இந்தப் புத்தகத்தைத் தொகுத் தவர் பத்திரிகையாளர் ஜெயஸ்ரீ விஸ்வநாத்.

"ஆயிரத்து தொள்ளாயிரத்து நாற்பதாம் வருடத்திலிருந்து, இன்று வரை விடாமல் டைரி எழுதிக் கொண்டு வருகிறார் நடிகர் ஜெமினி கணேசன். அது மட்டுமில்லை. அத்தனை டைரிகளையும் பத்திரமாகப் பாதுகாத்து வரு கிறார். இன்று, எண்பத்தியோரு வயதில், ஜெமினியின் வாழ்க்கை வரலாற்றை எழுது வதற்கு, அவை மிக உபயோகமாக இருந்தன." என்கிறார் ஜெயஸ்ரீவிஸ்வநாத்.

• புத்தக வெளியீட்டு விழாவில்

• ஜெயஸ்ரீ விஸ்வநாத்

"ஜெமினியின் மகள், டாக்டர் கமலா செல்வராஜ்தான் இதைப்பதிவு செய்து புத்தகமாகக் கொண்டு வர வேண்டும் என்று முனைப்புடன் இருந்து செயல்பட்டவர்.

"ஆரம்பத்தில், ஒரு மாணவன், டியூஷன் டீச்சரைப் பார்ப்பதுபோல என்னைப் பார்ப் பார் ஜெமினி. ஏதாவது ஒரு சாக்கு சொல்ல, இன்றைக்கு வேண்டாமே! நாளைக்குப் பார்க் கலாமா? என்று தட்டிக் கழிப்பார். ஆனால் நான் விடமாட்டேன்

அவருக்கே ஒரு ஆர்வம் ஏற்பட்டு, ஒத்துழைக்க ஆரம்பித்தார்.

"அவரது டைரிகளையே என்னிடம் எடுத்துக் கொடுத்து, படித்துப் பார்த்து, எழுதச் சொன்னார். சில மாதங்கள் தொடர்ந்து அவரது வீட்டுக்குச்சென்று வந்ததால், ஜெமினி என்கிற மனிதரின் பல புதிய பரிமாணங்கள் எனக்குத் தெரிய வந்தன. அவரது அபார சமஸ்கிருதப் புலமை, ஆங்கில இலக்கிய அறிவு, வேதங்கள், ஸ்லோகங்கள், இப்படி நிறைய...

"ஜெமினியுடன் மட்டுமின்றி, இந்தப் புத்தகத்துக்காக, அவரது மனைவி பாப்ஜி, ரேகா உட்பட அவரது மகள்கள், சாவித்திரியின் பிள்ளைகள், நண்பர்கள், திரையுலக சகாக்கள், டிரைவர் என்று பலருடனும் நான் பேசினேன்.

"பாப்ஜியைச் சந்தித்துப் பேசியபோது 'நான் சொல்லி மாளாது. அத்தனை சொல்லலாம்' என்று ஆரம்பித்து மணிக் கணக்கில் பேசியதை மறக்க முடி யாது. 'அவர் உங்களை விட்டு விட்டு, வேறு கல்யாணம் செய்து கொண்ட போதெல்லாம் உங்களுக்கு அவர் மீது கோபம் வரவில்லையா? டைவர்ஸ் பண்ணிடலாம்னு தோணவில்லையா?' என்று கேட்ட போது, "எனக்கு இவரைவிட்டால், வேறு யார் இருக்கா?" என்று குலுங்கி அழுதுவிட்டார். பாப்ஜி யைப் போன்ற அன்பும், பொறுமை யும் நிறைந்த மனைவி, ஜெமினிக்குக் கிடைத்தப் பொக்கிஷம் என்று புரிந்து கொண்டேன்.

"நடிகை ரேகா, ஒருமுறை சென்னை வந்தபோது, இந்தப் புத்தகத் துக்காக அவரைச் சந்தித்தேன். என்னதான் அப்பா - மகள் என்றாலும், அவர்கள் இருவருக்கும் இடையே ஒரு வித இடைவெளி இருப்பதை கனத்த மனத்துடன் அவர் குறிப்பிட்டார்.

"புத்தகத்தின் முதல் பிரதி ரெடியானவுடன் ஜெமினியிடம் கொடுத்தபோது, அதைப் புரட்டிப் பார்த்து, வாசனையை நுகர்ந்து, புத்தகத்தைத் தடவிக் கொடுத்து, ரொம்ப எமோஷனல் ஆகிவிட்டார்.

"புத்தகத்தை வெளியிட்டபோது, கலைஞர் கருணாநிதி, இந்தப் புத்தகத்தை இத்தனை அழகாக எழுதியுள்ள ஜெயஸ்ரீ விஸ்வநாத்தை நான் பார்க்க வேண்டுமே என்று சொல்ல, என்னை அறிமுகப்படுத்திக் கொண்டபோது, மனம் திறந்து பாராட்டியது, எனக்குக் கிடைத்த அரிய 'வெகுமதி'" என்கிறார் ஜெயஸ்ரீ விஸ்வநாத்.




2001 நவம்பர் 25
விஷு கார்த்திகை 10
மலர் : 60
இதழ் : 17


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## காபுல் வீழ்ந்தது; தலிபான் தொடர்கிறது!

ஆப்கானிஸ்தானில் அடைந்த வெற்றி, குதூகலத்துடன் கொண்டாடுவதற்கான வெற்றி அல்ல. எண்ணற்ற அப்பாவி மக்களின் உயிர்களை, உடைமைகளை, நல்வாழ்வை பலிகொண்டிருக்கிற கோர யுத்தம் அது. உயிரிழந்த தலிபான் வீரர்களின் சடலங்களைக்கூட ஆப்கான் மக்களே தாக்கி ஆத்திரத்தைக் தணித்துக் கொள்கிறார்கள்! இத்தகைய குரூர வெளிப்பாடுகளுக்கு இடங்கொடுத்திருக்கிறது இந்த யுத்தம். இவை மனித குலம் பெருமைப்படக்கூடிய நிகழ்வுகள் அல்ல.

தலிபானின் பிடியிலிருந்து ஆப்கானிஸ்தானை மீட்டுவிட்டதாக அமெரிக்காவோ வடக்குக் கூட்டணியோ மார்தட்டிக் கொள்ள முடியாது. ஆப்கான் தலைநகரான காபுல் கைப்பற்றப்பட்டு விட்டதால் மட்டுமே தாலிபானின் கொட்டம் அடங்கிவிடாது. அந்த பயங்கரவாத அமைப்பின் வேர்கள் உலகெங்கும் பரவி பின்னிக் கிடக்கின்றன. உலக நாடுகள் தலிபானின் பழிவாங்கும் படலத்துக்குத் தயாராக வேண்டும். பாதுகாப்பு ஏற்பாடுகளையும் உளவுப் பணிகளையும் முடுக்கிவிட்டு முன்னெப்போதைக் காட்டிலும் முன்னெச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

ஆப்கானிஸ்தானில் அமைய வேண்டிய புதிய அரசு குறித்து ஒவ்வொரு நாடும் ஒரு திட்டமோ கனவோ வைத்துள்ளது என்பதே இப்போது எல்லாவற்றையும் விட பெரிய அபாயமாக இருக்கிறது. தலிபானின் மிதவாதப் பிரிவினரை உள்ளடக்கிய அரசு ஒன்றை ஆப்கானிஸ்




தானில் நிறுவும்படி பாகிஸ்தான் வலியுறுத்தி வருகிறது. அதே மூச்சில், 'அரசமைக்கும் பணியை ஐ.நாவின் பொறுப்பில் விட்டுவிடுங்கள்' என்றும் கூறுகிறது.

இன்றையச் சூழலில், ஆப்கான் அரசு எப்படி அமைய வேண்டும் என்பது குறித்து பாகிஸ்தான் மட்டுமின்றி, அமெரிக்கா, பிரிட்டன், இதர நேச நாடுகள் யாவுமே தனித்தனியே திட்டங்கள் தீட்டி வைத்துள்ளன; அறிக்கைகள் விடுத்து வருகின்றன.

ஆப்கானிஸ்தான் விஷயங்களில் தலையிடாமல் ஒதுங்கியிருந்து, அந்நாட்டு மக்களே அரசமைத்துக் கொள்ள வழிவகுப்பதுதான் அறிவுடைமை என்று ஐ.நா. சபை செயலர் கோஃபி அனன் கூறியுள்ள வார்த்தைகள் அக்ஷர லட்சம் பெறும்!

தற்காலிக காபந்து அரசு ஒன்றை வடக்குக் கூட்டணி உதவியுடன் ஐ.நா. மேற்பார்வையில் நிறுவிய கையோடு, ஆப்கான் மக்களின் கருத்தை அறியவும், அவர்கள் விரும்புகிற ஆட்சியை அமைக்கவும் ஏற்பாடுகளைச் செய்வதே அறிவுடைமை.

## பஸ் பயணிகளுக்கு நரக வேதனை!

**எ**ண்பது சதவிகிதம் பேருந்துகள் ஓடின, தொண்ணூறு சதவிகிதம் போக்குவரத்து இருந்தது என்று தினமும் அரசு அறிக்கைகள் கூறினாலும் தமிழ்நாட்டின் பேருந்துப் பயணிகளுக்குக் கடந்த சில தினங்களாக நரகவேதனைதான். எந்த நிறுத்தத்தில் எந்த பேருந்து எப்போது வரும் என்று உறுதியாகக் கூற முடியாத அவஸ்தை. ஆட்டோ அல்லது ஆம்னியில் ஏறினால் பணத்தைக் கறந்து விடுகிறார்கள். அரசுக்குப் பல மனித மணி நேரங்களும் நூற்றுக் கணக்கான கோடி ரூபாய்களும் நஷ்டம்! நஷ்டமான தொகை, ஊழியர்கள் கேட்ட போனஸைக் காட்டிலும் மிகப் பல மடங்கு அதிகம்!

மின் வினியோகம், போக்குவரத்து போன்ற அத்தியாவசிய சேவை வழங்கும் துறையைச் சேர்ந்த ஊழியர்கள் இவ்வாறு வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவதால் பொதுமக்களின்

நன்மதிப்பையும் அனுதாபத்தையும் இழக்கிறார்கள். இத்துறைகளில் முளைவிடும் தொழிலாளர்ப் பிரச்னைகளை வளர விடாமல், மிகுந்த முதிர்ச்சியுடனும் விவேகத்துடனும் கையாள வேண்டிய பொறுப்பு அரசுக்கு இருக்கிறது.

'பணமில்லை; அதனால் போனஸ் குறைக்கப்படுகிறது' என்கிற வாதம் இதுவரை எந்த தொழிற்சங்கத்திடமும் எடுபட்டதில்லை. தனியார் துறையிலேயே லாப-நஷ்டங்களின் அடிப்படையில் போனஸைக் குறைப்பதைத் தொழிலாளர்கள் ஏற்கத் தயாராயில்லை. குறிப்பிட்ட அளவு போனஸுக்குப் பழக்கிவிட்டால் பிறகு குறைப்பது சாத்தியமில்லாது போகிறது. இந் நிலையில் அரசுத் துறையில் சென்ற ஆண்டைக் காட்டிலும் குறைவான போனஸுக்கு ஒப்புக் கொள்வார்கள் என்று அரசு எதிர்பார்ப்பது ஆச்சர்யம்.

தமிழக அரசு, போனஸ் விஷயத்தில் தவறான முடிவை எடுத்ததும் அல்லாமல், வேலை நிறுத்தம் என்று வந்த பிறகு அப்பிரச்னையைக் கையாண்ட முறையும் சரியல்ல. பெரும்பாலான ஊழியர்கள் தி.மு.க., கம்யூனிஸ்ட் சார்புடைய தொழிற்சங்கங்களைச் சார்ந்தவர்கள் என்பதால் பிரச்னை அரசியல் கண்ணோட்டத்துடன் அணுகப்பட்டிருக்கிறது. அ.தி.மு.க. யூனியனின் ஆதிக்கத்தை வலுப்படுத்தும் ஒரு சந்தர்ப்பமாக இந்த வேலை நிறுத்தத்தைக் காண்பது மிகவும் அபாயகரமானது.

அரசு போக்குவரத்துக் கழகங்களின் நஷ்டம் இரவோடு இரவாக லாபமாகிவிடாது. பல ஆண்டுகளின் நிர்வாகச் சீர்கேடுகளைக் குறுகிய காலத்தில் சீர்செய்துவிட முடியாது. நஷ்டத்தைக் குறைக்கவும் லாபம் காணவும் உரிய நடவடிக்கைகளும் சீர்திருத்தங்களும் மேற்கொள்ளப்பட வேண்டும். பேருந்துகள் பராமரிப்பு, சாலைகள் பராமரிப்பு, விதிகள் கடைப்பிடித்தல், ஓட்டுனர்கள், நடத்துனர்களின் தரம் என்று பல விஷயங்கள் நேர் செய்யப்பட வேண்டும். இவற்றைச் செய்யாது போனால், அடுத்த ஆண்டு நஷ்டம் தொடரும்; பெருகும். அப்போது ஆளுங்கட்சி ஊழியர்கள் அடங்கிய தொழிற்சங்கமே வளர்த்த கடாவாக மார்பில் பாயும்! ○

# IN GOKULAM THIS MONTH

## GOKULAM ANSWERS...


WHICH IS THE LARGEST AND MOST POWERFUL CHURCH IN THE WORLD?

**CHRISTMAS SPECIAL -**


WHAT IS THE DIFFERENCE BETWEEN THE VIOLIN AND THE VIOLA?

**AN INSIGHT INTO CARNATIC MUSIC -**


WHICH INSECT DANCES TO COMMUNICATE?

**IN THE WILD -**


WHERE DID PIZZAS FIRST ORIGINATE?

**COVER STORY -**



**LOST IN A FORT**



**HUMOUR CONTEST**

[redacted]



வரைப் பார்த்தால் ஹாலிவுட்டிலிருந்துப் புறப்பட்டு வந்தவர் மாதிரிதான் இருக்கிறது. மும்பையிலிருந்து நடிகைகளை இறக்குமதி செய்வதுமாதிரி ஹாலிவுட்டிலிருந்து அப்பாக்களை இறக்குமதி செய்கிறதா கோடம்பாக்கம்? என்ற சந்தேகத்துடன் அந்த அப்பா நடிகரிடம் பேசினால்... அட நம்மூர் பார்ட்டி!

விஜயகுமாரையும், வினுசக்கரவர்த்தியையும் அப்பாவாகப் பார்த்துப் பார்த்துச் சளித்துப் போன தமிழ் ரசிகர்களுக்கு 'ஹைடெக்' அப்பாவாக காட்சியளிக்கும் லக்ஷ்மிரத்தன்தான் அவர்!

"சென்னைதான் நான் பிறந்தது வளர்ந்தது எல்லாம். என்னோட இருபத்தி மூன்றாவது வயசுல ஒரு பெரிய சினிமா தயாரிப்பாளர் வீட்ல வந்து, 'பையன் ரொம்ப அழகா இருக்கான்; நடிக்க அனுமதி கொடுங்க, ஹீரோவா ஆக்கிடறேன்'னு சொன்னார். எனக்குள்ள மலை மலையாய் ஆசை. ஆனா அப்பா மறந்துட்டாங்க. அந்தக் காலத்துல சினிமா பத்தி இவ்வளவு விழிப்புணர்வு இல்ல. அப்புறம் மார்க்கெட்டிங் பீல்டுல இறங்கி, இந்தியா மட்டுமில்லாம, பதினேழு வெளிநாடுகள்ல காலம் தள்ளினேன். நாற்பத்தேழு தேசங்கள் சுத்தினேன். வீட்டுக்கு நான் ஒரே பையன். கடைசி காலத்துல

# கமல் ரஜினிக்கு அடுத்து...!

யாவது குடும்பத்தோட இருக்கலாம்னு சென்னைக்கு வந்தேன். இடையில மபத்லால், வில்ஸ் சிகரெட், பெங்கால் கெமிக்கல்ஸ், டைட்டான் போன்ற விளம்பர படங்கள்ல நடிச்சு நடிப்பு ஆசையைத் தீர்த்துகிட்டேன். இதுக்குப் பிறகுதான் நிறைய பேர் தமிழ்ல நடிக்க கூப்பிட்டாங்க. 'தாயகம்'தான் என் முதல் படம்.

இப்ப தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தின்னு பிஸியாயிட்டேன்.

"எல்லாமே அப்பா வேடம்தான்னு இல்லை. சில டைரக்டர்ஸ் உங்க முகத்துக்கு இந்த ரோல்தான் நல்லாயிருக்குன்னு சொல்றாங்க. காமெடி ரோல் கூட பண்ணி யிருக்கேன். வித்தியாசமான கேரக்டர்களை எதிர்பார்க்கிறேன். ஆனால், எனக்குன்னு ஒரு மரியாதை இருக்கு. வரையறை இருக்கு. எல்லை வச்சிருக்கேன். அதுக்குள்ளதான் நடிக்க விரும்பறேன். எல்லைகளும் கட்டுப்பாடுகளும்தானே ஒரு மனுஷனைப் பக்குவப்படுத்துது. அதை நான் ரொம்ப கடுமையா எதிர்பார்க்கிறேன்.

"இருபத்தி மூணு வயசுல என்னைச் சினிமாவுக்கு நடிக்க அழைத்த அதே தயாரிப்பாளரைச் சமீபத்தில சந்திச்சேன். அவருக்கு என்னை அடையாளம் தெரியலை. அப்புறமா விஷயத்தைச் சொன்னதும், என்னைக் கட்டித் தழுவிக்கிட்டார். பிறகு, "அப்ப நான் கூப்பிட்டபோது சினிமாவுக்கு வந்திருந்தீங்கன்னா இன்னைக்குக் கமல், ரஜினிக்கு அடுத்தபடியா நீங்க இருந்திருப்பீங்கன்னு' சொன்னார்.

"எனக்கு உள்ளுக்குள்ள பூக்கள் பூத்த சந்தோஷம். கூடவே சந்தேகம். அப்படி யெல்லாம் ஆகியிருப்பேனா என்னங்கற மாதிரி. 'எது நடக்கிறதோ அது நன்றாகவே நடக்கிறது'ன்னு கீதை சொல்றது போல எல்லாமே நல்லதுக்குத்தான்னு எடுத்துக்கறேன்.

"ஐம்பத்தைந்து வயசு ஆகிப் போச்சு. இது எனக்கு இரண்டாவது இன்னிங்க்ஸ். சினிமால நிறைய சாதிக்கணுங்கற மாதிரியெல்லாம் இல்லை. ரோட்டுல, ஹோட்டல்ல எங்கயாவது நின்னு யார்ட்டயாவது பேசிட்டு இருக்கும்போது, "ஹலோ ரத்தன்ஜி அந்தப்படத்துல நல்லா பண்ணிருந்தீங்க"ன்னு ரசிகர்கள் கைகொடுக் கும்போது மகிழ்ச்சியா இருக்கு.

"இதுக்கு முன்னால ஒரே அலுவலகம். ஒரே சேர். ஒரே ரூம். இப்ப அப்படி யில்லை. தினமும் ஏதாவது ஒரு மரத்தடியில, வீட்டுக்குள்ள... பங்களாக்குள் ளன்னு ஓடிட்டிருக்கு. ஆபிஸ்ல வேலை பார்க்கும்போது ஒரு பாஸ். இங்க வெவ்வேற பாஸ்கள். கொஞ்சம் உட்கார்ந்து மனசை குடைஞ்சா, சினிமா எப்படியான பவர்புல் மீடியா; அதை இன்னும் நல்லா பயன்படுத்தலா மேன்னு தோணும். எனக்குத் தெரியற இந்த விஷயம் என்னை இயக்குகிற இயக்குனர்களுக்குத் தெரியாதா?'ன்னும் கூடவே ஒரு கேள்வி எழும். விட்ருவேன்."



" பதினைந்து வருஷமா இந்த ஆபீஸ்ல குப்பை கொட்டி இருக்கேன்..."

"பதினைந்து வருஷத்துல ஒருநாள் கூட யாரும், ஆபீஸ்ல குப்பை கொட்டக்கூடாதுனு சொல்லலையா?"

— சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

"நான், கோல்கத்தாவுல இருந்தபோது சிறந்த கிரிக்கெட் ப்ளேயர். முன்னாள் இந்திய அணி கேப்டன் பட்டோடி, திலிப் தோஷி மாதிரியான பெரிய தலைகள் எல்லாம் என் கூட ஆடியிருக்காங்க. இது தவிர, கஜல் பாடுவேன். டிவிலயெல்லாம் பாடியிருக்கேன். பெயிண்டிங் பண்ணுவேன். எந்த நேரத்துல எது போரடிக்குதோ அப்ப இன்னொன்றைச் செய்வேன்.

"தாடிதான் என்னை அடையாளப்படுத்தற விஷயம்னு எல்லாரும் சொல் றாங்க. அதனாலயே தாடியை எடுத்துட்டேன்.

— ஏக்ஜி

படங்கள்: ஆல்பர்ட் பால்

# “ஹாலிவுட் நமக்குப்

கேமரா கவிஞர், ஒளி ஓவியர் என்றெல்லாம் பட்டம் தருகிற அளவிற்கு ஒளிப்பதிவுக் கலையின் முக்கியத்துவம் உணர்ந்திருக்கிறது தமிழ் சினிமா. பாலுமகேந்திராவுக்குப் பிறகு சினிமாட்டோகிராபியில் புதிய அலையை ஏற்படுத்திய பி.சி.ஸ்ரீராமின் வரிசையில் வந்திருக்கிறார் அர்ஜுன் ஜனா. கனவில் காண்பதைக் காட்சிகளில் மொழி பெயர்க்கும் கதிரின் இயக்கத்தில் உருவாகிவரும் 'காதல் வைரஸ்' படப்பிடிப்பில் இவரைச் சந்தித்தோம். தடங்கல் இல்லாமல் தமிழ் பேசும் இந்த ஒரிஸ்ஸா இளைஞர், கோடம்பாக்கத்திற்குக் குடிபெயர்ந்த தன் கதையோடு ஆரம்பித்தார்.

“பத்தாம் வகுப்பு படிக்கிறபோது, தூர்தர்ஷனில் போடப்படும் சத்யஜித்ரே, கட்டாக், பெனகல் படங்கள் எனக்குள் பெரிய கலவரத்தை உண்டு பண்ணின. ஒரு தரமான சினிமா இயக்குனராக வேண்டும் என்ற லட்சியம் தோற்றிக் கொண்டது. இயக்குனராக வேண்டும் என்றால் சினிமாத் துறையில் எந்த பிரிவில் சேர்ந்தால் நாம் அதிகம் கற்றுக் கொள்ள முடியும் என்று யோசித்தபோது நூலகத்தில் சினிமா ஒளிப்பதிவு குறித்து நான் படித்த ஒரு புத்தகம் எனக்கு வழி காட்டியது. ஒளிப்பதிவாளர் என்பவர் ஓர் இயக்குனராகவும், கதை அறிவு உள்ளவராகவும் இருந்தால்தான் இயக்குனரோடு இணைந்து பணியாற்ற முடியும் என்று அறிவுறுத்தியது. கல்லூரிக்குச் சென்று ஒளிப்பதிவு படித்தால், உதவும் என்பதற்காகவே ப்ளஸ்டூவில் அறிவியல் படித்தேன். அப்போதே போட்டோகிராபி தொடர்பான புத்தகங்களைப் படிப்பது, பன்னாட்டுத் திரைப்படங்களைப் பார்ப்பது என்று கிட்டத்தட்ட ஒரு 'செல்லுலாய்டு அடிக்ட்' போல சுற்றிக் கொண்டிருப்பேன்.

“பன்னிரண்டாம் வகுப்பு முடித்த பிறகு பூனாவில் திரைப்படக் கல்லூரியில் சேர முயன்றேன். அங்கே பட்டப்படிப்புதான் அடிப்படை தகுதி என்றார்கள். எனக்கு அதுவரை பொறுமையில்லை. நேரே சென்னை திரைப்படக் கல்லூரிக்கு வந்து விண்ணப்பித்துக் காத்திருந்தேன். எனக்கு அட்மிஷன் உறுதி என்றும் கல்லூரி முதல்வர் சொல்லிவிட்டார். அந்த நேரத்தில் திரைப்படக் கல்லூரிக்கு வந்து எனக்கு நல்ல உதவியாளர் வேண்டுமே என்று தேடியிருக்கிறார் பி.சி.ஸ்ரீராம். அவரது கண்களில், எனது போர்ட்போலியோ சிக்க, படிப்பில் சேரும் முன்பாகவே என்னை அழைத்து, உதவியாளராகச் சேர்த்துக் கொண்டார்.

பல பேர் அவரிடம் சேர தவமிருக்கும்போது, கூரையைப் பிய்த்துக் கொண்டு புதையல் கொட்டிய மாதிரி எனக்கு அதிர்ஷ்டம். அவரிடம் நான் கற்றுக் கொண்டது, நல்ல நிர்வாகம், எதற்காகவும் சமரசம் செய்து கொள்ளாத தரம். அடுத்து ஒளிப்பதிவாளர் ஜீவாவிடமிருந்து, பொறுமை, தன்னம்பிக்கை,

* அர்ஜுன் ஜனா



* அர்ஜுன் கிளிக்கிய சுவிஸ் சிறுவர்கள்

அர்ப்பணிப்பு இப்படி நிறைய." என்றவரிடம் "கதிரிடம் எப்படி வாய்ப்பு கிடைத்தது" என்றோம். "எனது குரு பி.சி.ஸ்ரீராமே என்னைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்." என்று தொடரப் போனவரை, ஒளிப்பதிவு தொடர்பான கேள்விகளுக்கு இழுத்து வந்தோம்.

''பெரும்பாலான தமிழ்ப் படங்களில் ஒளி அமைப்பு என்பது படம் முழுக்க ஒரே வெளிச்சமாக இருக்கிறதே என்ன காரணம்?" என்றால், ''இங்கே பட்ஜெட் ஒரு முக்கிய காரணம். அதே நேரம் இலக்கணத்தை உடைத்து புது மாதிரியாக முயல வேண்டும் என்ற முயற்சிகள் குறைவு. எதற்கு ரிஸ்க் என்று இருந்து விடுகிறார்கள். இதனால்தான் உட்புறம், வெளிப்புறம் என்று எங்கே எடுத்தாலும் வெளிச்சமாக இருந்தால்போதும் என்ற மனநிலையோடு நிறைய படங்களின் ஒளிப்பதிவு இருக்கிறது. தரமான ஒளிப்பதிவுடன் வெளிவரும் படங்களின் எண்ணிக்கை குறைவு என்பதால்தான் இந்தக் குறை தெரிகிறது." என்கிறார்.

• இஷா



# "போட்டியல்ல!"

## அர்ஜுன் ஜனா

தரமான ஒளிப்பதிவு என்று எதை வைத்து எடை போடுவதாம்? அர்ஜுன் ஜனா சொல்வதைக் கேளுங்கள்.

"கதையின் மையக் கருவைப் பிரதிபலிக்கிறமாதிரி, படம் நெடுகிலும் ஒரு குறிப்பிட்ட 'டோனை'க் கொண்டு வருவது இப்போதெல்லாம் முக்கியமாகிவிட்டது. அடுத்து காட்சியின் மனநிலையைப் பிரதிபலிக்கும் விதமாக ஒளியமைப்பு இருக்க வேண்டும். உதாரணத்திற்குச் சொல்வதென்றால், கோயில் என்றால் அதற்கொரு ஒளி அமைப்பு, உணவு விடுதி என்றால் அதற்கென்று, என ஒவ்வொரு இடத்திற்கும் ஒரு ஒளி அமைப்பு இருக்கிறது. இதில் ஒழுங்காக கவனம் செலுத்தினாலே, ரசிகனுக்கு அந்த இடத்தில் இருக்கிற மாதிரியான ஓர் உணர்வை உண்டு பண்ணிவிட முடியும். இந்த ஒளி அமைப்பு மூலம்தான் ஒருவர் 'தனித்துவம்' மிக்கவர் என்று அடையாளம் காட்ட முடியும்." என்றவரிடம், "ஹாலிவுட்டிற்கு இணையாக இங்கே பானாவிஷன் கேமராக்களைப் பயன்படுத்துவது இன்னும் கனவாகத்தானே இருக்கிறது?" என்றோம்.

"அதுபோன்ற விலை உயர்ந்த கேமராக்களை ஹாலிவுட்டிலேயே வாடகைக்கு எடுத்துதான் பயன்படுத்துகிறார்கள். அத்தனை விலை. ஆனால் பானாவிஷனில் கிடைக்கிற அதே தரத்தை இங்கே நாம் பயன்படுத்தும் ஏரிப்ளெக்ஸ் கேமரா மூலமே சாதித்திருக்கிறோம். அதேபோல டிஜிட்டல் லென்சுகள், இதர ஒளிப்பதிவு சாதனங்கள் யாவும் ஹாலிவுட்டிற்கு இணையாக இங்கேயும் பயன்படுத்த தொடங்கி விட்டோம்'' என்றவரை இடைமறித்து, "இத்தனை தொழில் நுட்பம் வந்தாலும், ஆங்கிலப் படங்களுக்கு இணையாக ஏரியல் ஷாட்டுகள், வானின் வழியே பின் தொடரும் ஷாட்டுகள் போன்றவை மிக நீண்டு வெளியேறும் (ஜூம் அவுட்) ஷாட்டுகள் எல்லாம் நமக்குச் சாத்தியம் இல்லையா?"

"ஹாலிவுட்டில் சினிமா புரொபொஷனலாக இருக்கிறது. இப்போதுதான் நாம் புரொபொஷனல் ஆக முடியுமா என்று முயற்சி செய்து வருகிறோம். ஆனாலும் ஹாலிவுட் நமக்குப் போட்டியல்ல. அது ஒரு உலகம். நமது சினிமா வேறு. அகிலா கிரேன், விமானம் போன்றவற்றின்மூலம் இதுபோன்ற கோணங்களைப் படம் பிடிக்க நாமும் தொடங்கிவிட்டோம்'' என்று நம்பிக்கையோடு சொல்கிறார் அர்ஜுன் ஜனா.

"முதலில் ஒரு தரமான ஒளிப்பதிவாளர் என்று நிரூபிக்க வேண்டும். அடுத்து இயக்கத்தில் சாதிக்க வேண்டும்'' என்று சொல்லும் இவர் நவீன ஓரியக் கவிதைகளையும் எழுதி வருகிறார்.

சந்திப்பு : **விஷ்ணுவல்தாசன்**
படங்கள் : **ஆல்பர்ட் பால்**



## ஒரே வாத்யார்; ஒரே மாணவன்!

மேற்கு ஜெர்மனியில் உள்ளது குரோட் என்னும் தீவு. இந்தத் தீவின் மொத்த மக்கட் தொகை வெறும் 14 பேர்தான்.

இவர்கள் வசிக்கும் வீடுகள் அனைத்தும் மண்ணால் கட்டப்பட்டவை. இந்தத் தீவைச் சேர்ந்தவர் கிரிஸ்டியன் பிலிக். இவர் ஏழு ஆண்டுகளுக்கு முன் குரோட் தீவில் குடியேறினார். இவருக்கு ஆசிரியராக வேலை பார்க்க வேண்டும் என்பது நீண்ட நாள் ஆசை. அதனால் குரோட் தீவில் ஒரு பள்ளியை ஆரம்பித்தார். அதில் படித்து வரும் மாணவன் கெரிட் மாம்சன் என்ற ஆறு வயதுச் சிறுவன்.

இந்தப் பள்ளியில் ஆசிரியருக்கு அட்டெண்டன்ஸ் எடுக்க வேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால் இருப்பது ஒரு மாணவன்தானே!

மாணவனோ, ஆசிரியரோ யாராவது ஒருவர் லீவ் போட்டாலும் அன்று பள்ளிக்கு விடுமுறைதான்!

– ஆர். ஆர். பூபதி, திண்டுக்கல்.

உலகிலேயே தென்னாப்பிரிக்க நாடு ஒன்றுதான் மூன்று தலை நகரங்களைக் கொண்டுள்ளது. பிரிடோரியா நிர்வாகத் தலைநகராகவும், பொலோயம் பொண்டேன் நீதித்துறை தலைநகராகவும், கேப்டவுன் சட்டசபைத் தலைநகராகவும் இருந்து வருகின்றன.

– கடற்கரை நடேசன், சின்னமனூர்.

## கடவுளைத் தேடி...

ஒரு மனிதன் கடவுளை வேண்டினான்.
"கடவுளே, என்னுடன் பேசு"
அருகில் ஒரு குயில் கூவியது.
ஆனால் அவன் அதைக் கேட்கவில்லை.
அவன் மீண்டும் இறைஞ்சினான்.
"கடவுளே, என்னுடன் பேசு"




தாங்கள் வாழ்ந்த காலத்திலேயே தங்களின் உருவப்படத்தை தபால் தலைகளில் கண்ட இந்திய மேதைகள் டாக்டர் இராஜேந்திர பிரசாத், டாக்டர் விசுவேசரையா, டாக்டர் கார்வே, வி.வி. கிரி மற்றும் அன்னை தெரசா.

– டி.எஸ்.கே. ராயன், மயிலாடுதுறை.



வானத்தில் இடி இடித்து மின்னல் மின்னியது; ஆனால் அவன் அதைச் செவி மடுக்கவில்லை. சுற்றிலும் பார்த்த மனிதன் மீண்டும் கெஞ்சினான்.

''கடவுளே, நான் உன்னைப் பார்க்க வேண்டும்'' - வானில் ஒரு அழகிய நட்சத்திரம் தோன்றியது.

ஆனால் அவன் அதைப் பார்க்கவில்லை.

மீண்டும் மனிதன் கூவினான். ''கடவுளே, எனக்கு ஒரு அற்புதத்தைக் காட்டு'' அருகில் ஓர் உயிர் பிறந்தது.

அவன் அதையும் கவனிக்கவில்லை; தாங்கொணாத் துயரத்துடன் அவன் கதறினான்.

''கடவுளே, என்னைத் தொடு. நீ என் அருகில் இருப்பது எனக்குத் தெரிய வேண்டும்''

கடவுள் கீழிறங்கி வந்து அவனை மெல்லத் தொட்டார். ஆனால் அவன் அந்த பட்டாம்பூச்சியைத் தட்டிவிட்டபடி நடந்தான்.

- சுமித்ரா கல்யாணராமன்.



## 'சிலை ஆச்சரியம்!'

திருத்துறைப் பூண்டியிலிருந்து வேதாரண்யம் செல்லும் வழியில் அமைந்திருக்கிறது 'கலி தீர்த்த ஐயனார்' திருக்கோயில். கோயிலுக்குள் நுழைந்தால் நீங்கள் ஆச்சர்யத்தில் மூழ்கிப் போவீர்கள். காரணம், கோயிலைச் சுற்றிலும், ஆயிரக்கணக்கில் மனித உருவச் சிலைகள் உள்ளன. ஒவ்வொரு சிலைக்குக் கீழேயும் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளது. இது குறித்து கோயில் பூசாரியிடம் கேட்டதற்கு, 'ரொம்பவும் சக்தி வாய்ந்த ஐயனார் இவரு! இங்க வர்றவங்க தனக்குத் தானே சிலை வைக்கிறதா வேண்டிக்கிட்டா, கண்டிப்பா எந்த வகையான வேண்டுதலாயிருந்தாலும் நிறைவேறிடும். அப்படிப்பட்டவங்க சிலைதான் இங்க இருக்கறது. தினமும் யாராவது வந்து சிலை வைச்சுக்கிட்டே யிருக்காங்க. அதனால கொஞ்ச நாளைக்கு முன்னால ஐந்நூறு சிலையை உடைச்சுட்டோம்' என்றார் அவர்! என்னால் ஆச்சரியத்தில் இருந்து மீளமுடியவில்லை.

- சந்திர. நதி, ஈரோடு-2.

### புகழ் பெற்றவர்!

புகழ் பெற்ற கவிஞரான இக்பால், சிறுவனாக இருந்த போது ஒருசமயம் வகுப்பறைக்கு மிகத் தாமதமாக வந்தார். அவரது வகுப்பு ஆசிரியர் அவரைப் பார்த்து, "ஏன் இவ்வளவு காலதாமதம்?" என்று கேட்டு அதட்டினார். இக்பால் சிரித்துக்கொண்டே "இக்பால் எப்போதுமே காலதாமதமாகத்தான் வருவது வழக்கம்" என்று பளிச் சென்று பதில் கூறிவிட்டு தம் இருக்கையில் அமர்ந்தார். இக்பால் என்றால் புகழ் என்று பொருள்.

தகவல்: கீதா

ஜப்பானிய குடும்பங்களில் இளைஞர்கள் புகைபிடிப்பதை பேஷனாகக் கருதுகிறார்கள். இளைஞர்களில் பாதி பேர்... புகை பிடிக்கிறார்கள். பெண்களிலும் 14 சதவிகிதத்தினர் புகை பிடிக்கின்றனர். இவர்களுக்கு ஓர் உண்மை தெரியாது. வருடா வருடம் ஒரு லட்சம் பேர், புகை பிடிப்பதனால் இறக்கின்றனர். இதை எடுத்துச் சொல்லி, புகை பிடிப்பதைத் தடுக்க அங்கு சேவை நிறுவனங்களும் இல்லை. அரசியல் தலைவர்களும் இல்லை.

- இரா. திலிப், திருச்சி - 14.



# உடன்கட்டை



புறம்போக்கில் பிணம் விழுந்து கிடந்தது அப்படியொன்றும் ஆச்சரியமான விஷயமில்லை. ஏனென்றால் அந்த ஊரில் இருந்தவர்களில் பெரும்பாலோர் வயதானவர்கள்தான். இளவட்டங்கள் படிப்பு, உத்தியோகம் என்பதாக வெவ்வேறு திசைகளில் சிதறிப் போயிருந்தார்கள். எஞ்சியவர்களில் நடு வயதுக்காரர்கள் நஞ்சை புஞ்சைகளில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள். முதியவர்கள் எப்படியோ உயிரைக் கையில் பிடித்தபடி நாட்களைத் தள்ளிக் கொண்டும், நடுநடுவே பழுத்த இலைகளாக உதிர்ந்து கொண்டுமிருந்தார்கள்.

இப்படி இருக்க, உதடப்பன் செத்துவிட்டான் என்பதை யாரும் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை.

முந்தின நாள் பக்கத்து ஊர் ஹெப்பளகெரெ போயிருந்தவன் இரவு வீட்டிற்கு வரவில்லையாம். விடியற்காலை ஒபளேசப்பா குளக்கரைப் பக்கம் குவளைச் செம்புடன் போனபோது, சகதியில் மேலெழுந்து தெரிந்த இரண்டு கால்களைப் பார்த்துப் பதறிப் போய் ஓடி வந்திருக்கிறார். அதற்குப் பிறகு நன்றாக வெளிச்சம் பரவியதும் அவர் நான்கைந்து பேரைச் சேர்த்துக் கொண்டு குளக்கரைப் பக்கம் போனபோது வெட்டவெளியில் பாதங்கள் தெரிந்தன. உன்னிப்பாகப் பார்த்தபோது இரண்டு கால்களும் துலாம்பரமாகத் தெரிந்தன.

ஒரு காலில் செருப்பு இருந்தது. அந்த அடையாளத்தைப் பார்த்துத்தான் அவன் உதடப்பன் என்பதாக ரங்கப்பா அடையாளம் கண்டுபிடித்தார்.

சகதியில் முழுவதுமாக முழுகிப் போயிருந்த முகம், உடம்பு ஆக எல்லாவற்றையும் கழுவினார்கள். விறைத்துப் போயிருந்த பிணத்தைத் தூக்கிக் கொண்டு வந்து அவனுடைய வீட்டுத் திண்ணையில் கிடத்தினார்கள். வீட்டிலிருந்த மூன்று பேருமே பெண்கள். மனைவி, பாட்டி, விதவையாகி விட்டிருந்த அக்கா. மூவரும் திண்ணை மீது பிணத்தின் பக்கம் உட்கார்ந்தபடி 'ஓ'வென்று அழத் தொடங்கினார்கள். பிணத்தைப் பார்க்க வந்தவர்கள் தங்களுக்குத் தோன்றிய வகைகளிலெல்லாம் அவனுடைய சாவுக்கான காரணங்களை ஊகித்துப் பேசத் தொடங்கினார்கள்.

ஆளுக்கொரு பேச்சு பேசிக் கொண்டிருந்தார்களே தவிர பிணத்திற்கு ஈமச்சடங்கு செய்வதைப் பற்றி எவரும் பேச்செடுக்கவில்லை. உதடப்பனின் வீட்டைச் சேர்ந்த மூன்று பெண்களும் அடுத்து என்ன செய்வதென்று தோன்றாமல் இருந்தார்கள். இதுவரை உயிருடனிருந்தும் தங்களுக்கு எந்தவகையிலும் உதவாதிருந்தபோதிலும், ஏதோ ஒரு வகையில் சுமைதாங்கியாக இருந்தவனின் சாவுக்குப் புலம்பியவாறு, அடுத்து தங்களுடைய கதி என்னவென்று

பிலாக்கணமிட்டு அழுது கொண்டிருந்தார்கள்.

உதடப்பனின் விஷயத்தில் ஊரார் உதாசீனம் காட்டியதற்குக் காரணம் இருந்தது. அவன் கண்டவர்களிடமிருந்தெல்லாம் கடன் வாங்குவான். வாங்குவானே தவிர திருப்பிக் கொடுப்பதில்லை. மிகவும் வற்புறுத்திக் கேட்டால் இன்னொருவரிடமிருந்து புதிதாகக் கடன் வாங்கிப் பழைய கடனின் ஒரு பகுதியை அடைப்பான். எஞ்சிய பணத்தில் தன்னுடைய களியாட்டங்களை நடத்துவான். அவன் எவ்வளவு கமுக்கமாகக் கடன் வாங்கு

கன்னட மூலம் : ஈஸ்வரசந்த்ர

தமிழில் : இளம்பாரதி

வானென்றால், ஒருவர் விஷயம் இன்னொருவருக்குத் தெரியாது. அப்பனிடம் கடன் வாங்கி மகனின் கடனைத் தீர்ப்பான். அவன் என்றைக்கும் முழுதாகக் கடனை அடைத்ததே கிடையாது.

பாதிக் கடனைக் கொடுத்துவிடுவதனால், என்றைக்காவது மீதியைக்

கொடுத்துவிடுவான் என்று நம்பி ஊரார் மறுபடியும் மறுபடியும் அவனுக்குக் கடன் கொடுத்தார்கள்.

உதடப்பன் செத்துவிட்டான் என்ற நிலையில், தங்களுடைய கணக்கு வழக்கு எவ்வளவுக்கு நஷ்டம் என்று கணக்குப் போடுவதில் ஊரார் யோசனையில் ஆழ்ந்தார்கள். மோசக்காரப்பயல் என்று மனத்துக்குள் வைது கொண்டார்களே தவிர, யாரும் வாய் விட்டுச் சொல்லவில்லை. அந்த மனப்பிணக்கினால் அவனுடைய ஈமச்சடங்கை நடத்தி வைக்க எவரும் முன்வரவில்லை. அனாதரவான பெண்களின் புலம்பலை வேடிக்கைப் பார்த்தோடு சரி. பேச்சுக் கொடுத்தால் மற்றவற்றில் பங்கெடுத்துக் கொள்ள நேரும் என்று ஒதுங்கி நின்ற நிலையிலேயே இருந்தார்கள்.

உதடப்பன் முதலில் இப்படி இருக்கவில்லை. அவனுடைய உதடுகள் நீக்ரோக்களின் உதடுகளைப் போலத் தடித்திருக்கும். அதைப் பார்த்துக் கிராமத்துக் கர்ணத்தின் வீட்டுப்பையன்கள் அவனுக்கு உதடப்பன் என்று பெயரிட்டார்கள். அவனும் அதை ஏற்றுக் கொண்டுவிட்டான். யாராவது அவனை உதடப்பன் என்று கூப்பிட்டால் அவன் கோபப்படுவதில்லை.

கொஞ்ச நேரத்தில் கோலூரப்பன் அங்கே வந்து சேர்ந்தான். சென்ற மாதம் தான் ஆன் டிமாண்ட் பத்திரம் எழுதி உதடப்பனுக்கு ஐயாயிரம் ரூபாய் கடன் கொடுத்திருந்தான் கோலூரப்பன்.

கோலூரப்பன் அளவுக்குச் சந்தேகப் பிராணியிடமிருந்து ஐயாயிரம் ரூபாய் கடன் கசக்கிப் பிழிந்து வாங்க முடியுமென்றால் அது உதடப்பனால்தான் முடியும். அப்படிப் பட்ட உதடப்பன் இறந்துவிட்டான் என்றதும் யாரோ நெஞ்சில் குத்துவது போலிருந்தது. அவசர அவசரமாகக் கடன் பத்திரத்தை இரும்புப் பெட்டியிலிருந்து எடுத்துச் சட்டைப் பையில் திணித்துக் கொண்டான். கேட்ட தகவல் பொய்யாக இருக்க வேண்டுமென்று கடவுளை வேண்டிக் கொண்டு வந்தான். வீட்டு முன்னால் கூட்டம் கூடியிருந்ததைப் பார்த்தவுடனேயே நெஞ்சு திடுக்கிட்டது. கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே நுழைந்தபோது, கடவுள் அந்தத் தகவலைப் பொய்யாக்கவில்லை என்பது புரிந்தது.

கோலூரப்பனுக்குப் பொங்கி வந்த கோபத்தை அடக்க முடியவில்லை.

"ஆகக் கடைசியிலே ஏமாத்திட்டுப் போயிட்டான் வேகாடிப்பய... போனவன் என்னோட ஐயாயிரம் ரூபாயையும் சுருட்டிக்கிட்டில்ல போயிட்டான்... முழுங்கி ஏப்பம் விட்டுப் போயே போய்ட்டான்..." என்று உரக்கக் கூச்சலிட்டுக் கொண்டு புலம்பத் தொடங்கினான் கோலூரப்பன்.




அவனுடைய புலம்பலைக் கேட்டுச் சுற்றியிருந்தவர்களுக்கு என்னவோ போலிருந்தது. தாங்களும் உதடப்பனுக்குப் பணம் கொடுத்து தாரை வார்த்தவர்கள்தான். ஆனால், இறந்தவனை வையக் கூடாது, சாவு விழுந்திருக்கும்போது தன்னலம் பார்க்கக் கூடாது என்ற நீதி நியாயம் எதுவும் கோலூரப்பனுக்குத் தெரியவில்லையே... செத்தவன் செத்தவன்தான். ஆனாலும் தன்னுடைய பணத்தை விழுங்கிவிட்டுச் செத்துவிட்டானே என்ற ஆத்திரமும் துக்கமும் ஒருசேர அவனை அரித்தெடுக்க, அவனுடைய வாயிலிருந்து ஏதேதோ வார்த்தைகள் வெளியே வந்தன. உதடப்பன் எப்படியெல்லாம் தன்னை இடைவிடாமல் தொந்திரவு செய்தான். என்னென்னவோ காரணங்களைச் சொன்னானே! ஆன் டிமாண்டுக்குக் கைநாட்டு வைத்துப் பணத்தை வாங்கிக் கொண்டு போன கதையையெல்லாம் அவன் மற்றவர்களிடம் சொல்ல ஆரம்பித்தான். சுற்றியிருந்தவர்கள் உதடப்பனின் சாவை மறந்தார்கள். தங்களிடம் கடன் வாங்க அவன் பிரயோகித்த சாமர்த்தியத்தைப் பற்றி ஒவ்வொருவரும் நினைத்தார்கள். கோலூரப்பன் தங்கள் எல்லோரையும்விட அதிக அளவில் ஏமாந்து விட்டான் என்பதில் அவர்களுக்கு ஒரு மகிழ்ச்சி. தாங்கள் கொடுத்த பத்து, இருபது போனது பெரிதில்லை, கோலூரப்பனின் ஐயாயிரம் போயிற்றல்லவா என்பது அந்த மகிழ்ச்சியின் பின்னணி. "அங்கே போய்த் தான் வாங்கிக்கணும்" என்று யாரோ ரகசியக் குரலில் சொன்னார்கள்.

கோலூரப்பனின் புலம்பல் தொடர்ந்தது. ஆனால் இப்போது ஆட்களுக்கு அவனு

"கண் கட்டைப் பிரிச்சவுடனே முதல்ல நீங்க எதைப் பார்க்க ஆசைப்படறீங்க?"

"உங்க பில்லைத் தவிர வேற எதுவானாலும் பார்க்கறேன் டாக்டர்..."

— வி. சாரதி

டைய பேச்சில் அவநம்பிக்கை ஏற்படத் தொடங்கியது. உதடப்பன் மாதிரியான ஏழைப்பட்டவனுக்கு ஐந்தாயிரம் எப்படிக் கொடுத்தான் இவன்? அது மட்டுமல்லாமல், ஐந்தாயிரம் வாங்கி உதடப்பன் என்னதான் செய்திருப்பான்? கோலூரப்பன் ஏதாவது நாடகம் ஆட நினைக்கிறானோ?

அப்போது கோலூரப்பன் சட்டைப் பையிலிருந்து கடன் பத்திரத்தை வெளியிலெடுத்துப் படபடவென்று ஆட்டினான். நெஞ்சிலடித்துக் கொண்டு தன்னுடைய புலம்பலை மறுபடியும் தொடர்ந்தான். ஓரிருவர் அதை வாங்கிப் பார்த்து நோட்டமிட்டார்கள். தங்களுக்குப்படிக்க வராது என்பதால் சும்மா இருந்தார்கள்.

"என்னோட பணம் வந்தாலொழிய பொணத்தை எடுக்க விடமாட்டேன். அதுக்குப் பெறகு என் கடனை யாரு தீர்ப்பாங்க?" என்று திடீரெனக் கத்தினான் கோலூரப்பன்.

"இது நியாயமில்லே, கோலூரப்பா. அப்புறமா ஒன் கடனை எப்படியாவது தீர்த்துக் கிடலாம். இப்போ நடக்க வேண்டிய காரியத்துக்குக் குறுக்கே நிக்காதே" என்றார் ரங்கப்பா.

"நியாயம் சொல்ல வர்ற நாணயக்காரப் பெரிசு, உதடப்பன் மேலே அவ்வளவு கரிசனம் இருந்தா, நீயே அந்தக் கடனைத் தீர்த்திடேன்!"

"எனக்கென்ன தலையெழுத்தா? அவனாச்சி; நீயாச்சி..." என்று சொல்லிவிட்டு ரங்கப்பா இடத்தைக் காலி செய்தார்.

கோலூரப்பன் சுற்றும் முற்றும் பார்த்தான் - உதடப்பன் வாங்கின கடனைத் திருப்பித் தர யாராவது முன்வருகிறார்களா? அவனுடைய பார்வை விழுந்ததுமே அங்கங்கே இருந்தவர்கள் அரவமில்லாமல் தங்கள் இடங்களைக் காலி செய்யத் தொடங்கினார்கள். சில நிமிடங்களுக்குள் அங்கே கூடியிருந்தவர்கள் எல்லோருமே கலைந்து சென்றுவிட, எஞ்சியிருந்தவன் கோலூரப்பன் ஒருவன்தான்.

அவன் இடது பக்கமாகத் திண்ணை மீது உட்கார்ந்தான். வலது பக்கம் உதடப்பனின் பிணம். பக்கத்தில் கண்ணீர் விட்டபடி மூன்று பெண்கள். இப்போது காற்று வீசுவது கூட நின்றுபோயிருந்தது. எதிர்ப்பக்கத்தில் மரத்து இலைகள் ஆடவில்லை, அசையவில்லை. எங்கும் மௌனம் நிலவியது. குரல் எழுப்பிக் கொண்டு பறந்து வந்த பறவை ஒன்று ஏதோ தவறு நடந்துவிட்டதாகச் சட்டென்று பயந்து மறுகணமே விர்ரென்று வந்த வழியே பறந்து போயிற்று.

பிணத்தின் அருகில் உட்கார்ந்து உட்கார்ந்து அலுத்துப்போன உதடப்பனின் அக்கா எழுந்து வீட்டிற்குள் போனாள். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவனுடைய பாட்டியும் உள்ளே போய் முற்றத்தில் ஒரு பாயை விரித்துப் படுத்துவிட்டாள். அதற்குப் பின்னர் கொஞ்ச நேரத்தில் உதடப்பனின் மனைவி எழுந்து நின்றாள். ஒரு தடவை உதடப்பனின் பிணத்தையும், மறு தடவை கோலூரப்பனையும் பார்த்து விட்டு உள்ளே போனாள். இப்போது எஞ்சியவர்கள் இருவரே - உதடப்பன், கோலூரப்பன். கோலூரப்பன் சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தான். அவ்வப்போது தெருமுனையில் யாராவது ஒருவர் எட்டிப் பார்த்துவிட்டு, அப்படியே ஒளிந்தபடி போய்விடுவார்கள். அக்கம்பக்கத்து வீடுகளின் கதவுகள் பத்திரமாகச் சாத்திக் கிடந்தன.

வீட்டின் உள்ளே மண்பானையில் ஏதோ கொதிக்கும் சப்தம். கோலூரப்பனின் மூக்கு நிமிர்ந்தது. கூழ் வாசனை. கேப்பைக் கூழ் தயாராவதாகத் தெரிந்தது. அந்த வாசனையில் அவனுக்குப் பசிக்கத் தொடங்கியது. வீட்டிற்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு வரலாமென்று நினைத்தான். அந்த நேரத்திற்குள் யாராவது பிணத்தை அப்புறப்படுத்திவிட்டால் என்ன செய்வது? என்ற எண்ணம் தோன்றவே, உட்கார்ந்திருந்த நிலையை மாற்றிக் கொண்டு திண்ணையிலேயே இருந்துவிட்டான்.

இருள் கவிந்து மூடியது. வீட்டில் விளக்கு ஏற்றப்பட்டது. அதன் மங்கலான வெளிச்சம் வாசலைத் தாண்டித் தெருவை எட்டியது. பெண்டாட்டி வந்து உதடப்பனின் தலைமாட்டில் ஓர் உடைந்த மண் பாண்டத்தை வைத்து அதை அகல்விளக்காக ஏற்றினாள்.

பசி வயிற்றைக் கிள்ளத் தொடங்கியதும் கோலூரப்பன் யோசிக்கத் தொடங்கினான். தான் இப்படியொரு முரண்டு பிடிக்க

நேர்ந்துவிட்டதே! யாராவது முன்வந்து பண விவகாரத்தை முடித்து வைக்க மாட்டார்களா? என்று வாய்விட்டே அரற்றத் தொடங்கினான். தன்னுடைய பணம் வந்து சேர்கிற வரைக்கும் பிணத்தை எடுக்கச் சம்மதிக்கப் போவதில்லை. தங்களுக்கென்ன வந்தது என்று எல்லோரும் விலகிக் கொண்டார்கள். அக்கம்பக்கத்து ஊர்க்கார உறவினர்கள் செய்தி கேள்விப்பட்டு சாவு கேட்க வருவதை நிறுத்திக் கொண்டார்கள். இல்லாவிட்டால் இந்த நேரத்திற்குள் வராமலிருப்பார்களா? அப்படியானால் கடனைத் தீர்க்கப் போவது யார்?



*"நம்ம கட்சி ஆபீசுக்கு வர்றவங்கயெல்லாம் தலைதெறிக்க திரும்பி ஓடறாங்களே, என்ன ஆச்சு?"*

*"யாரோ ஒருத்தன் 'ஆந்த்ராக்ஸ் கிருமிகள் நிரம்பிய இடம்'னு வாசல்ல எழுதிப் போட்டுருக்கான், தலைவரே!"*

– அம்பை தேவா

இந்த வீட்டை எழுதி வாங்கி விடலாம தான். ஆனால் அந்த வீட்டில் எந்தச் சுரத்தும் இல்லை. உதடப்பனுக்குக் கடன் கொடுத்ததே தவறு. அவ்வளவு பணம் வாங்கி அவன் என்ன செய்தான் என்பதும் ரகசியம்தான். எப்படியிருந்தாலும் இது நஷ்ட விவகாரம்தான் என்பதில் சந்தேகமில்லை. வீட்டிற்கு எழுந்து போய்விடலாமா என்றுகூட யோசித்தான். இவ்வளவு நேரம் முரண்டு பிடித்துவிட்டு இப்போது எழுந்து போனால் சரிப்படாது என்று, தோளிலிருந்த துண்டைத் தலைக்குச் சுற்றிக் கொண்டு சுவர் மீது தலை வைத்துச் சாய்ந்துக் கொண்டான்.

விடிந்ததும் அடுத்த ஊருக்குக் கிளம்பிப் போய்க் கொண்டிருந்த நாட்டாமை பாதி வழியிலேயே திரும்பி வந்தார். அவரைப் பின்தொடர்ந்து ஐந்தாறு பேர் உதடப்பனின் வீட்டை நோக்கி வந்தார்கள். அதே சமயத்தில் ஒரு மாட்டு வண்டியும் அங்கே வந்து நின்றது. அதிலிருந்து கங்கம்மா இறங்கினாள். அதைப் பார்த்தவர்கள் அயர்ந்துபோய் 'ஹெப்பளகெரெ கங்கம்மா இங்கே எதற்கு வந்தாள்?' என்று திகைத்தார்கள்.

**க**ங்கம்மா நேராக உதடப்பனுக்கு அருகே போய் நின்று புடைவைத் தலைப்பால் வாயைப் பொத்திக் கொண்டு விக்கி விக்கி அழத் தொடங்கினாள். வாசல் திறந்தது. பெண்டாட்டி, அக்கா, பாட்டி வெளியே வந்து அங்கே கூடியிருந்தவர்களையெல்லாம் வெறித்துப் பார்த்தார்கள்.

அழுகையை நிறுத்திவிட்டு கங்கம்மா தன்னுடைய கழுத்துச் சங்கிலியைக் கழற்றிக் கையில் பிடித்துக் கொண்டாள். துக்கத்தினால் தழுதழுத்த குரலில்-

"இவ்வளவு பெரிய ஊர்லே இவ்வளவு பெரிய மனுசங்களெல்லாம் இருக்கீங்க. ஒருத்தரு செத்தா மண்ணிலே பொதைக்க முடியலே.. பொணம் கெடந்து அழுக வேண்டியதுதானா? காசு பணம் இல்லேன்னா மனுசனுக்கு மரியாதை இவ்வளவு தான் போலிருக்கு. இந்தா பாருங்க. அவனே செய்துபோட்ட கழுத்துச்சரம். அவனோட கடனுக்குச் சரிபண்ணிட்டு இனியாவது அவனைப் பொதையுங்க.." என்று கையெடுத்துக் கும்பிட்டாள்.

கும்பிட்ட அந்தக் கை எல்லோருடைய இதயங்களையும் சலனப்படுத்தியது.

கோலூரப்பன் இதற்கு ஒப்புக் கொள்கிறானா? என்று எல்லோரும் அவன் பக்கமாகப் பார்த்தார்கள். அவன் சுவரில் சாய்ந்தபடி அப்படியே உட்கார்ந்திருந்தான். அவனுடைய கையில் கடன் பத்திரம் இருந்தது. ரங்கப்பா திண்ணையிலிருந்த கோலூரப்பனின் தோளை உலுக்கி எழுப்ப முயன்றார். அவன் அப்படியே திண்ணையில் சரிந்து விழுந்தான்.

'ஆ...' என்று எல்லோரும் முன்னுக்கு வந்து கோலூரப்பனை உற்றுப் பார்த்தார்கள். உயிர் பிரிந்திருந்தது. யாரோ நடுங்கும் குரலில் "கோலூரா.." என்று அலறினார்கள்.

வேறு யாரோ மெல்லிய குரலில், "கடனை வசூலிக்க உதடப்பனுக்குப் பின்னாலேயே கோலூரப்பன் போக வேண்டிய தாய்ப் போச்சு" என்றார்கள்.

அந்தப் பேச்சுக்கு எவரும் சிரிக்கவில்லை.○

# சுறா பிடித்தால் சிறை!

மீனவர்கள் சுறா மீனைப் பிடிக்கக் கூடாதென்றும், அப்படிப் பிடித்துக் கரைக்குக் கொண்டு வந்தால் ஏழு ஆண்டுகள் சிறைத்தண்டனை என்றும் மத்திய அரசின் சுற்றுச்சூழல் துறை சமீபத்தில் ஆணை பிறப்பித்திருக்கிறது. இந்த ஆணையால் மீனவர்கள் கொதித்துப் போயிருக்கிறார்கள். "மீனவ சமூகத்தையே இந்த ஆணை ஒழித்துவிடும்" என்று கவலை தெரிவிக்கிறார் முன்னாள் எம்.எல்.ஏவும் விசைப் படகு மீனவர் சங்க நிர்வாகியுமான எஸ். வேணு கோபால்.

"மீனவர்களாகிய நாங்கள் மீன் பிடிக்கிறபோது எல்லா மீன்களும் கிட்டத்தட்ட இறந்த நிலையில்தான் கிடைக்கும் அந்தச் சமயத்தில் சுறா மீன் கிடைத்தால் அதையும் பிடித்து விற்பனைச் செய்துதான் வாழ்க்கையை ஓட்டி வருகிறோம். சுறா மீனுக்கு என்று தனி வலை போடுவதில்லை. சுறா மீன்கள் உணவுக்கு உணவாகவும், மருந்துக்கு மருந்தாகவும் பயன்படுகின்றன. குழந்தை பெற்ற தாய்மார்களுக்கு மிகவும் நல்லது. அதன் இறக்கைகள் (துடுப்பு போன்றவை) நல்ல மருத்துவ குணம் கொண்டவை. மனிதனுக்குத் தேவையான எல்லா வைட்டமின்களும் அதில் இருக்கின்றன. இந்த இறக்கைகள் கிலோ நாலாயிரம் ரூபாய் வரை கூட விற்கும். சுறாவின் பல், ஈரல், ஆகியவற்றிலிருந்தும் மருந்துகள் தயாரிக்கப்படுகின்றன. உடல் பகுதி மட்டுமே இறைச்சியாகப் பயன்படுகிறது. எனவே இப்படி பல விதங்களில் முக்கியத்துவம் வாய்ந்த சுறா மீனைப் பிடிக்கத் தடை போடக் கூடாது" என்கிறார் வேணுகோபால்.

சுறா மீனில் 52 வகைகள் இருக்கிறதாம். இதைத் தவிர, சங்கு மற்றும் காலா, கொடுவா, திருக்கை, பார் மீன், குழிமீன், கடல் அட்டை, கடல் பல்லி, கடல் குதிரை போன்ற கடல்வாழ் உயிரினங்களைப் பிடிக்கவும் மத்திய அரசு தடை செய்திருக்கிறது. இந்த வகை மீன்களை ஏற்றுமதி செய்வதன் மூலம் நூறு கோடி ரூபாய் அந்நியச் செலாவணியை இந்தியா பெற்று வந்ததாம். இனி அந்த வருமானம் இல்லாமல் போய் விடுமாம்.

மத்திய அரசின் தடைக்குக் காரணம்?

பல்வேறு வெளிநாட்டு மீன்பிடி கப்பல்கள் சுறா மீன்களைப் பிடித்து தங்களுக்குத் தேவையான வால் மற்றும் இறக்கைகளை வெட்டி எடுத்துக் கொண்டு உடல் பகுதியைக் கடலில் போட்டு விடுகின்றன. இதன் காரணமாக கடலில் மாசு ஏற்படுவதாகக் கூறி இந்தத் தடையைப் போட்டுள்ளது மத்திய அரசு.

இந்தியக் கடல் பகுதியில் இருக்கும் சுறா மீன்களில் முப்பது சதவீதம்கூடப் பிடிக்கப்படுவதில்லையாம்.

"இந்த நிலையில் சுறா மீனைப் பிடிக்கத் தடை போட்டால் அந்த முப்பது சதவிகித சுறா மீன்களிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானமும் அண்டை நாடுகளுக்குப் போய்ச் சேர்ந்துவிடும். இதனால் இந்தியாவுக்குத்தான் நஷ்டம்" என்கிறார் வேணுகோபால்.

— ஸ்ரீநிவாசன்

படங்கள்: ராஜன்





கண்கள் பொல்லாதவை. நம்மை ஏமாற்றிச் சிரிக்கும். இங்கும் அப்படித்தான். கொஞ்சம் உற்றுப்பார்த்தால் ரசிக்க ஏராளமான விஷயங்கள் உண்டு. பார்க்கிறீர்களா? "என் கண்ணுக்கு ஒண்ணுமே தெரியலை" என்பவர்கள் இதைப் படியுங்கள்.



- இது வாத்தா? முயலா?– இப்படிப்பார்த்தால் வாத்து, அப்படிப்பார்த்தால் முயல்.
- இது மண்டை ஓடு மட்டுமில்லை. உள்ளுக்குள் ஒரு காதல்ஜோடி ஒளிந்திருக்கிறது.
- யானைக்கு எத்தனை கால்கள்?
- கண்ணாடிக் கோப்பைதான். உற்றுப் பார்த்தால் இரண்டு முகங்கள்.
- ஒரே கோடு சுழன்று சுழன்று செல்வதாகத் தான் தெரியும். ஆனால் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வட்டம்.

தொகுப்பு: கௌதம்





# கண்களை நம்பாதே!

யுகபாரதி



எல்லாக் கொடூரங்களையும்
எளிதாய்ப் புரிந்து கொண்டு
ஒவ்வொருவர் வீட்டிலும்
ஒரு பயங்கரவாதியிருக்கிறான்

கண்ணெதிரிலேயே
நடக்கின்றன அவனது
அத்துமீறல்கள்

அபாயகரமான அவனது
செயல்பாடுகள்
அதிர்ச்சிக்குள்ளாக்குகின்றன

உங்கள் மனைவி / மகளின்
இருதயத்தைக் கேள்வியின்றி
கொள்ளையடிக்கிறான்
குழந்தைகள் அஞ்சி
போர்வைக்குள் மறைகின்றன

பூதத்தால் தோண்டப்படுகிற
கிணறு போலாகிவிட்டது வீடு

மேலும் மேலும் நீண்டு
யுத்தம் வருவதற்குள்
காட்டிக் கொடுங்கள் அவனை

அல்லது

தொலைக்காட்சியும் பயங்கரவாதமும்
நம்மைக்
கொன்று விடும்?

ஓவியம்: பி.ஆர். ராஜன்

## காதில் விழுந்தவை :







● பா.ஜ.க.வுடன் நெருங்குவதற்காக படு தீவிரமான முயற்சிகளை மேற்கொண்டுள்ளார் ஜெ. இதற்கு இரண்டு காரணங்களைச் சொல்கிறார்கள். ஒன்று, கடுமையான நிதி நெருக்கடியில் இருக்கும் தமிழக அரசு, அதிலிருந்து விடுபட வேண்டுமானால் மத்திய அரசுடன் மிக இணக்கமாகச் செயல்பட வேண்டியிருக்கிறது. மத்திய அரசின் ஆதரவு இருந்தால் நிதிப் பிரச்னையைத் சமாளித்து விடலாம் என்று ஜெ.க்கு அவரது நெருங்கிய நண்பர்கள் ஆலோசனை சொல்லியிருக்கிறார்கள். அடுத்து, டான்ஸி வழக்கில் அவர் முற்றிலுமாக விடுவிக்கப்படாமல், மூன்றாண்டுகள் தண்டனை இரண்டாண்டுகளாக குறைக்கப்பட்டாலும், கவர்னர் தயவு இருந்தால்தான் முதல்வராகப் பொறுப்பேற்க முடியுமாம். தண்டனை குறைப்பு என்பது, அவருக்குத் தேர்தலில் போட்டியிடும் தகுதியைப் பெற்றுக் கொடுத்தாலும், முதல்வர் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்குத் தொடர்ந்து தடையாக இருக்குமாம். தேர்தலில் போட்டியிட தகுதி பெற்றும், தண்டனை, ஒரு வருடமோ, இரண்டு வருடமோ இருந்தால் கவர்னர், ஜெ.வுக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைப்பதற்குத் தயங்கக் கூடும். எனவே பா.ஜ.க.வுடன் நெருங்கியிருந்தால் இந்தப் பிரச்னையைச் சமாளித்து விடலாம் என்பது ஜெ.வின் திட்டம். அதற்காகத்தான் அம்மா காய்களை நகர்த்துகிறார்.

## மதுரையில் சமாதானக் கொடி!

● மதுரையில் அழகிரிக்கும், பி.டி.ஆர். பழநிவேல் ராஜனுக்கும் இடையே இருந்த மனக்கசப்புகள் நீக்கப்பட்டுவிட்டன என்கிறார்கள் உடன்பிறப்புகள். மதுரை நகர மேயராக பி.டி.ஆரின் ஆதரவான ரான ராமசந்திரன் வெற்றி பெற்றாலும், துணை மேயர் தேர்தலில் அழகிரி ஆதரவோடுதான் தி.மு.க. வெற்றி பெற முடிந்தது. வெற்றி பெற்ற துணைமேயர் வாழ்த்து பெற வந்தபோது 'முதலில் பி.டி.ஆரின் வாழ்த்தைப் பெறுங்கள்' என்று அனுப்பி விட்டாராம் அழகிரி. மதுரையைச் சுற்றியுள்ள சில மாவட்டங்களில் தி.மு.க. குறிப்பிடத்தக்க வெற்றி பெற்றதற்குக் காரணம், அழகிரி ஆதரவாளர்களும் சேர்ந்து பாடுபட்டதுதான் என்கிறார்கள். பெரிய மனிதரான பி.டி.ஆரும், இடைக்காலத்தில் நடந்த சில நிகழ்ச்சிகளை, 'மறப்போம்; மன்னிப்போம்' என்று மனத்தில் வைத்துக் கொள்ளப் போவதில்லையாம். தென் மாவட்டங்களில் இனி கட்சியைப் பலப்படுத்துவதில் இருவரும் தீவிர கவனம் செலுத்துவார்களாம். இதற்கிடையில் தமிழ்க்குடிமகன் மீண்டும் கழகத்துக்கு வருவதில் ஆர்வம் காட்டுகிறாராம். "அம்மா கவனிக்க வேண்டுமென்பதற்காகக் கூட, மீண்டும் இங்கு வந்து விடுவதாக 'பாவ்லா' காட்டக்கூடும். எனவே அவரை நம்ப முடியாது" என்கிறார் கழகப் பிரமுகர் ஒருவர்.

— சஞ்சயன்

● எம்.சிவகுருநாதன், சென்னை - 42

*? 'நம் வீடுகளில் வயதான கிழவர்கள் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு புலம்பு வதுபோல் தற்போது தினமும் கருணாநிதி புலம்பிக் கொண்டிருக்கிறார்' என்கிற வாழப் பாடி ராமமூர்த்தியின் அறிக்கை பற்றி..?*

! தாத்தாக்கள் கூறும் அனுபவ ரீதியான உபயோகமான கருத்துக்கள் விடலைப் பேரன்களின் காதுகளுக்குப் புலம்பலாகத் தோன்றுவது சகஜம்.

● ஈ.ஆர். ராமலிங்கம், வள்ளியரச்சல். ❒

*? டி.வி. மெகா சீரியல்களில் வரும் பெண் கதாபாத்திரங்கள் மதுரையை எரித்த கண்ணகிபோல் ஆவேசமாகப் படைக்கப்படு வது ஏன்..?*

! வாழ்க்கையில், தாங்கள் செய்ய முடியாத தைத் திரையில் பார்க்கிறபோது பெண்களுக் குக் கிடைக்கிற திருப்தி பெரிது. அந்த உணர்வில் அவர்களைக் கட்டிப்போடவே இந்த ஃபார்முலா.

● அ. சங்கரன், பெங்களூர்

*? நவம்பர் நான்காம் தேதியன்று டெல்லியில் 50,000 தாழ்த்தப் பட்ட மக்கள் புத்த மதத்தைத் தழுவியதானது, இந்து மதம் இன்னும் சீர்ப்படுத்தப்பட வேண்டும் என்பதைத் தானே காட்டுகிறது?*

! மக்கள் மதம் மாறுவதில் இரண்டு அம்சங்கள் உண்டு. 1. ஜாதிக் கொடுமை. 2. ஏழ்மை. முன்னதற்குத் தீர்வு, சிறு வயது முதலே அனைவருக்கும் தரமான கல்வி. பின்னதற்குத் தீர்வு தேசத்தின் தொழில் - பொருளாதார வளர்ச்சி. இவற்றில் அரசு முழு மூச்சுடன் இறங்கட்டும். மற்ற பிரச்னைகள் எல்லாம் தன்னால் சரியாகிவிடும்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

*? புதிய திரைப்படம் வெளியிடப்படும் தினத்தன்று மட்டும் திரையரங்கு நிர்வாகிகள் தங்கள் விருப்பம்போல் கட்டணத்தை உயர்த்திக் கொள்ளலாம் என்று கேரள அரசு உத்தரவிட்டுள்ளது ஆச்சர்யமாக இருக் கிறதே..?*

! அன்றைக்கு மட்டும்தான் கூட்டம் வரு கிறது என்பது அரசாங்கத்துக்கும் தெரிந் திருக்கிறது!

● ஆர்.அப்துல் சலாம், திருச்சி - 20

*? 'காவிரி நீர்ப் பிரச்னை ஓர் ஆண்டுக்குள் தீர்த்து வைக்கப்படும்' என்று மத்திய அமைச்சர் பிஜோயா சக்ரவர்த்தி கூறு கிறாரே?*

! 'பாஸிடிவ் திங்கிங்'கில் சக்ரவர்த்தியாக இருக்க வேண்டியதுதான். அதற்காக நிறைவேற முடியாத பகல் கனவுகளைக் காண்பதா!



• பேரன் காது!



• டபுள் ஓ.கே.!



• செய்தி ஹைலைட்!

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
ஈ.ஆர்.ராமலிங்கம்,
நெடுங்காட்டுப்புதூர்,
வள்ளியாரச்சல் அஞ்சல்,
முத்தூர், ஈரோடு - 638 105

★ ரூ. 50 பரிசு பெறுபவர் :
பிரபா லிங்கேசன்;
எம்.கே.புதூர் - 629 601.
குமரி மாவட்டம்

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

*? தீவிரவாதிகளை ஒடுக்க மத்திய அரசு கொண்டு வந்துள்ள புதிய பொடோ சட்டத்துக்குப் பல எதிர்க்கட்சிகளும் தி.மு.க. தலைவர் கருணாநிதியும் எதிர்ப்பு தெரிவித் துள்ள நிலையில் அ.தி.மு.க. பொதுச் செய லாளர் ஜெயலலிதா அதற்கு ஆதரவு தெரி வித்துள்ளாரே...?*

! சரியான நிலைப்பாடு. பாராட்ட வாய்ப்பளித்த ஜெயலலிதாவுக்கு நன்றி.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? தி.மு.க. - பா.ஜ.க. உறவில் சிராய்ப்பு இல்லை என கருணாநிதி கூறியுள்ளாரே..?

! சிராய்ப்பைவிட உள்காயம் ஆபத்தாச்சே!

● செல்வராஜ் கௌதம், சென்னிமலை

? தி.மு.க. அரசு கஜானாவைத் துடைத்து விட்டுச் சென்றுள்ளது என்று முதல்வர் பன்னீர்செல்வம் கூறியுள்ளாரே? அப்படிக் கூடச் செய்ய முடியுமா..?

! கஜானா துடைப்பு என்பது பஸ் கட்டணம், பால் விலை, மின்சாரக் கட்டணம் போன்றவற்றை உயர்த்துவதற்கு வசதியாக ஒரு கண் துடைப்பு.

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

? பிரிட்டிஷ் இளவரசர் சார்லஸை லத்தீவியா நாட்டுப் பெண் மலர்க் கொத்தால் கன்னத்தில் அறைந்தது பற்றி..?

! பிரிட்டனின் ஆஃப்கன் எதிர்ப்பு நிலைக்குத் தெரிவிக்கப்பட்ட அதிருப்தி. அப்பெண்ணைத் தண்டிக்க வேண்டாம் என்று சார்லஸ் கேட்டிருப்பது பெருந்தன்மை.

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? 'அன்று அகநானூறு, புறநானூறு என்பது போல் கலையில் 'சித்தி நானூறு' என்ற கலைஞரின் பேச்சு பற்றி..?

! அகமொன்று வைத்துப் புறமொன்று கூறலாகுமா? சித்தி சிரஞ்சீவி இலக்கியமாகுமா!

● ஆர். எஸ்.லக்ஷ்மி, கோவை - 41

? பன்னீர்செல்வம் மட்டும் தன்னிச்சையாகச் செயல்பட்டால் ஜெயலலிதாவைவிட நல்ல அரசை அவரால் தர முடியும் என்கிறேன். சரிதானே..?

! அவர் தன்னிச்சையாகச் செயல்படுவதென்றால் முதல்வராகவே முடிந்திராதே!

● ஜெ.பாஸ்கி, சென்னை - 39

? கமல்ஹாசன் அரசியலுக்கு வருவேன் என்று கூறியுள்ளாரே..?

! அப்படி ஏதாவது பரபரப்பாகச் சொன்னால்தான் பிறந்த நாள் செய்தி ஹைலைட்டாகும் என்று கமலுக்குத் தெரிந்துவிட்டது.

● கே.ராஜேந்திரன், மருதாடு

? 'முந்தானைதானே தேசியக் கொடி' என்ற சினிமா பாடல் வரி பற்றி..?

! கண்டனத்துக்குரிய மிக மிக மலிவான சிந்தனை!

● கலை அரசு, கோவை - 42

? டான்ஸி தீர்ப்பு ஜெயலலிதாவுக்குச் சாதகமாக வந்தால் தமிழக அரசு உச்ச நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யுமா..?

! இதென்ன கேள்வியா? ஜோக்கா?

● கல்லார் ரஹ்மத், நாகை

? திருத்தவே முடியாதது என்ன?

! பின்லேடன் காலத்துப் பயங்கரவாதத்தைப் பார்த்த பிறகும் இப்படி ஒரு கேள்வியா!

● பிரபா லிங்கேசன், எம்.கே. புதூர் ★



• அகமும் புறமும்!

# 'சித்தி நானூறு' என்று சொல்லலாமா?



• கண்துடைப்பு!

? பிரபல பத்திரிகைகளெல்லாம் சிற்றிதழ், இலக்கிய படைப்பாளிகளைத் தற்போது அடையாளம் கண்டு ஊறுகாய் போல் அவ்வப்போது பயன்படுத்துகின்றனவே?

! ஆரோக்கியமான போக்குதான்; ஆனால் ஆரோக்கியமற்ற இதர போக்குகளுக்கு ஈடுகட்டிவிடாது. சாராயத்துக்குக்கூட ஊறுகாய்தான் தொட்டுக் கொள்கிறார்கள்.

சென்ற ஆண்டு விதைத்த விதை இந்த ஆண்டு முளை விட்டிருக்கிறது! ஊர்க்கூட்டத்திற்கான அழைப்பு முதன்முதலாக தலித் மக்களுக்கு இந்த வருசம்தான். ஆனாலும் மேடை மேல் உட்காரவோ, மேடைக்கருகில் அமரவோ அவர்களை அனுமதிக்கவில்லை. மேடைக்கு முப்பதடி தள்ளி, கவலைக்கிணற்று வேலி ஓர நிழலில்தான் உட்கார்ந்திருந்தார்கள்.

அம்மன்நோன்பு சாட்டுவது பற்றிப் பேசி முடிவெடுக்கும் அந்தக் கூட்டத்திற்கு மச்சூட்டுக்காரரும் அவருக்கு இணையாக ரைஸ்மில்காரரும் தங்கள் தங்கள் பெரிய மீசைகளை நீவிக்கொண்டு மேடையின் மேல் ஏறி நடு நாயகமாக உட்கார்ந்தார்கள். அவர்களைச் சுற்றிலும் மற்ற சாதி நாட்டாமைகள். கீழே மேடையை ஒட்டினாற்போல அமர்ந்திருந்தவர்கள் எல்லோரும் வெள்ளை சொள்ளையான ஆடைகளை உடுத்தியவர்களாகயிருந்தார்கள். மச்சூட்டுக்காரர் ஒரு கனைப்புக் கனைத்ததும் கூட்டம் நிசப்தமானது.

"எல்லா சாதி நாட்டாமைகளும் வந்தாச்சு... கூட்டத்தை ஆரம்பிக்க வேண்டியதுதான்" என்றார் அங்கவஸ்திரக்காரர். மச்சூட்டுக்காரர் தன் பக்கத்தில் இருந்த பிளாஸ்டிக் பாட்டிலில் இருந்து இளநீர்த் தண்ணீரைக் குடித்துக் கொண்டே கூட்டம் முழுவதுமாகத் தன் பார்வையை வீசினார். கூட்ட மையத்தில் நான்கு ஐந்து இளைஞர்களுடன் சேர்ந்து உட்கார்ந்திருந்த குருவப்பன் மேல் அவரது பார்வை வந்து குத்திட்டு நின்றது.

"ஏலேய்! நீ சின்னான் மகன்தானே... எங்கடா கூட்டத்து மத்தியிலே வந்து உட்கார்ந்துக்கிட்டே?"

"நாங்களும் குளிச்சு சுத்தபத்தமா வந்துதான் உட்கார்ந்திருக்கோம்."

"அய்யாவை எதுத்துப் பேசறான் பாருங்க!" என்றார் ஓர் உருமாக் கட்டுக்காரர்.

"நாங்க யாரையும்

உமை பொன்னுசாமி



# வடக்கயிறும் சல்லை மரமும்

எதுத்துப் பேசலை. உள்ளதைத்தான் சொல்றம்."

"ஏய்! பேசாமல் போய் ஓரமா உங்க சனங்கோட உட்காரு போடா!"

குருவப்பன் எழுந்து நின்றான். அவன் என்ன சொல்லப் போகிறான் என்று அவன் வாயைப் பார்த்தபடி சிலர் நிமிர்ந்தனர்.

''என்னங்கய்யா அநியாயமாயிருக்குது! வீட்டுக்கு வீடு காந்தி படம்... கடைக... ஆபீசுகளிலயும் காந்தி படம்... நம்ம கோயில் கோபுரத்திலகூட காந்தியிருக்காரு...! ஆனா சனங்களோட சனங்களா ஹரி சனங்களையும் கோயிலுக்குள்ளே போக வச்ச அவரோட கொள்கைகளை மதிக்க மாட்டேங்கறீங்களே! எங்களப் பாத்தா மனுசங்களாத் தெரியலியா...? அப்புறம் எதுக்கு எங்களைக் கூட்டத்துல வந்து கலந்துக்க அழைப்பு விட்டீங்க?"

மச்சூட்டுக்காரரை எதிர்த்து இத்தனை வார்த்தைகள் பேசியவர்கள் இதுவரை யாரும் இல்லை!

"நாலெழுத்துப் படிச்சுட்டு வேலையிலே சேந்துட்டம்னு திமிரு... எங்க என்ன பேசணும்னு தெரியாமப் பேச்சை வுடறானே... அதான் அப்பவே சொன்னேன் இவனுகளுக்கெல்லாம் அழைப்பு விட வேண்டாம்னு...! வெளியே இழுத்து விடுங்கடா அவனை" ராமானுஜம் கண்கள் சிவக்க கையை ஓங்கிக்கொண்டு கத்திப் பேசினார். யாரும் குருவப்பனை நெருங்கவில்லை. குருவப்பன் அமைதியாகத்தான் மறுபடியும் பேச ஆரம்பித்தான்.

''எல்லா சாதியும் ஒண்ணு சேரணும்னுதான் அந்தக் காலத்தில் ஊர் கூடித் தேர் இழுக்கற வழக்கத்தை ஏற்படுத்தினார் மகான் ராமானுஜர். அவர் பேரை நீங்க வச்சுக்கிட்டு இப்படி ஏறுக்கு மாறாப் பேசறீங்களே...! இது ஊர்ப் பொதுக் காரியம்... பொது இடம்... பொதுக்கூட்டம்... எல்லோரும் கலந்துக்கலாம்... எல்லோரும் பேசலாம்..."

கூட்டத்தில் ஆளுக்கு ஆள் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தங்களுக்குள் 'கசமுச' வெனப் பேச... கூட்டம் கலகலப்பானது. "சரி! விட்டுத் தொலைச்சுட்டு ஆக வேண்டியதைப் பேசுங்க!" சூரியன் உச்சிக்குப் போய் விட்டதால் வேலி ஓர நிழல் குறைய ஆரம்பித்தது. அங்கு உட்கார்ந்திருந்த தலித் இன மக்கள் ஒவ்வொருவராக எழுந்து கூட்டத்தோடு கூட்டமாய்ச் சேர்ந்து குறுகி அமர்ந்தார்கள். அதில் பலர் குருவப்பன் அருகில் இடம் பிடிப்பதில் ஆர்வம் காட்டினர். சின்னான், சிரங்கன் போன்ற பெரிசுகள் சிலர் வெயிலைப் பொருட்படுத்தாமல் தரையில் துண்டைப் போட்டுக்கொண்டு வேலியோரத்தைவிட்டு



அகலவில்லை!

"சரி! சரி! அமைதியாயிருங்க... அய்யா பேசறார்..." என்று அறிவித்தார் பெரிய சாமி.

"அடுத்த செவ்வாய்க்கிழமை அம்மன் சாட்டு... வெலவாசி, ஆளுக் கூலிக எல்லாம் ஏறியிருக்கறதாலே இந்த வருசம் தலக்கட்டுப் பணம் வீட்டுக்கு அம்பது ரூவாயாப் போட லாம்ன்னு தீர்மானம் பண்ணியிருக்கோம். இதை எல்லாரும் ஏகமனதா ஏத்துக் கோணும்னு கேட்டுக்கறன்."

"அதெப்படீங்க... இருவது ரூவாயிலிருந்து அம்பது ரூவாயா ஒரேயடியா ஏத்தினா ஏழை பாழைக எப்படிங்க குடுக்க முடியும்?" கீழே குனிந்தவாறே கேட்டார் மாட்டுத்தரகர் மருதவேலு.

"நாம என்ன தெனந்தெனமா குடுக்கப் போறம்... வருசத்துக்கு ஒருவாட்டிதான் குடுக் கறோம். ஒரு அம்பது ரூவா குடுக்கறது ஒண் ணும் பெரிய காரியமில்லை. அம்மன்நோன்பு சிறப்பா நடத்துணுமா, வேண்டாமா...? நேந்து கலந்து போகணும்... எல்லாரும் ஒத்துக்கத் தான் வேணும்." சிறிது நேர 'கசமுச'ப் பேச்சுக்களுக்குப் பின் பலர் முழு மனத் துடனும், சிலர் அரை மனத்துடனும் ஏற்றுக் கொண்டார்கள்.

"கோயில் அய்யரும், நடராசக் கவுண் டரும் வசூலுக்கு வருவாங்க... எந்த சால் ஜாப்பும் சொல்லாம ரெண்டு நாளைக் குள்ளே தலக் கட்டுப் பணத்தைக் கொடுத் துரோணும்... அவங்களை அலைய விடா தீங்க... நெறைய செலவு இருக்குது... நெறைய வேலைகளும் கிடக்குது... அப்புறம் அவங்கவங்க சொந்தக் காரியமா நெனைச்சு கோயில் வேலைகளில் பங்கு எடுத்துக்கணும்... இதுக்கு மேல பேசறதுக்கு ஒண்ணுமில் லைன்னு நெனக்கிறேன்... இத்தோடு கூட்டங் கலையலாம்!"

கையை ஊன்றி எழுந்த மச்சூட்டுக் காரரின் மேல் துண்டு கீழே விழுந்தது. அந்தத் துண்டை எடுத்து அவரிடம் கொடுக்க மூன்று பேர் முனைந்தனர். சோடாக்கடை முத்து சாமிதான் அதை எடுத்து பவ்வியமாக அவரிடம் கொடுத்தான்.

கோயில் கொடியேற்றம் நடந்து முடிந் தது. ஊருக்குத் தென்பக்கம் இருந்த பிள்ளையார் கோவில் மைதானம் சுத்தம் செய்யப்பட்டு... ராட்டினங்கள்... மரணக் கிணறு.... பாம்புத் தலைப்பெண்... பாம்பே அப்பளம், மிளகாய் பஜ்ஜி கடைகள் என தூள் கிளப்ப ஆரம்பித்தன. சூட்டோடு சூடாக மறுபடியும் ஓர் அவசரக் கூட்டம் ஏற்பாடாயிற்று... அதே இடம்... அதே சனம்... அதே கூட்டம். தேரை வடம்பிடித்து இழுத்துத் துவக்கி வைக்க இங்குள்ள நாட்டாமைகளைத் தவிர வேறு யார் யாரை அழைப்பது என்பது பற்றி, எவ்வித விவா தங்களும் இல்லாமல் பேசி முடிவு செய் தார்கள்.

முனிசிபல் சேர்மன், உள்ளூர் எஸ்.ஐ. எம்.எல்.ஏ, எம்.பி, கலெக்டர் மற்றும் அமணலிங்கேஸ்வரர் மடத்துச் சாமியார் ஆகியோரை அழைப்பது என்பது ஏகோபித்த முடிவாயிற்று... எல்லாம் சுமுகமாக முடித்து விட்டோம் என்று பெருந் தலைகள் மீசையை நீவிவிட்டுக் கொண்டபோதுதான் குருவப்பனும் அவனைச் சேர்ந்த சிலரும் புதிதாக ஒரு பிரச்னையை எடுத்துக் கிளப்பி விட்டார்கள்!



"தேர் வடம் பிடிச்சு இழுக்க எல்லா சாதிக் காரங்களுக்கும் உரிமை இருக்கு... ஆனா... எங்களை மட்டும் வடக் கயிறைத் தொடக் கூடாதுங்கறது என்ன சட்டம்...? இந்த வருசம் எங் காளுகளும் வடக்கயிறு பிடிப்போம்!"

"எவண்டா இவன்... போகாத ஊருக்கு வழி காட்டறவன்? இதென்ன இன்னைக்கு நேத்தைக்கி சமாசாரமா? காலங்காலமா இருந்து வர்ற சம்பிரதாயத்தை ஒண்ணும் மாத்த முடியாது...! விட்டா ரொம்பத்தான் தலைமேல் ஏறப் பாக்கறியே... கொஞ்சம் வாயை மூடிட்டு சும்மாயிருடா குருவப்பா...!"

"இருங்க! அவனுக்கு நான் எடுத்துச் சொல்றேன்... இங்க பாரு குருவப்பா! உங்காளுகளுக்கும் தேரோடு தொடர்பு இருக்கணுங்கறதுக்காகத்தான் அந்தக் காலத்துலயே 'சல்லமரம்' போடறதுக்கு அனுமதி கொடுத்திருக்காங்க... தேருக்குப் பின்னால் இருந்து நீண்ட சல்லமரக் குச்சியாலே உங்க ஆளுகதானே தேரைக் குத்தி நகர்த்தறீங்க...? சல்ல மரம் போட்டுத் தள்ளற அனுமதி, வேற ஆளுகளுக்கு இல் லையே...! இந்த வருசம் உங்களிலே ஒருத் தனுக்குப் பரிவட்டம் கட்டற துணிகூடக் கொடுக்கலாம்னு முடிவு செஞ்சாச்சு... அப்பறமும் ஏன் குதிக்கறே...?"

"தேரைத் தொடக்கூடாது... வடக்

கயிறைப் பிடிக்கக்கூடாது... குச்சியாலதான் தேரைத் தொடலாம்ங்கறதுக்குத்தான் சல்ல மரம் போடுங்கன்னு சொல்றீங்க... இதென்ன ஞாயம்?"

"பெருசா நாயம் பேச வந்துட்டான்... உங் கப்பனக் கேளு... உங்கப் பெரியப்பனக் கேளு... அவங்க என்ன சொல்றாங்கன்னு கேட் டுட்டுப் பேசு! ஏய் சின்னா... நீ சொல்றா உன் மகன்கிட்ட" ஓரமாய்க் குத்துக்காலிட்டு... தலையில் ஒரு பழந்துணியைப் போட்டு உட்கார்ந்திருந்த சின்னான், என்ன பேசுவது எனப் புரியாமல் திகைப்புடன் ஆசிரியர் முன்னால் நிற்கும் விடை தெரியா மாணவன் போல் எழுந்து நின்றான். அவனது அண் ணன் சீரங்கன்தான் எழுந்து நின்று குரு வப்பனைப் பார்த்துச் சொன்னான், "ஆமாடா குருவப்பா! அய்யாமாரு சொல்றதுலே ஒண்ணும் தப்பு இல்லை. வழக்கத்துக்கு ஏறுமாறாச் செஞ்சா நம்ம குடும்பத்துக் கெல்லாம் தீம்பு வந்து சேருமுடா! உனக்குப் பிரியமிருந்தா சல்ல மரம் போடு... இல்ல... வெலகி நின்னு வேடிக்கை பாரு! அதைவிட்டுட்டு பெரியவுக சொல்லுக்கு எதிர்ப் பேச்சு ஏன் பேசுறே? ஊரோடு ஒத்து வாழணுண்டா..... வெறும் பேச்சப் பேசி எங்க பொழப்பக் கெடுத் துடாத" சொல்லிக் கொண்டே குருவப் பனைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய் ஓரமாய் நின்று கொண் டான்.

"ஹீரோயினை புரொட்யூஸர் கதை இலாகாவிலும் சேர்த் துட்டாரே! ஏன்?"
"ஷூட்டிங்குக்கு லேட்டா வர்றதுக்கு ஒவ்வொரு தடவை யும் ஹீரோயின் விடற கதை பிரமாதமா இருக்கு."
— உ. ராஜாஜி

"சொந்தபந்தம்... நம்ம ஆளுகளே நம்ம சொல்றதைக் கேக்க பயப்படறாங்க... வெலகி வெலகிப் போறாங்க. மத்த ஆளுக நான் சொல்றதை எங்க கேக்கப் போறாங்க! சொல்லிப் புரிய வைக்க இப்ப நேரமும் இல்லை... கொஞ்சங் கொஞ்சமாச் சொல்லிச் சொல்லி அவங்களை மாத்த இன்னும் காலம் தேவைப்படுது... பார்க்கலாம்..." யோசனை யுடன் உட்கார்ந்துவிட்டான் குருவப்பன்.

வீதியோரங்களிலும், வீட்டு மரங் களிலும், மாடிகளிலும் எங்கும் மக்கள் வெள் ளம். எள் போட்டால் எள் விழாத அளவுக்கு 'ஜேஜே' என்று மக்கள் கூட்டம். குட்டி வாரிசுகளைத் தோளில் சுமந்தபடி ஆண்கள்... இடுப்பில் ஏற்றிக்கொண்டு பெண்கள்.

"கெட்டியாக் கையைப் புடிச்சுக்க... விட்றாத."

"அம்மா! எனக்கு அந்தப் பெரிய பலூன் வேணும் வாங்கித் தா."

"தேருப் பாத்துட்டுப் போகும்போது எல் லாம் வாங்கலாம். தொணதொணக்காம பேசாம நில்லு!"

"நாக்கு வரளுது... ஒரு சர்பத் வாங்குங்க."

"பின்னால பாரு! தண்ணிப் பந்தல்ல மோரு குடுக்கறாங்க பாரு... வாங்க வாங்கிக் குடிக்கலாம்...!"

"நல்லாப் பின்னால தள்ளி நில்லு... கூட்டம் வந்து இடிச்சுத் தள்ளீரும்."

"அந்தப் பெரியவருக்கு வாசப்படியில் உக்காரக் கொஞ்சம் இடங் கொடுங்கப்பா!"

"அப்பா... வாப்பா போவலாம்... ராட்ன தூரிக்குக் கூட்டிட்டுப் போங்கப்பா."

"பெரியாளுக எல்லாம் வந்துட்டாக பாரு... இனித் தேரு கிளம்பீரும்... சப்த மில்லாமப் பாரு!"

எம்.பி ஊரில் இல்லாததால் அவர் வர வில்லை. கலெக்டர், எம்.எல்.ஏ, சேர்மன், எஸ்.ஐ மற்றும் சாமியார் ஆகியவர்களுக்குப் பெரிய பட்டுத் துண்டால் பரிவட்டம் கட் டப்பட்டது. மற்ற எல்லா நாட்டாமைகளுக் கும்கூட இந்த வருசம் பரிவட்டத் துணி பட் டுத் துணியாகவே இருந்தது... குருவப்பனின் பெரியப்பன் சீரங்கனும் ஓரமாக நின்று, அவர் கள் கொடுத்த பரிவட்டத் துணியை வாங்கி தலையில் இறுக்கிக் கட்டிக் கொண்டான்!

'டுமீல்' என்ற சுதனை வெடி காதை அடைத்தது! அம்மனுக்குக் கற்பூர தீபரா தனை காட்டப்பட்டதும், முதன்முதலாக நின்றிருந்த கலெக்டர், தேரைத் தொட்டு வணங்கிவிட்டு வடக்கயிறைப் பிடித்தார். அவரைத் தொடர்ந்து அடுத்து அடுத்து மற்றவர்களும் வடக்கயிறைப் பிடித்தனர். குருவப்பனைத் தவிர மற்ற அவனது ஆட்கள் பலர் சல்லை மரக்குச்சியால் தேரின் பின்புறம் சென்று தேரைக் குத்தினார்கள்...

அடுத்த வருடமாவது நம் ஆட்களுக்கு வடக்கயிறைப் பிடித்து இழுக்கும் உரிமையை எப்படியாவது வாங்கிவிட வேண்டும் என்ற சிந்தனையுடன் ஒதுங்கி நின்றான் குருவப்பன்.

முதன்முதலில் தேரைத் தொட்டு வணங்கி, வடக் கயிறைப் பிடித்து இழுத்துத் தேரோட் டத்தைத் துவக்கி வைத்த கலெக்டர் பெரு மகனார் ஒரு தாழ்த்தப்பட்ட தலித் இனத் தைச் சேர்ந்தவர்தான் என்பதைப் பலர் அறிந் தும் இருந்தார்கள்! ○




வஜ்ரபாஹு சாவதானமான குரலில், "தம்பி, பொறு! வேலைக் கைப்பற்றுவதற்குப் பதிலாகப் பொறுமையைக் கைப்பற்று. நாங்கள் பேய் பிசாசு இல்லை. 'பிசாசு சொப்பனம் கண்டீரா?' என்று என்னைப் பரிகாசம் செய்தாயே! நீ பிசாசு சொப்பனம் கண்டு அலறிய அலறலில், இந்த விடுதியிலுள்ள எல்லாரும் அல்லவா எழுந்திருக்க வேண்டியதாயிற்று?" என்றான்.

பரஞ்சோதி, தான் அத்தகைய கனவு கண்டதும் உண்மை என்ற எண்ணத்தினால் வெட்கமடைந்து, ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான். பிறகு, "பொழுது விடிந்து விட்டதா? புறப்படலாமா?" என்று கேட்டுக்கொண்டு எழுந்தான்.

"அழகுதான்! இப்போது அர்த்த ராத்திரி. விடுதியில் பத்திரமாய்ப் படுத்திருக்கும்போதே இப்படிப் பயந்து உளறுகிறவன், நடுநிசியில் தனி வழியே எப்படிப் போவாய்? அப்படிப் போவதாயிருந்தால், 'அம்மா!' 'அம்மா!' என்று கனவிலே அலறினாயே, அந்தப் புண்ணியவதி எங்கே இருக்கிறாள் என்றாவது சொல்லி விட்டுப் போ! பிள்ளையின் கதியைப் பற்றி அன்னைக்குச் செய்தி யாவது சொல்லி அனுப்புகிறோம்" என்றான் வஜ்ரபாஹு.

இந்த வார்த்தைகள் எல்லாம் கூரிய முட்களைப் போல் பரஞ்சோதியின் உள்ளத்தில் சுரீல் சுரீல் என்று தைத்தன.

"நீங்கள் நேற்றுச் சாயங்காலம் பயங்கரமான கதைகளைச் சொன்னீர்கள் அல்லவா? அதனால்தான் சொப்பனம் காணும்படி ஆயிற்று" என்று பரஞ்சோதி சமாதானம் சொன்னான்.

"போகட்டும்! இனிமேலாவது சற்று நேரம் நிம்மதியாய்த் தூங்கு. இந்தத் தீபம் இங்கேயே இருக்கட்டும்" என்றான் வஜ்ர

அமரர் கல்கி

பாஹு" என்னும் வீரன்.

அவ்விதமே தீபத்தை வைத்துவிட்டு, வஜ்ரபாஹுவும் விடுதித் தலைவனும் அங்கிருந்து சென்றார்கள்.

அவர்கள் போன பிறகு, பரஞ்சோதி கண்களை மூடிக்கொண்டு தூங்கப் பார்த்தான். ஆனால் தூக்கம் வரவே இல்லை. புரண்டு புரண்டு படுத்தான். எழுந்து உட்கார்ந்தான். மறுபடியும் படுத்தான். அப்படியும் தூக்கம் வரவில்லை. அவர்கள் வைத்து விட்டுப் போன தீபம், ஒரு பக்கம் அவனுடைய கண்களைக் கூசச் செய்தது. விளக்கை அணைத்து விடலாமா என்று ஒருகணம் நினைத்தான். உடனே, வேறு ஒரு நினைவு பளிச்சென்று தோன்றியது. எழுந்து உட்கார்ந்து, தலைமாட்டில் துணியைச் சுற்றி வைத்திருந்த, மெல்லிய சிறு மூங்கிற் குழாயை எடுத்தான். அதற்குள்ளிருந்த ஓலைக் கற்றையை வெளியில் எடுத்துத் தீபம் வைத்திருந்த இடத்துக்கு அருகிலே சென்று உட்கார்ந்தான்.

ஓலையைப் பிரித்து வைத்துக்கொண்டு, உற்றுப் பார்த்தான். ஆகா! என்ன ஏமாற்றம்! அதில் ஏதோ எழுதியிருந்தது! மிக நெருக்கமாக எழுதியிருந்தது! ஆனால், என்ன எழுதியிருந்தது! அதுதான் தெரியவில்லை. அதில் எழுதியிருந்தது தமிழ் எழுத்து அல்ல; ஸம்ஸ்கிருதமோ, பிராகிருதமோ, பாலி பாஷையோ தெரியவில்லை. ஆகா! கல்வி ஒருவனுக்கு எவ்வளவு அவசியமானது! தாய்ப் பாஷை ஒன்று மட்டும் தெரிந்தால்கூடப் போதாது. ஒரு தேசத்தில் வழங்கும் மற்ற பாஷைகளும் தெரிந்திருக்க வேண்டும். இத்தனை காலமாகக் கல்வி பயிலாமல் – தமிழைக்கூட நன்றாய்ப் பயிலாமல் காலங் கழித்துவிட்டதை நினைத்து பரஞ்சோதி அப்போது வருத்தப்பட்டான்.

'இத்தனை காலங்கழித்துக் காஞ்சிக்குக் கல்வி பயிலுவதற்காகக் கிளம்பி வந்தோமே? அதாவது நடந்ததா? நாம் வந்த சமயத்தில்தானா இந்த யுத்தக் குழப்பங்கள் எல்லாம் வர வேண்டும்? இந்த ஆபத்தான காரியம் நம் தலையிலேயா சுமர வேண்டும்?' – இப்படி எண்ணமிட்டுக் கொண்டேயிருந்தபோது, பரஞ்சோதிக்குத் தூக்கம் வருகிறாற் போல் இருந்தது. கண்ணிமைகள் கனத்துத் தாமாகவே மூடிக் கொள்ளப் பார்த்தன. தீபத்தடியிலிருந்து எழுந்து, ஏற்கெனவே படுத்திருந்த மேடைக்குப் போகப் பரஞ்சோதி எண்ணினான். ஆனால், அந்த எண்ணத்தை அவனால் நிறைவேற்ற முடியவில்லை. தூக்க மயக்கம் அவனை மீறி மேலோங்கிற்று. அப்படியே தரையில் படுத்தான். சிறிது நேரத்தில் நினைவற்ற நிலையை அடைந்தான். அவன் கையிலிருந்து நழுவிய ஓலை தரையில் கிடந்தது.

சற்றுப் பொறுத்து, அறைக்கதவு மெதுவாகத் திறந்தது. வஜ்ரபாஹு ஓசைப் படாமல் உள்ளே வந்தான். தரையில் கிடந்த ஓலைச் சுருளை எடுத்துக்கொண்டு அறையின் கதவை மீண்டும் சாத்திவிட்டு வெளியேறினான்.

வெளியேறிய வஜ்ரபாஹு இரண்டு மூன்று அறைகளைக் கடந்து சென்று, விடுதியின் ஒரு மூலையில் இருந்த பெரிய அறைக்குள் புகுந்தான். அங்கே குத்துவிளக்கு ஒன்று எரிந்துகொண்டிருந்தது. அதன் அருகில் உட்கார்ந்து, பரஞ்சோதியிடமிருந்து அபகரித்துக்கொண்டு வந்திருந்த ஓலையைக் கவனமாகப் படிக்கலானான்.

முதலில் சற்று நேரம் அவன் ஏட்டையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது அவனுடைய புருவங்கள் நெரிந்தன; நெற்றி சுருங்கியது. சில சமயம் மேலே நிமிர்ந்து, கூரையை நோக்கியவண்ணம் யோசித்தான். சில சமயம் கையை நெரித்துக்கொண்டு, பூமியை நோக்கிய வண்ணம் சிந்தித்தான். சற்று நேரம், தீபத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தான். கடைசியாக, அவனுடைய முகம் பளிச்சென்று மலர்ந்தது. உடனே, விரைவாகவும் உற்சாகத்துடனும் அந்த ஓலைக்கட்டிலிருந்த நாலு ஏடுகளையும் படித்து முடித்தான்.

பிறகு, பக்கத்தில் வைத்திருந்த வெற்று ஓலையில், நாலு எடுத்து, அதே அளவில் கத்திரித்து வைத்துக்கொண்டு எழுதத் தொடங்கினான். துரிதமாக எழுதி முடித்துப் பரஞ்சோதி கொண்டு வந்திருந்த ஓலையையும் இதையும் ஒப்பிட்டு

நோக்கினான். பரஞ்சோதியின் ஓலையை அவ்விடமே பத்திரப்படுத்தி வைத்து விட்டுத் தான் எழுதிய ஓலையுடனே பரஞ்சோதியின் அறையை நோக்கிச் சென்றான். அங்கே பரஞ்சோதி இன்னும் தீபத்துக்குப் பக்கத்தில் மயங்கிக் கிடப்பதையும் தீபம் அணையும் தறுவாயில் இருப்பதையும் பார்த்தான். அறையில் அப்போது இலேசான புகை - ஒருவித அபூர்வ மணம் கமழ்ந்து கொண்டிருந்த புகை சூழ்ந்திருந்தது. மூக்கைத் துணியினால் மூடிக் கொண்டு வஜ்ரபாஹு அவ்வறைக்குள் நுழைந்தான். ஓலை முன்னே கிடந்த இடத்திலேயே தான் கொண்டு வந்த ஓலையைப் போட்டு விட்டுத் தீபத்தில் பற்றி எரிந்து கொண்டிருந்த திரியை உள்ளுக்குள் இழுத்து, எண்ணெயில் நனைத்து அணைத்தான். இவ்வளவும் அதி சீக்கிரமாகச் செய்து விட்டு, மறுகணமே அந்த அறையை விட்டு வெளியேறினான்.

மீண்டும் தன்னுடைய அறைக்குச் சென்று, வஜ்ரபாஹு, பரஞ்சோதியிடமிருந்து தான் அபகரித்த ஓலையை இன்னொரு தடவை நன்றாகப் படித்துப் பார்த்துவிட்டு, அதை ஏடு ஏடாக எடுத்து, விளக்கின் ஜுவாலையில் காட்டித் தகனம் செய்தான். அப்படித் தகனம் செய்து கொண்டிருந்தபோது, அவனுடைய உள்ளம் தீவிரமாகச் சிந்தனை செய்துகொண்டிருந்தது என்பதை அவனுடைய முகக்குறி காட்டியது.




நாலு ஏடுகளையும் எரித்
துச் சாம்பலாக்கியபிறகு,
இன்னும் நாலு வெற்று ஏடு
களை எடுத்து, எழுத்தாணி
யினால் எழுதத் தொடங்
கினான். முன்போல் இம்முறை
இவன் வேகமாகவும் இடை
விடாமலும் எழுதவில்லை.
இடையில் நிறுத்தி நிறுத்தி,
யோசித்து யோசித்து எழுதி
னான். அவன் எழுதி முடித்து,

ஓலை ஏடுகளைக் குழாயில் போட்ட போது, பலபலவென்று கிழக்கு வெளுத்தது. உச்சி வானத்துக்குச் சற்று மேற்கே காணப்பட்ட பாதி மதி, பிரகாசத்தை இழந்து, பாண்டு வர்ணம் அடைந்து கொண்டிருந்தது. விண்மீன்களும் ஒளி குன்றத் தொடங்கின. பட்சிகளின் தனிக் குரல்கள், அங்கொன்றும் இங்கொன்றுமாய்க் கேட்கலாயின.

பரஞ்சோதி கண் விழித்துப் பார்த்தபோது, அறைக்குள்ளே, பலகணி வழியாக, உதய நேரத்தின் இளம் வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. அருகில், தரையில் கிடந்த ஓலையை அவன் ஆர்வத்துடன் தாவி எடுத்துக்கொண்டு, அதை உடனே குழாயில் போட்டு, இடுப்பிலும் செருகிக் கொண்டான். முதல்நாள் இரவில் அவன் பயங்கரக் கனவு கண்டது, வஜ்ரபாஹுவும் விடுதித் தலைவனும் வந்து, விளக்கு வைத்து விட்டுப் போனது, தூக்கம் பிடியாமல், விளக்



கண்டை வந்து, ஓலையைப் படிக்கத் தொடங்கியது, கண்ணைச் சுற்றிக் கொண்டு தூக்கம் வந்தது –ஆகிய எல்லாம் அவனுடைய நினைவுக்கு வந்தன. இன்னமும் அவன் தலை, இலேசாகச் சுற்றிக்கொண்டிருந்தது. வயிற்றிலும் கொஞ்சம் சங்கடம் இருந்தது.

ஏதோ ஓர் அபூர்வமான வாசனை. அவ்வறையில் சூழ்ந்திருப்பதையும் அவன் உணர்ந்தான். ஆனால், இதிலெல்லாம் அவனுடைய கவனம் அதிக நேரம் நிற்கவில்லை. 'ஓலையைத் தரையில் போட்டுவிட்டு, இவ்வளவு நேரம் தூங்கி விட்டோமே, என்ன அசட்டுத்தனம்!' என்கிற எண்ணத்தினால் ஏற்பட்ட வெட்கம், மற்ற நினைவுகளையெல்லாம் போக்கடித்தது. அதேசமயத்தில் குதிரையின் காலடிச் சப்தம் காதில் விழவே, விழுந்தடித்து எழுந்திருந்து வாசற்புறம் சென்றான். அங்கே விடுதித் தலைவனும் காவலர்களும் நின்று, சற்றுத் தூரத்தில் போய்க்கொண்டிருந்த குதிரையைப் பார்த்த வண்ணம் இருப்பதைக் கண்டான்.

"ஓஹோ! வஜ்ரபாஹுவா போகிறார்? அதற்குள்ளே புறப்பட்டு விட்டாரா?" என்று பரஞ்சோதி வினவியதைக் கேட்டு அவர்கள் அவன் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள்.

குதிரை கண்ணுக்கு மறைந்த பிறகு, "ஐயா! வஜ்ரபாஹு என்கிறவர் யார்? உங்களுக்குத் தெரியுமா?'' என்று பரஞ்சோதி காவலர்களைப் பார்த்து கேட்டான்.

''உன்னைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்றல்லவா நினைத்திருந்தோம்!'' என்று காவலர்களில் ஒருவன் கூறினான்.

"இன்னாரென்று தெரியாமலா நேற்றிரவு அவருக்கு அவ்வளவு மரியாதை செய்தீர்கள்?"

"காரணமில்லாமல் மரியாதை செய்யவில்லை. அவரிடம் சிங்க முத்திரை போட்ட இலச்சினை இருந்ததே, உனக்குத் தெரியாதா?"

"சிங்க இலச்சினையென்றால் அதில் என்ன விசேஷம்?"

"வெகு முக்கியமான இராஜாங்கக் காரியமாகப் போகிறவர்கள் சிங்க இலச்சினை வைத்திருப்பார்கள்!"

காவலர்களின் ஒருவன், ''அவர் யாராக இருக்கும்?'' என்று மற்றவர்களைப் பார்த்துக்கேட்டான்.

''அமைச்சர்களில் ஒருவராயிருக்கலாம்'' என்றான் ஒருவன்.

"சேனாபதி கலிப்பகையை நீக்கிவிட்டு வேறொரு சேனாபதியைச் சக்கரவர்த்தி அனுப்பப் போவதாகக் கேள்வி. புதிய சேனாபதியாக இருந்தாலும் இருக்கலாம்" என்றான் ஒருவன்.

"சேனாபதியை மாற்றுவதற்கு என்ன காரணம்? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான் விடுதித் தலைவன்.

"வேறு காரணம் வேண்டுமா, என்ன? வாதாபி சைனியம், வடபெண்ணையை நெருங்கி விட்டதாகக் கேள்வி. அப்படியிருக்க, நம் சேனாபதி, வடக்கு மண்டலத்துச் சைனியத்தை, இருந்த இடத்திலேயே வைத்துக் கொண்டிருப்பது போதாதா?"

''சக்கரவர்த்தியிடம் யோசனை கேட்கச் சேனாபதி கலிப்பகை, காஞ்சிக்கே போயிருக்கிறாராமே?''

''அதனால்தான் சக்கரவர்த்திக்குக் கோபமாம். 'நீர் சேனாபதி பதவி வகித்தது போதும்' என்று சொல்லி விட்டாராம்!''

இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த பரஞ்சோதி, "ஐயா! என் குதிரை எங்கே? நானும் கிளம்ப வேண்டும்" என்றான்.

பரஞ்சோதியைப் பற்றி அவர்கள் இன்னும் சிறிது விசாரித்துவிட்டு, "நீ எங்கே போகிறாய்?'' என்று கேட்டார்கள்.

''வட பெண்ணைக் கரையிலுள்ள பௌத்த மடத்துக்குப் போக வேண்டும். இன்னும் எவ்வளவு தூரம் இருக்கும்?" என்று பரஞ்சோதி வினவினான்.

அவர்கள் வஜ்ரபாஹு சென்ற திசையைக் காட்டி, "இந்த வழியே போனால் உச்சி வேளையில் வட பெண்ணையைச் சேரலாம். அங்கிருந்து கரையோடு மேற்கே போக வேண்டும். போனால், பாபாக்னி நதி, வடபெண்ணையுடன்

கலக்கும் இடத்தில், பௌத்த மடம் இருக்கிறது!" என்று கூறி அவனுடைய குதிரையையும் கொடுத்தார்கள்.

பரஞ்சோதி குதிரை மீதேறிக் கிளம்பியபோது, 'அடடா! வஜ்ரபாஹுவும் இதே வழியில் போகிறவராயிருக்க, சற்று முன்னாலேயே எழுந்து அவருடனே கிளம்பாமல் போனேனே! அவருடன் போயிருந்தால் வழிப் பிரயாணம் எவ்வளவு உற்சாகமாக இருந்திருக்கும்? களைப்பே தெரியாமல் கதை கேட்டுக் கொண்டே ஆனந்தமாய்ப் பிரயாணம் செய்திருக்கலாமே?' என்று எண்ணமிட்டான்.

## முப்பத்து நான்காம் அத்தியாயம்

# மடாலயம்

பரஞ்சோதிக்கு, முன் அத்தியாயங்களில் கூறிய ஆச்சரியமான அனுபவங்கள் நேர்ந்து கொண்டிருந்த அதே தினம் மாலை நேரத்தில், காஞ்சி மாநகரில் அவனைப் பற்றிப் பேச்சு நடந்து கொண்டிருந்தது. பல்லவ குலந் தழைக்க வந்த குமார சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மரும் சைவந் தழைக்க வந்த திருநாவுக்கரசு சுவாமிகளும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

மாமல்லபுரத்திலிருந்து திரும்பி வந்த அன்றிரவு மகேந்திர சக்கரவர்த்தி தம் செல்வப் புதல்வரை அழைத்துக்கொண்டு மாறுவேடத்துடன் கோட்டைக்கு வெளியே சென்றார். குதிரைகளை ஒரு மறைவான இடத்தில் நிறுத்திவிட்டு மங்கலான நட்சத்திர வெளிச்சத்தில் மதிலைச் சூழ்ந்திருந்த அகழியின் கரையோரமாக அவர்கள் நடந்துசென்றார்கள்.

திடீரென்று அகழியில் படகு செலுத்தும் சப்தம் கேட்டு நரசிம்மர் அளவற்ற வியப்புக்கு உள்ளானார். அவரைச் சப்தம் செய்ய வேண்டாமென்று சமிக்ஞை காட்டினார் மகேந்திரர். இருவரும் அருகில் இருந்த புதரில் மறைந்துகொண்டார்கள்.

ஆம்; படகு ஒன்று அகழியில் சென்று கொண்டிருந்தது. அதை ஓட்டியவன் சப்தம் அதிகமாகக் கேளாதபடி சர்வ ஜாக்கிரதையாகத் துடுப்புகளைப் போட்டுக்கொண்டிருந்தான். படகு அக்கரையில், அதாவது, மதில் ஓரத்தில் போய் நின்றது. அதிலிருந்து இருவர் இறங்கினார்கள். அந்தச் சிறு படகை அவ்விருவருமாக இழுத்துக் கரையேற்றினார்கள். மதிலின் பக்கத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த ஒரு புதரின் மறைவில் அதைத் தள்ளினார்கள்.

மதிலண்டை சென்று அவர்கள் நின்றது ஒரு கணம்! அடுத்த கணத்தில் இருவரும் மாயமாய் மறைந்தார்கள். ஒரு பிரம்மாண்டமான சிலந்திப் பூச்சியானது தன் அருகில் வந்த இரண்டு கொசுக்களை ஒரு நொடியில் நாக்கை நீட்டி விழுங்கி விட்டு பழையபடி சலனமற்றிருப்பதுபோல், அந்தக் காஞ்சிக் கோட்டையானது தன்னை நெருங்கிய இருவரையும் கண்ணிமைக்கும் நேரத்தில் விழுங்கிவிட்டு மறுபடியும் அசைவற்றிருப்பது போலத் தோற்றமளித்தது.

இதையெல்லாம் பார்த்ததனால் குமார சக்கரவர்த்திக்கு உண்டான பிரமிப்பு நீங்குவதற்கு முன்னால், அங்கு இன்னொரு வியப்பான சம்பவம் ஏற்பட்டது. பக்கத்திலிருந்த வேறொரு புதரிலிருந்து ஓர் ஆள் திடீரென்று கிளம்பி வந்தான். அவன் சக்கரவர்த்திக்குத் தண்டம் சமர்ப்பித்து விட்டுப் பணிவுடன் நின்றான்.

அவனைப் பார்த்துச் சிறிதும் வியப்புறாத மகேந்திரர், "சத்ருக்னா! இந்தச் சுவரிலுள்ள கதவு எங்கே திறக்கிறதென்று ஊகிக்கிறாய்?" என்று கேட்டார்.

"இராஜ விஹாரத்தில் புத்தர் சிலைக்குப் பின்னால் திறக்கலாம், சுவாமி!" என்றான் சத்ருக்னன்.

"சுவரில் கதவு வைத்தவன் மிகவும்

கெட்டிக்காரனாக இருக்க வேண்டும்; இல்லையா?''

''கதவு வைத்தவனைக் காட்டிலும் மேலே வர்ணம் பூசியவன் கெட்டிக்காரன் பிரபு! பகலில் இவ்விடமெல்லாம் வந்து பார்த்தேன். கதவு ஒன்று இருப்பதாகவே தெரியவில்லை.''

''ரொம்ப நல்லது. சத்ருக்னா! நாளைக்கு நான் வடதிசைக்குப் பிரயாணப்படுகிறேன்.''

''பிரபு! நானும் ஆயத்தமாயிருக்கிறேன்.''

''இல்லை; நீ என்னுடன் வர வேண்டாம். மறு கட்டளை பிறக்கும்வரையில் இந்த நாகநந்தியை நீ தொடர வேண்டும்...''

''தொண்டை நாட்டை விட்டு அவர் போனால்...''

''அப்போதுந்தான்.''

''சோழ நாடு, பாண்டியநாடு சென்றால்...''

''பின்னோடு போக வேண்டும். யாரிடமாவது பிக்ஷு''



ஓலை ஏதாவது அனுப்பினாரா னால்...?''

"என்ன செய்ய வேண்டுமென்று தெரியும், சுவாமி! ஆனால் செங்காட்டங்குடி வாலிபனிடம் அவர் அனுப்புகிற ஓலை...?''

''அதை நானே பார்த்துக் கொள்கிறேன். எந்த முகாந்திரத்தினாலும் நாகநந்தியைத் தவற விடக்கூடாது. ஏதாவது விசேஷம் இருந்தால் எனக்குச் செய்தியனுப்ப வேண்டும்.''

"ஆக்ஞை, பிரபு!"

சக்கரவர்த்தியும் நரசிம்மரும் அங்கிருந்து அரண்மனைக்குத் திரும்பியபோது, "இராஜ விஹாரத்தை உடனே மூடிக் கோட்டை மதிலிலுள்ள துவாரத்தையும் அடைத்து விட வேண்டாமா?" என்று மாமல்லர் கேட்டார்.

"கூடாது குழந்தாய், கூடாது, அதற்குக் காலம் வரும்போது செய்யலாம். இப்போது பகைவர்களின் சூழ்ச்சிகளை அறிவதற்கு அந்த இரகசியக் கதவு நமக்கு உதவியாக இருக்கும்" என்று சக்கரவர்த்தி மறுமொழி கூறினார்.

சக்கரவர்த்தி வடதிசைக்குப் பிரயாணமான பிறகு, காஞ்சிக் கோட்டைக்குள்ளே மாமல்லருக்குப் பொழுது போவது மிகவும் சிரமமான காரியமாயிருந்தது. ஆயனர் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின்னால் புத்த பிக்ஷுவும் பரஞ்சோதியும் ஒளிந்திருந்ததை மகேந்திரர் ஊகித்தறிந்தது, மதில் சுவரில் இருந்த இரகசியக் கதவை அவர் கண்டு பிடித்தது முதலிய காரியங்களினால் சக்கரவர்த்தியிடம் குமாரருக்கு ஏற்கெனவே இருந்த மதிப்பு பன்மடங்கு அதிகமாகியிருந்தது. ஆகவே காஞ்சிக் கோட்டைக்கு வெளியே போகக் கூடாது என்ற தந்தையின் கட்டளையை மீறும் எண்ணமே அவருக்கு உதிக்கவில்லை.

ஆனால், இராஜ்யத்தில் பெரிய பெரிய காரியங்கள் நடந்துகொண்டிருக்கும்போது, மகத்தான யுத்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தபோது, கோட்டைக்குள்ளே ஒரு காரியமுமின்றி அடைந்து கிடப்பது அவருக்குப் பரம சங்கடத்தை அளித்தது.

கழுக்குன்றத்தில் பல்லவ சைனியங்கள் திரண்டு கொண்டிருக்கின்றனவே, அங்கே போய்ப் படைகளைப் பார்க்கவாவது தந்தையிடம் அனுமதி பெறாமல் போனோமே என்று மாமல்லர் ஏக்கமடைந்தார். அப்பால் மாமல்லபுரம் போகவும் அவரிடம் அனுமதி பெற்றிருந்தால்...?

ஆம், எத்தனையோ எண்ணங்களுக்கிடையில் சிவகாமியைப் பற்றிய நினைவும் மாமல்லருக்கு அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. அவள் தீட்டிய தாமரைக்கும் மானுக்கும் மத்தியில் தாம் வரைந்திருந்த வேலை அவள் பார்த்தாளோ, இல்லையோ? பார்த்திருந்தால், அதன் பொருளைத் தெரிந்து கொண்டிருப்பாளா? அதனால் திருப்தியடைந்திருப்பாளா?

தந்தையிடம் நாம் வாக்குக் கொடுத்திருக்கும் விஷயம் அவளுக்குத் தெரியாதல்லவா? ஆதலின், தன்னைப் பார்க்க வரவில்லையே என்று அவளுக்குக் கோபமாகத்தான் இருக்கும். அவள்தான் இங்கு ஏன் வரக்கூடாது...? ஆனால், அவள் எப்படி வருவாள்? ஆயனருக்குத்தான் தந்தை அவ்வளவு கடுமையான கட்டளையிட்டிருக்கிறாரே, வேலையை விட்டு விட்டு அவர் வர முடியாதல்லவா?

இவ்விதம் குமார சக்கரவர்த்தியின் உள்ளம் பலவித சிந்தனைகளில் ஆழ்ந்திருந்தது. செய்வதற்கு வேலை ஒன்றும் இல்லாதபடியால் அவருடைய மனவேதனை அதிகமாயிற்று.

இந்த நிலைமையில் திருநாவுக்கரசு சுவாமிகள் காஞ்சிக்குத் திரும்பி வந்துவிட்டார்கள் என்று அறிந்ததும் மாமல்லர் அவரைத் தரிசித்து விட்டு வரலாமென்று எண்ணினார். சுவாமிகளிடம் தெரிவிக்கும்படி சக்கரவர்த்தி கூறியிருந்த செய்தி ஒன்று இருந்தது. எனவே, ஒருநாள் மாலை ஏகாம்பரேஸ்வரர் திருக்கோயிலுக்கருகிலிருந்த நாவுக்கரசர் மடாலயத்துக்கு அவர் சென்றார்.

நாவுக்கரசர் குமார சக்கரவர்த்தியை அன்புடன் வரவேற்றுத் தாம் சென்றிருந்த

ஸ்தலங்களின் மகிமையைப் பற்றிக் கூறினார். சக்கரவர்த்தி வடநாடு சென்றிருப்பது பற்றியும், பல்லவ இராஜ்யத்தில் யுத்தம் வந்திருப்பதைப் பற்றியும் கேட்டுத் தெரிந்துகொண்டார்.

பின்னர் சுவாமிகள் கூறினார்: "மாமல்லரே! சக்கரவர்த்தியிடம் ஒரு விஷயம் தெரிவித்துக் கொள்ள எண்ணியிருந்தேன். அவர் இல்லாதபடியால் தங்களிடம் சொல்லுகிறேன். இந்த இடத்திலிருந்து நமது மடத்தை அப்பாற்படுத்தித் திருமேற்றளியில் அமைத்துக் கொள்ள விரும்புகிறேன். இந்த ஏகாம்பரர் கோயில் நகருக்கு மத்தியிலே இருப்பதால் இங்கே அமைதி கிட்டுவதில்லை. மேலும், இங்கே நம்முடைய சீடர்களுக்கும் பக்கத்திலுள்ள கடிகை ஸ்தானத்தில் வடமொழி பயிலும் மாணாக்கர்களுக்கும் ஓயாமல் வாக்கு வாதமும் போட்டியும் நடந்துகொண்டிருக்கின்றன. ஆரியம், தமிழ் இரண்டையும் அளித்த எம்பெருமான் ஒருவரே என்று அவர்களுக்கு எவ்வளவோ சொல்லியும் பயனில்லை. இளங்காளைப் பருவமல்லவா? அப்படித்தான் கொஞ்சம் முரட்டுத்தனம் இருக்கும். ஏகாம்பரநாதர் கோயிலில் கூட்டம் போட்டிருக்கும் காபாலிகர்களின் தொல்லையும் பொறுக்க முடியவில்லை. அதனால் திருமேற்றளியில் எழுந்தருளியிருக்கும் இறைவன் சந்நிதிக்குப் போய் விடலாமென்று பார்க்கிறேன். இவ்விடத்தைக் காட்டிலும் அங்கே அமைதியாயிருக்கிறது.

சிரத்தையுடன் கேட்டுக் கொண்டிருந்த குமார சக்கரவர்த்தி கூறினார்: "சுவாமி! முன்பு ஏகாம்பரர் கோவிலிலிருந்து இந்தக் காபாலிகர்களையெல்லாம் துரத்தி விட வேண்டுமென்று சொன்னேன். தாங்கள் தான் வேண்டாம் என்றீர்கள். தங்கள் விருப்பத்தின்படி திருமேற்றளியில் மடத்தை அமைத்துக் கொள்வதில் ஆட்சேபமில்லை. ஆனால், சக்கரவர்த்தி தங்களிடம் தெரிவிக்கச் சொன்ன விஷயத்தைத் தெரிவிக்கிறேன். பிறகு, தங்கள் உசிதம் போல் செய்யலாம். யுத்தம் தொண்டை நாட்டுக்கே வந்து விடலாமென்றும், இந்தக் காஞ்சி நகரம் முற்றுகைக்கு உள்ளாகலாமென்றும் பல்லவேந்திரர் கருதுகிறார். யுத்தம் ஒருவிதமாக முடியும் வரையில் தாங்கள் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் தீர்த்த யாத்திரை செல்வது நலம் என்ற அவருடைய அபிப்பிராயத்தைத் தங்களுக்குத் தெரியப்படுத்தச் சொன்னார். அதுவரையில் நமது மடத்தை மூடி வைத்து விடுவது உசிதம் என்றும் சக்கரவர்த்தி கருதுகிறார். இதைப் பற்றி யோசித்து தங்கள் சித்தம் போல் முடிவு செய்யலாம்."

நாவுக்கரசர் சிறிது நேரம் சிந்தனை செய்துவிட்டு, "சக்கரவர்த்தியின் யோசனை எனக்கும் சம்மதமாகத்தான் இருக்கிறது. ஆனால், முன்னமே தெரியாமல் போயிற்று. திருமேற்றளியில் மடத்திருப்பணி ஆரம்பிப்பதற்காக ஆயனரை வரும்படி நான் சொல்லியனுப்பியிருக்கிறேன்... ஒருவிதத்தில் அதுவும் நல்லதுதான். நீண்ட யாத்திரை கிளம்புவதற்கு முன்னால் ஆயனர் சிற்பியாரை ஒருதடவை பார்த்து விட்டுப் போகலாம்" என்றார்.

ஆயனர் வருகிறார் என்று கேட்டதும் மாமல்லரின் உள்ளத்தில் குதூகலம் உண்டாயிற்று. "ஆயனர் எப்போது வருவார் சுவாமி?" என்று ஆர்வத்துடன் கேட்டார்.

"ஒருவேளை இன்று மாலையே வரக்கூடும்" என்று நாவுக்கரசர் பெருமான் கூறியதும், ஆயனர் வரும் வரையில் தாமும் அங்கே இருப்பது என்று மாமல்லர் தீர்மானித்துக்கொண்டார். "சுவாமி! திருச்செங்காட்டங்குடியிலிருந்து தங்களுக்கு ஓலை கொண்டு வந்த வாலிபனை ஆயனர் நாகார்ஜுன பர்வதத்துக்கு அனுப்பியிருக்கிறாரே, தெரியுமா?" என்று கேட்டார்.

"அது என்ன? எனக்கு ஒன்றும் தெரியாதே?" என்று சுவாமிகள் சொல்ல, நரசிம்மர் பரஞ்சோதியைப் பற்றித் தாம் அறிந்திருந்த விவரங்களைக் கூறினார்.

அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, வாசற்புறமிருந்து உள்ளே ஒரு சீடன் விரைவாக வந்து, "ஆயனர் வருகிறார்!" என்று அறிவிக்க, எல்லாருடைய கண்களும் வாசற்புறம் நோக்கின.

(தொடரும்)

# என்னை உலுக்கிய

**'விவேக்' என்ற உடனேயே டப்புனு, சிரிப்புதான் நினைவுக்கு வரும். எல்லோரையும் வயிறு குலுங்க சிரிக்க வைக்கிற அவருக்கும் சோகங்கள், துக்கங்கள் இருக்காதா என்ன?**

"அழுது அழுது கன்னங்கள் வீங்கி, அடம்பிடித்த என்னை, குண்டுகட்டாகத் தூக்கிப் போய், ஆரம்பப்பள்ளிக் கூடத்தில் வீசினார்களே அதுதான் என் வாழ்க்கையின் முதல்சோகம். ஒரு நாள் பள்ளி முடிந்து வரும் வழியில், தன்னந்தனியே ஒரு நாய்க்குட்டி அழுது கொண்டிருந்தது. அதை வீட்டிற்குத் தூக்கி வந்துவிட்டேன். வரும் வழியிலேயே 'பப்பி' என்று பெயர் கூட வைத்து விட்டேன். பப்பியும் நானும் சேர்ந்தே வளர்ந்தோம். ஒருமுறை எனது சகோதரியோடு தாமிரபரணி ஆற்றில் குளித்துக் கொண்டிருந்தேன். கரையில் பப்பி உட்கார்ந்து எங்களை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தது. திடீரென்று வந்த வெள்ளப் பெருக்கு என்னை ஒரே சுழற்றாகச் சுழற்றி இழுத்துக் கொண்டு போனது. சகோதரிக்கோ நீச்சல் தெரியாது. நான் "அக்கா!" அல்லது "அம்மா...!" என்று அலறுவதற்குப் பதிலாக, "பப்பி.." என்று கத்தினேன். அவ்வளவுதான் தண்ணீருக்குள் குதித்து என்னை நோக்கி வேக வேகமாக நீந்தி வந்த பப்பி, என் சட்டையைப் பிடித்து கவ்வி என்னைக் கரையில் கொண்டு வந்து சேர்த்தது.

நாட்டு நாய் என்று நாம் மட்டரகமாகச் சொல்கிற எனது பப்பியின் வீரம், நன்றியுணர்வு பற்றி இப்போது நினைத்தாலும் சிலிர்க்கிறது. இப்படி எனது உயிர்த்தோழனாக இருந்த பப்பிக்கு அதன் முதுமைக் காலத்தில் வெறி பிடித்துவிட்டது. எல்லோரும் 'அடித்துக் கொன்றுவிடு' என்றார்கள். அதன் உமிழ் நீரிலிருந்தே 'ஹைட்ரோ போபியா வைரஸ்' பரவிவிடும் என்றார்கள். 'முடியவே முடியாது' என்று அழுது புரண்டேன். வீட்டின் பின்புறம் யார் கண்ணிலும் படாமல் பப்பியைக் கட்டி வைத்திருந்தோம். ஆனால் பப்பி சாப்பிடவே இல்லை. யாரும் அதன் பக்கத்தில் போக பயந்தார்கள். நான் தைரியமாக அதன் அருகில் சென்று, சாப்பாடு இருந்த தட்டை நகர்த்தி அதன் வாய் அருகே வைத்தேன். சடாரென்று என் கையை வேகமாகக் கவ்வியது. ஆனால் அதில் ஒரு பொய்மை இருந்தது. என்ன நினைத்ததோ தெரியவில்லை. என்னைக் கடிக்காமல் சாப்பாட்டுத் தட்டைக் கடித்துக் குதறி பிய்த்து எறிந்துவிட்டது. அடுத்த கணம் என் கண் முன்பாகவே இறந்துபோனது. அன்றுதான் இழப்பின் சோகம் எப்படியிருக்கும் என்று உணர்ந்தேன். இரண்டு நாள் பப்பியை நினைத்து நினைத்து அழுது கொண்டிருந்தேன். உயிர் நண்பனை இழந்தது போன்ற துக்கம் இப்போது நினைத்தாலும் என்னைக் கவ்விக் கொள்ளும்.

சென்னை வந்து, தலைமைச் செயலகத்தில் வேலைக்குச் சேர்ந்தேன். டி.வி.எஸ். 50 வாகனத்தில் அலுவலகத்திற்குப் போய் வருவது வழக்கம். சென்னை கடற்கரை ரயில் நிலையம் அருகேயுள்ள



பாலம் வழியாக வந்து கொண்டிருந்தேன். ஒரு மாட்டு வண்டியில் நிறைய சிமெண்ட் மூட்டைகள். வாயில் நுரை தள்ளியபடி ஒற்றை மாடு கஷ்டப்பட்டு இழுத்துச் சென்று கொண்டிருந்தது. மாட்டை இன்னும் கூர்ந்து கவனித்த போது எனக்குப் பகீர் என்றது. மாட்டின் விலாப் புறங்களில் ரத்தம் வழிந்து கொண்டிருக்கும் காயம். அந்தக் காயத்தின் மேல் தார்க்குச்சியால் குத்தி மாட்டை விரட்டினான் வண்டிக்காரன். எனக்கோ இதயம் கொதித்தது. திடீரென்று என் கண் முன்பாகவே மாடு ரோட்டில்

புலராத தனிமை. அப்போது இராஜாஜி ஹால் வாசலில் நான்கைந்து கார்களும், ஒரு ஆம்புலன்சும் வந்து நின்றன. ஆம்புலன்



# துயரங்கள்!

படுத்துவிட்டது. அப்படியொரு அனிச்சையான கோபம் எங்கிருந்துதான் வந்ததோ தெரியவில்லை. மோட்டார் சைக்கிளை சாலையோரத்தில் நிறுத்திவிட்டுப் போய், வண்டிக்காரனைப் பிடித்து, அடி அடியென்று அடித்து விட்டேன். இரண்டு பக்கமும், டிராபிக் ஜாம். மக்கள் கூடிவிட்டனர். போக்குவரத்துப் போலீசாரும் அங்கே வந்து சேர்ந்தனர். எனக்கு ஆதரவு பெருகிவிட்டதில் சந்தோஷம். ஆனால் அது நீண்ட நேரம் நீடிக்கவில்லை. அந்த மாடு ஸ்தலத்திலேயே இறந்துவிட்டது.

நான் தலைமைச் செயலகத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தபோது இடிபோல் தாக்கிய இன்னொரு துயரம் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆரின் இறப்பு. நாட்டு மக்களுக்கு எம்.ஜி.ஆர். உடல் நலமில்லாமல் இருந்தது தான் தெரியும். திருவல்லிக்கேணியில் தங்கியிருந்த நான் வழக்கம்போல அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்து, இராஜாஜி ஹால் இருக்கும் அரசினர் தோட்டத்திற்குள் வாக்கிங் போய்க்கொண்டிருந்தேன். அங்கே யாருமற்ற,

சிலிருந்து ஒரு கண்ணாடிப் பெட்டியை இறக்கினார்கள். அதில் எம்.ஜி.ஆரின் உடல். நான் அதிர்ந்து போனேன். தமிழகத்திற்கே அவர் இறந்த செய்தி சொல்லப்படாத நிலையில், முதன் முதலாக அவர் உடலைப் பார்த்த குடிமகன் நான் தான், அங்கேயே வெடித்து அழுதேன். காரணம் நான் எம்.ஜி.ஆரின் தீவிர ரசிகன்.

அவரின் இறப்புக்குப் பிறகு என்னை உலுக்கிய இன்னொரு சம்பவம், கலைஞர் கைது! அதைத் தொலைக்காட்சியில் திரும்ப திரும்பப் பார்த்த போதெல்லாம் அழுது கொண்டிருந்தேன்.

தொகுப்பு: **ஜெயன்**

• ப்ரீதி

# கண்ணியம் தாண்டிய கத்தல்!

(பிற பத்திரிகைகளில் வெளியிடப்பட்ட சில வாசகர் கடிதங்கள் – சற்றே சுருக்கமாக)

என்னுடைய தோழி ஒருத்திக்குத் தீர்க்க முடியாத நோய். தன் இறுதி நாட்களை எண்ணிக் கொண்டிருந்த அவளது ஆலோசனையை நான் என் ஆயுளுக்கும் மறக்க முடியாது.

அவள் சொன்னது இதுதான். நம்மில் பெரும்பாலானோர் வாழ்க்கையின் அருமையை உணர்ந்து கொள்ளாதவர்களாக இருக்கிறோம். ஒவ்வொரு கணமும் எவ்வளவு மகத்தானது என்பதை மறந்துவிடுகிறோம். உயிரோடு இருப்பது என்பதன் அருமையை உணர வேண்டுமானால் ஒவ்வொரு நாள் காலையிலும் எழுந்திருக்கும்போது "இன்று ஒரு கிடைத்தற்கரிய நாள் என்முன் இருக்கிறது" என்பதை மனத்தில் கொள்ள வேண்டும். காபி போடுவது முதல் குழந்தையைப் பள்ளிக்கூடத்துக்கு விட்டுவருவதுவரை சின்னசின்ன விஷயங்களில்கூட சந்தோஷப்பட வேண்டும்.

என் தோழி விரைவில் இறக்கப்போகிறவள் என்பதால் அவள் வார்த்தைகள் என்னை உருக்கிவிட்டன. இந்த எளிமையான உண்மையை உணர ஒரு பெரிய சோகம் நம் வாழ்வில் நடந்திருக்க வேண்டும் என்பது அவசியமில்லையே. தோழியின் ஆலோசனைக்குப் பிறகு என் வாழ்வின் பாதையே மாறிவிட்டது.

*(பெமினா – ரஜனி ஆப்ரஹாம், நவீ மும்பை)*

விம்பிள்டன் போட்டியாளர்கள் இப்போதெல்லாம் போட்டிகளை அனுபவித்து ஆடுவதாகத் தெரியவில்லை. போட்டி முடியும் வரை அவர்கள் முகம் உர்ரென்று இருக்கிறது. போட்டியின் முடிவில் வென்றவர் ஒரு கத்து கத்துவார் பாருங்கள், அது பலசமயம் கண்ணியம் என்ற எல்லைக்கோட்டைத் தாண்டியதாக இருக்கும். இது போன்ற சூழல்களில் தோற்றவரின் மனநிலை மிகவும் சங்கடமானது.

பாட் ராஃப்டர் இதில் ஒரு விதிவிலக்காக இருக்கிறார். சமீபத்திய விம்பிள்டன் இறுதிச் சுற்றில் அவரும் இவானிசெவிக்கும் மோதியபோது இவர்களில் யார் வேண்டுமானாலும் வெற்றி பெறலாம் என்ற நிலை. இருந்தும் இவானிசெவிக் வென்றபோது ராஃப்டர் அவரைப் பாராட்டியது மிகவும் இயல்பாக இருந்தது. தவிர, முகம் நிறைய புன்னகையோடு பாசத்துடன் அவர் இவானிசெவிக்கின் தலையைக் கோதியபோது டென்னிஸ் ரசிகர்கள் அனைவரின் மனத்திலும் அவர் இடம்பிடித்துவிட்டார்.

*(அலைவ் – கடாட்சமணி, மதுரை)*

எனக்குப் பக்கத்து ப்ளாட்டில் ஒரு படித்த இனிமையான இளம் பெண்ணும் அவளது கணவனும் வசித்துவந்தார்கள். திடீர்திடீரென்று அவர்கள் இருவரும் சண்டை போடுவதும் அதைத் தொடர்ந்து அவள் பயத்துடன் கத்துவதும் கேட்கும். விசாரித்தபோது கோபத்தில் கைநீட்டும் பழக்கம் அவள் கணவனுக்கு உண்டு என்பது தெரிந்தது. நல்ல உடல்வாகு

கொண்ட அவனை அவளால் எந்த விதத்திலும் எதிர்க்க முடியவில்லை. அதே சமயம் காவல் நிலையம், நீதிமன்றம் என்றெல்லாம் போக அவள் தயாரில்லை. அந்த அளவுக்கு அவனை நேசிப்பதாகக் கூறினாள்.

கொஞ்ச நாட்களாக இது போன்ற கூக்குரல்கள் கேட்கவில்லை. பிறகுதான் தெரிந்தது அந்தப் பெண் நடுவே கராத்தே வகுப்புகளுக்குச் சென்றுவந்ததன் விளைவு இது என்று. கணவன் கையை ஓங்குகையில் செல்லமாக அவன் மூக்கில் ஒரு குத்து விட்டால் அடங்கித்தானே போவான்!

(சவ்வி - பூனம் ஜெயின், டெல்லி)

ஜார்ஜ் புஷ் கவர்ச்சியற்றவர். அதேசமயம் ஓசாமா பின் லேடன் செக்ஸ் அப்பீல் நிறைந்தவர்; இதன் காரணமாகவே சிறந்த தலைவர் என்று ஷோபா டே வர்ணித்திருக்கிறார்.

இப்போது தெளிவாகப் புரிகிறது ஏன் இந்தப் பெண்கள் தவறான வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுத்துவிட்டுப் பிறகு மொத்த ஆண் வர்க்கத்தையும் சாடுகிறார்கள் என்று. என்றாலும் ஒரு பெண்ணின் மனத்தை அறிந்து கொள்வது என்பது ஜாலியாகத்தான் இருக்கிறது.

(டி வீக் - மது அகுந்தி, டெக்ஸாஸ்)

• ராய்டர்

'தில் சாஹ்தா ஹை' படத்தில் ப்ரீதி ஜிந்தாவின் புன்னகையா, நடிப்பா இரண்டில் எது அதிக புத்துணர்வு அளித்தது என்று தீர்மானமாகச் சொல்வது மிகக் கடினம். வருங்காலத்தில் இதைவிட சிறப்பாகவே வருவார்.

ஒரு குடும்பப்படமாக மட்டுமில்லாமல் வேறு பல செய்திகளையும் உள்ளடக்குகிறது இந்தப்படம். மிக நெருங்கிய நட்பிலும் கூட எல்லை தாண்டிவிடக்கூடாது என்பதையும், சில உணர்வுகளை எத்தனை நெருங்கியவர்களிடமும் பகிர்ந்து கொள்ளக்கூடாது என்பதையும் அழகாக விவரிக்கிறது.

(ஸ்டார் டஸ்ட் - மகேஷ் கபனி, புதுடெல்லி)

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்.**

# பருவத்தில் வரும்

டீவி சீரியல் ஒன்றின் நாயகி முகத்தை க்ளோஸ்-அப்பில் காட்டியபோது, அழகான முகத்தில் அங்கங்கே செம்புள்ளிகளாய் முகப்பருக்கள் அப்பிக்கிடந்தன. 'சகிக்கல்லே!' என்றார் நண்பர்.

இந்த முகப்பருக்கள் வரக் காரணம் என்ன? சென்னை மருத்துவக் கல்லூரி சரும நோய் பேராசிரியர் டாக்டர் வி.ஆர். ஜானகி விளக்குகிறார் :

**எப்போது பருக்கள் வருகின்றன, டாக்டர்?**

இதை டீன் (teen) டிஸீஸ் என்பார்கள். அதாவது பதிமூன்று வயதிலிருந்து இருபது வயதுக்குள் வரும் என்பார்கள். இது பழைய கதை. இப்போது நவீன கருத்துப்படி பதிமூன்றிலிருந்து நாற்பது வயது வரை இந்தப் பருக்கள் வருகின்றன. ஆனால் பதிமூன்று முதல் முப்பது வயது வரைதான் இதன் 'பீக்' எனப்படும் உச்சகட்டம்! இதை மருத்துவ மொழியில் Acne என்போம்.

**பெண்களைப் போல் ஆண்களுக்கு அவ்வளவு அதிகமாக வருவதில்லையே?**



• ஜானகி

சரியாய்ப் போச்சு. ஆண்களுக்குத்தான், பெண்களை விட அதிகமாக வருகிறது. ஆனால் பெண்கள் கவலை கொள்ளும் அளவுக்கு ஆண்கள் கவலைப்படுவதில்லை. ஆனால் இப்போது பெண்களைப் போலவே ஆண்களும் கவலைப்பட ஆரம்பித்து விட்டார்கள். சில ஆண்கள், பெண்களை விட அதிகமாகவே கவலைப்படுகிறார்கள் என்பதுதான் உண்மை. அதிலும் ஆண்கள் விஷயத்தில் இது கொஞ்சம் கடுமையாகவே இருக்கும்.

**இதனால் சருமத்துக்குப் பெரிய பாதிப்பு வருமா?**

இதில் நாலு வகை உண்டு. முதல் வகையை 'பிளாக் ஹெட்ஸ்' என்பார்கள். அதாவது கரும்புள்ளி மாதிரி இருக்கும். முகத்திலும் செவிப்புறத்திலும் வரும்.

இரண்டாவது வகை முகப்பரு.

மூன்றாவது வகைப் பரு, முகத்தில் மட்டுமல்லாமல் மார்பிலும், முதுகிலும், கைகளின் மேல்புறத்திலும் வருவது. இவை சீழ்க் கட்டிகளாகவும் ஆவதுண்டு.

நாலாவது வகைதான் மிக மோசமானது. இதுவும் முகத்தைத் தவிர மார்பு, முதுகு மேல்புற புஜங்களிலும் வரும். நாளடைவில் குறையும். ஆனால் இது ஏற்படுத்தும் வடு நிலைத்து விடும். பார்க்க அருவருப்பாக இருக்கும். அதனால்தான் இதை disfiguring Scar என்கிறோம். அதனால், இதுபோன்ற பருக்கள் வரும் போது, ஆரம்பத்திலேயே சிகிச்சை தொடங்கி விட்டால், இந்த வடு முத்திரையிலிருந்து தப்பிக்கலாம்!

**இதற்கு ஹார்மோன்கள் (சுரப்பிகள்) மட்டுமே காரணமா?**

பதிமூன்று வயதில் சுரப்பிகள் உச்சத்தில் இருப்பதால் இது தொடங்குகிறது. கூடவே, சருமத்தின் மேற்பாகத்தில் இருக்கிற (பாக்டீரியா) நுண்கிருமிகளும் காரணம். ஸீபம் (Sebum) எனப்படும் எண்ணெய்ப் பசையும் டீன் ஏஜில் சுரப்பதால், மூன்றும் சேர்ந்து பருக்கள் தோன்றக் காரணமாக இருக்கின்றன.

சில சமயங்களில் இளம் பருவத்தில், சுரப்பிகள் கூடுதலாகச் சுரக்கும் போது, ட்யூமர் போல ஏதாவது இருக்கிறதா என்று பரிசோதித்து விடுவது நல்லது. அதனால் தான் ஹார்மோன்கள் அதீதமாகச் சுரக்கும் போது ஏற்படும் கட்டிகளை, சருமம் கண்ணாடி மாதிரி பிரதிபலிக்கிறது என்கிறார்கள்.

முகப்பரு தங்கள் அழகைப் பாதிப்பதாக டீன் ஏஜர்கள் கருதுவதால்தான் அவர்கள் உடனே சிகிச்சைக்கு வருகிறார்கள்.

நான்கு வகைகளில் முதல் வகைப் பருவை வேண்டுமானால் வீட்டு மருந்து, பியூட்டி பார்லர் சிகிச்சை மூலம் ஓரளவுக்குச் சரிசெய்து விடலாம். ஆனால் அதற்டுத்த மூன்று நிலைகளையும் உடனே சரும



# சரும நோய்!

நோய் நிபுணரிடம் போய், குணப்படுத்திக் கொள்ளுவது நல்லது.

**இரத்தம் சுத்தமாக இல்லாததால்தான் இப்படிப் பரு வருவதாகக் கூட...**

சுத்தக் கட்டுக் கதை. Myth. அதுபோல தினசரி க்ரீம்களும், சாக்லேட்டுகளும் சாப்பிடுவதால் வரும் என்பதும் நம் நாட்டைப் பொறுத்தவரை சரியான காரணங்களல்ல: மேற்கத்திய நாட்டினரைப் போல இங்கே இவை உட்கொள்ளப்படுவதில்லை. அப்பளம், வடாம் போன்ற எண்ணெயில் வறுத்த பண்டங்களைச் சாப்பிடுவதற்கும், முகத்தில் வடியும் எண்ணெய்ப் பசைக்கும் எந்த வித சம்பந்தமும் இல்லை. சிலர் இரண்டையும் போட்டுக் குழப்பிக் கொள்கிறார்கள்!

**முகப்பருவுக்கு மேல் பூச்சு மருந்து மட்டுமே போதுமா?**

மைல்டாக இருந்தால் மேல்பூச்சு மட்டும் போதும். ஆனால் முற்றிய வகைகளுக்கு, உள்ளுக்கும் மருந்துகள் தேவை. அதுவும் மாசக் கணக்கில் சாப்பிட வேண்டி இருக்கும்.

இப்போதெல்லாம் சரும நோய் நிபுணர்கள் நிரந்தரமாக வந்த பருக்களைக் கூட, நவீன வகை அறுவைச் சிகிச்சை மூலமும் கெமிகல் peels மூலமும் சரிசெய்து விடுகிறார்கள். ஆனால் அந்த மோசமான நிலைமை வரை போக விடாமல் முன்பாகவே தடுத்து விடுவதுதான் நல்லது.

சந்திப்பு : **சாருகேசி**

## ரிமோட்

**வி**டை தராத பல கேள்விகளுடன் வெற்றிகரமாக முடிந்துவிட்டது 'சித்தி'. பிரபாவதிக்கு என்ன தண்டனை கிடைத்தது. கொலை செய்தவனுக்குத் தூக்குத் தண்டனை தரப்பட்டதோ, பிரபாவதியின் கொலைகளுக்கு உடந்தையாக இருந்தவர் நிஜமாகவே ஓய்வு பெற்ற உயர் போலீஸ் அதிகாரியா, அப்படியொரு அதிகாரியைக் காட்டியது சரிதானா, அந்த நபருக்கும் பிரபாவதிக்கும் இருந்த ரகசிய உறவு என்ன - இப்படிப் பல குழப்பங்கள் மண்டையைக் குடைந்தன. எனினும் குறை இருந்தால்தான் சிறப்பான படைப்பு என்று சொல்வோரும் உண்டு. When people don't walk out of my plays, I think there is something wrong என்று பிரிட்டிஷ் நாடகாசிரியர் ஆஸ்பர்ன் சொன்னார். எனினும், பிள்ளைகள் மாறிய ரகசியத்தைத் தங்களுக்குள்ளேயே புதைத்துக் கொள்வது என்று சித்தியும் பிரபாவதியும் ராமுவும் தீர்மானித்துக் கொள்வதும், எல்லாம் தெரிந்த யோகி கண்ணீருடன் உண்மையை விழுங்கிக் கொள்ளும் தியாகமும் கவிதைத்தனமாக இருந்தன.

நிறைவு விழாவையொட்டி நடந்த நேரடி டெலிபோன் பேட்டிகளில் 'உங்க நடிப்பு எனக்கு ரொம்பப் பிடிக்கும்' போன்ற அறுவைகள் குறைந்து தொடரில் வந்தபடியே தாத்தா, மாமா, மாப்ளே என்று உறவு கொண்டாடியபடி ஒருவரையொருவர் வாரிக் கொண்டது நல்ல சுவாரஸ்யம். ஒரு ரசிகரின் வேண்டுகோளின்படி வேலுமணி மாதிரி நடந்தே காட்டினார் வாசு விக்ரம். (முன்னறிவிப்பின்போது காட்டப்பட்ட கானா டான்ஸ்களை - சிவகுமார் முதல் பாட்டி வரை ஆடியதை - கண்ணியம் கருதி அகற்றி விட்டார்கள் போலும்.)

டைட்டில் பாட்டான 'கண்ணின் மணி'யை அத்தனை பிரபலத்துக்குக் கொண்டு வந்த நித்யஸ்ரீக்கு எந்தப் பாராட்டும் காணோமே, ஏன்?



# நித்யஸ்ரீயை ஏன் மறந்தார்கள்?

**ஐ**ஸ்வர்யா ராயின் ஆங்கில கேள்வி பதில்களைத் தமிழ்ப்படுத்தித் தந்தது சன். பரத நாட்டியம் ரசித்துக் கற்றுக் கொண்டதாக அவர் சொன்னபோதிலும் காட்டப்பட்ட காட்சிகளில் அவருக்கும் பரத நாட்டியத்துக்கும் பத்து மைல் இடைவெளி இருந்தது. கிசுகிசு எனக்குப் பழக்கமான சமாசாரம், நான் பொருட்படுத்துவதில்லை என்று எல்லாரும் சொல்வதையே இவரும் சொன்னார். Really?

ஆனால் பேட்டி பூராவிலும் her eyes sparkled. பூனைக் கண்களை வெட்டிச் சுழற்றிக்கொண்டு, முன்னே வந்து விழும் முடியைப் பின்னே தள்ளி விட்டுக் கொண்டு அவர் பேசிய அழகே தனி. மிகையில்லாத முகபாவங்களை க்ளிக் க்ளிக் க்ளிக்கென்று எடுத்துத்

தள்ளிய ஸ்டில் போட்டோக்கள் Still more lovely.

பஸ் போக்குவரத்துத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தத்தால் தீபாவளி சமயத்தில் பொதுமக்கள் கஷ்டப்படுகிறார்களே என்றுதான் எல்லா அரசியல் தலைவர்களும் கண்ணீர் வடித்தார்களே தவிர, தீபாவளி சமயம் பார்த்துத்தான் வேலை நிறுத்தம் செய்ய வேண்டுமா? என்று எவரும் கேட்கவில்லை. If you think you have no fault that is possibly the worst one.

இந்தப் போராட்டம் நியாயமானதாக இருக்கலாம். ஆனால் போராட்டக்காரர்கள் உடம்பு பூரா பட்டை நாமம் போட்டுக்கொண்டு ஊர்வலம் போனது நியாயமில்லை. அது ஆத்திகர்களின் மனசைப் புண்படுத்தியிருக்கும். இந்துக்களுக்குத் திருநீறும் திருநாமமும் புனிதமான சின்னங்கள். அதை ஏன் கேவலப்படுத்த வேண்டும்?

• சித்தி

இப்போதெல்லாம் எந்தப் பேட்டியாளர் எந்தச் சேனலில் இருக்கிறார் என்று சொல்ல முடிவதில்லை. யூகி சேது திடீரென்று தன் தர்பாரை ஜெயாவுக்குத் தள்ளிக்கொண்டு போய்விட்டார்.



பிடிக்க முடியாத மாதவனைப் பிடித்தபோதிலும், இவர் குறையோ அவர் குறையோ, புதிதாக விஷயம் எதுவும் கறக்க முடியவில்லை. தனக்குப் பாட வராது என்று சொன்ன மாதவன், அதை நிரூபிப்பதற்காக 'பெப்பெப்பே' என்று ஒரு தினுசாகக் குரல் கொடுத்துக் காட்டினார்.

அடுத்து, முண்டாக கட்டிக்கொண்டு, தரையில் சப்பணமிட்டு உட்கார்ந்து, பட்டாசுக் கடைக்காரராக வந்த யூகி, புதுப் புதுப் பட்டாசு வகைகளைக் கற்பனை செய்து காற்றிலே வெடித்தார். கங்கூலி வெடி என்பது தீபாவளிக்கு முந்தின நாள் வெடிக்கும், தீபாவளிக்கு அடுத்தநாள் வெடிக்கும், ஆனால் தீபாவளி தினத்தன்று வெடிக்காது என்று வர்ணித்தது பிரமாதமான கிண்டல்.

பின்னணி ஓசைகளை மட்டுப்படுத்திக் கொண்டு தெளிவாக அவர் பேசும்போது வாய் விட்டுச் சிரிக்க முடிகிறது. ஆனால் ஹிந்துவில் ஒரு விமரிசகர் குறிப்பிட்டது போல Sethu believes in talking as fast as sethu express.

சேனல் மாறிய மற்றொரு சகோதரர் ரபி பெர்னார்ட். 'மூன்றாம் பார்வை' என்பது ஸ்டார் விஜய்யில் அவர் நடத்தும் நிகழ்ச்சியின் தலைப்பு.

பயங்கரவாதம், பாபர் மசூதி இடிப்பு, ஆப்கானிஸ்தானம், தாலிபான் என்று இரண்டு பிரமுகர்கள் செய்த வாக்குவாதம் சூடு பறக்க அமைந்ததென்று சொல்ல முடியாது. ஒருபுறம் ஒரு பிஜேபிக்காரரும் மறுபுறம் ஒரு முஸ்லீம் தலைவரும் அலசியபோது பெர்னார்டின் பார்வை எந்த புறம் என்பது தெரியவில்லை. Being self-confident he projects a modest image.

அரங்க அமைப்பு ஒரு சோகம். பேச்சாளர்கள் இருவரும் உயரமான இடத்தில் நின்றவாறு விவாதிக்க, பெர்னார்ட், பாவம், தாழ்வான தளத்தில் உட்கார்ந்து தலையை நிமிர்த்தி நிமிர்த்தி அவர்களைப் பார்த்துப் பேச வேண்டியிருந்தது. நிகழ்ச்சி முடிந்த பின் என்ன ஆயின்ட்மென்ட் தடவிக் கொண்டார் என்பது தெரிந்தால் கழுத்து வலிக்காரர்கள் பலருக்கும் பயனாக இருக்கும்.



• நித்யஸ்ரீ

**காஞ்சனா தாமோதரன்**

# இக்கரையில்

"அம்பிகாச் செல்லத்துக்கு ஏன் நாய்க்குட்டி வேணுமாம்?" விது கேட்டாள்.

பள்ளிக்கூடத்துக்கு அரைநாள் விடுமுறை. மதியச் சாப்பாடு முடிந்தாயிற்று. விது தனக்குப் பிடித்த இருக்கையில் கால் நீட்டிச் சாய்ந்திருந்தாள். மனம் அன்று ஏனோ இலேசாகியிருந்தது. குழந்தைகள் சீக்கிரமே வந்து விட்டதால் இருக்கலாம். ராஜியிடமும் ரஞ்சியிடமும் கொஞ்சம் உணர்வுகளைப் பகிர்ந்து கொண்டதால் வந்த நிம்மதியாய் இருக்கலாம். ராஜியும் ரஞ்சியும் அக்கறை உள்ள சிநேகிதிகள். விதுவினுள் ஒரு நெகிழ்வு.

"புது நாய்க்குட்டி வந்தா அப்பாவும் அம்மாவும் சண்டை போட மாட்டாங்க. போட்டா, நாய்க்குட்டி அவங்களைப் பத்தித் தப்பா நினைக்கும். அப்புறம் வீட்டை விட்டு ஓ...டீ...ப் போயிடும்."

எட்டு வயது அம்பிகா கண்ணை உருட்டி உருட்டிச் சொன்ன பதிலைக் கேட்டதும், அவளை அப்படியே வாரியெடுத்துத் தன் மடியில் இருத்திக் கொண்டாள் விது.

நாளிதழில் எதையோ தீவிரமாகப் படித்துக் கொண்டிருந்த பதினொரு வயது அருணா, தன் பெரிய கண்களை உயர்த்தி அம்மாவைப் பார்த்தாள். அந்தக் கண்களில் தெரியும் கேள்விக்கும், வயதுக்கு மீறிய முதிர்ச்சிக்கும், தானும் ஒரு காரணம். விதுவுக்கு மீண்டும் வலித்தது.

அருணா எப்போதுமே அதிகம் பேசுபவள் இல்லை. இப்போது மௌனம் இன்னும் கொஞ்சம் அதிகம் ஆகியிருக்கிறது.

விதுவுக்குத் தன் இளவயது மௌனம் ஞாபகம் வந்தது. விது எதைச் செய்ய ஆரம்பித்தாலும், அது அம்மா எதிர்பார்க்கும் அளவுக்கு இருக்காது. அம்மாவுக்குத் தாங்காது. பொறுமை இழப்பாள். பாதியிலேயே விதுவிடமிருந்து வேலையைப் பிடுங்கி, தான் செய்து முடிப்பாள். இப்போது 'இது எவ்வளவு நன்றாக இருக்கிறது பார்த்தாயா?' என்பாள். தன் வேலையைத் தானாகவே செய்து முடித்தால், குழந்தை விதுவுக்கு ஏற்பட்டிருக்கக் கூடிய கொஞ்ச நஞ்சத் தன்னம்பிக்கையையும் சுயமரியாதையையும் கூடத் திருடுபவள் அம்மா. குழந்தை விது மௌனமாகவே நின்று விடுவாள். மௌனப் போர்வையின் கீழ் அம்மாவுடனான தொலைவு அதிகரிக்கும்.

அதேபோல், அருணாவின் மௌனப்பார்வையின் கீழ் தன்னுடனான தொலைவு அதிகரிக்குமோ? தன்னைப் பற்றிய அருணாவின் பார்வை எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்த்தாள் விது. புரியாத காரணங்களுக்காக அப்பாவின் மேல் எப்போதும் எரிந்து விழுபவள் இந்த அம்மா. சில சமயங்களில், எங்கேயோவெறித்துப் பார்த்துக் கொண்டு படுத்துக் கிடப்பவள்

அம்மா. தன் சுயநலத்துக்காக, அருணா – அம்பிகாவின் குழந்தைப் பருவங்களை வாட விட்டவள் இந்த அம்மா. தான் நினைப் பதை, அம்பிகா வளர்ந்ததும் அவளுக்கும் அருணா சொல்லித் தரக் கூடும்.

அருணாவின் கண்களில் இப்போது ஆச்சரியம். அம்மா தானாகவே நாய்க்குட்டி பற்றிப் பேசுவதால் இருக்கலாம். அம்மாவின் குரல் வழக்கத்துக்கு மாறாகக் கனிவாக இருந்ததால் வந்த ஆச்சரியமாகவும் கூட



இருக்கலாம். விதுவுக்குத் தன் மேலேயே கோபம் வந்தது.

தனக்கும் தன் குழந்தைகளுக்கும் இடையே விரியக் கூடிய தொலைவை உணரவும், விதுவுக்கு அதிக பயமாக இருந் தது.

"அருணா, உனக்கும் நாய்க்குட்டி வேணும்னு இருக்கா?"

ஒரு பெண் நாய்க்குட்டிதான் வேண்டு மென்றாள் அருணா. அன்றைய நாளிதழ் விளம்பரத்தில் சில நாய்க்குட்டிகளைத் தான் பார்த்து வைத்திருப்பதாய்ச் சொன்னாள்.

"சரி, நாய்க்குட்டி வாங்கலாம். ஆனால், அதைக் கவனித்துக் கொள்வது முழுதும்

உங்கள் பொறுப்பு." விது சொன்னதும், அவள் மடி மேலிருந்த அம்பிகா, அவள் கழுத்தை இறுக்கிக் கட்டி அணைத்துக் கொண்டாள். சிவப்புப் பென்சிலால் தான் குறித்திருந்த விளம்பரங்களை அருணா அவளிடம் காட்டினாள்.

அடுத்த அரைமணி நேரமும் நாய்க் குட்டிச் சொந்தக்காரர்களைக் கூப்பிடுவதில் கழிந்தது. அருணாவும் அம்பிகாவும் அவளின் இருபுறமுமாக ஒட்டிக் கொண்டார்கள். சில நாய்க்குட்டிகள் ஏற்கெனவே விற்றுப் போயிருந்தன. சில நாய்க்குட்டிகள் இன்னும் வீட்டுக்குள் அசுத்தம் செய்யாமல் இருக்கப் பழகவில்லை. சில ஆண் நாய்க் குட்டிகளாய் இருந்தன. கடைசியில் இரண்டு நாய்க்குட்டிகள் மிஞ்சின. சொந்தக்காரர்களிடம் அவர்கள் முகவரிகளையும், வழியையும் விது எழுதிக் கொண்டாள். இன்னும் ஒரு மணி நேரத்துள் அங்கு வருவதாகச் சொல்லித் தன் செல்போன் எண்ணையும் கொடுத்தாள். நாய்க்குட்டி விற்பவர்களின் முகவரிகள் ஊருக்குக் கொஞ்சம் வெளியே, விவசாயப் பண்ணைகளின் நடுவே இருந்தன.

"போலாமா?" அவள் கேட்கவும், "போலாம்," என்று துள்ளின இரண்டு உற்சாகக் குரல்கள்.

"வழியில் பிக்னிக் போடலாமா?" என்றதும், "போடலாம்" என்றன அந்தக் குரல்கள்.

இந்தத் துள்ளலும் உற்சாகமும் இத்தனை நாளும் எப்படி அடங்கிக் கிடந்தன. நினைக்கும்போது விதுவுக்கு வலித்தது.

விது, பிக்னிக் கூடையை எடுத்துத் தூசி தட்டினாள். இரண்டு ஜோடிப் பிஞ்சுக் கரங்கள் கூடைக்குள் நொறுக்குத் தீனி, பழரசம் என்று அடுக்கி நிரப்பின. பிக்னிக் கூடையையும், ஒரு போர்வையும் பூச்சிக்கடி மருந்துகளும் நிரம்பிய பையையும் விது கார் பின்பக்க 'ட்ரங்கில்' வைப்பதற்குள், அருணாவும் அம்பிகாவும் ஓவர்கோட் போட்டு, கார் சீட்பெல்ட் மாட்டி, புறப்படத் தயாராகக் காருக்குள் உட்கார்ந்தாயிற்று.

வழிநெடுக நாய்க்குட்டி பற்றிய பேச்சு. என்ன நிறம். என்ன பெயர் வைக்கலாம். பெயர்ப் பட்டியல் நீண்டது. நடுநடுவே கார்ச்சன்னலுக்கு வெளியே தெரிபவற்றைப் பற்றி விமரிசனங்கள். நெடுஞ்சாலை தொடுவானம் வரை நீண்டு கிடந்தது. இருபுறமும் அறுவடை செய்யப்பட்டு



மொட்டையான மக்காச்சோள விளைநிலங்கள். சோம்பேறித்தனமாய் மேய்ந்து கொண்டிருந்த கறுப்பு - வெள்ளை மாடுகள். பின்னணியில், மூன்று பனை உயரமுள்ள தானியச் சேமிப்புக் குதிர்கள். இலையற்ற மொட்டை மரங்களின் ஊடே தெரியும் பெரிய பண்ணை வீடுகள்.

"நாய்க்குட்டியைப் பார்த்த அப்புறம் பேர் வைக்கிறதுதான் சரி," அருணா பெரிய மனுஷியாகச் சொல்லவும், சின்னது அவளோடு ஆமோதித்தது. விதுவுக்குச் சிரிப்பு வந்தது. மனத்தில் ஒரு பரிவு. ஒரு சிறு நாய்க்குட்டியால் கூட இவர்கள் இருவரின் உலகமும் இந்த அளவு மாற முடியுமானால், எப்போர்ப்பட்ட உலகம் அது.

அவள் போய்ச் சேர்வதற்குள் நாய்க் குட்டி விற்றுப் போய் விடக் கூடாதே என்றிருந்தது.

"அம்மா, நிறுத்து!" முன்சீட்டில் உட்கார்ந்திருந்த அருணா கத்தவும், விது தன்னையறியாமல் பதறிப் போய், ப்ரேக்கை அழுத்தி வேகத்தை மட்டுப்படுத்தினாள்.

"என்ன, அருணா!"

அருணா சுட்டிக் காட்டினாள். சாலையின் நடுவே ஒரு கூழாங்கல் மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது. விது காரைச் சாலையின் ஓரமாய் நிறுத்தினாள். அருணாவும் அம்பிகாவும் அவசர அவசரமாகக் கூடவே இறங்கவும், அவர்களைக் காரின் பக்கத்திலேயே இருக்கும்படிச் சொல்லிக் கண்ணை உருட்டினாள். "அம்மா, ரொம்ப மோசம்", என்று சிணுங்கிய அம்பிகாவின் நெற்றியில் அவசரமாய் முத்தமிட்டு, "இங்கேயே இரு, செல்லம்" என்றாள்.

சாலையின் இருபுறத்திலும் போக்குவரத்து இல்லை. விது மெல்ல அந்தக் கூழாங்

டாக்டர்... எனக்கு வந்திருக்கிறது என்ன வியாதின்னே கண்டுபிடிக்க முடியாதா?

போஸ்ட்மார்டம் பண்ணும்போது கண்டுபிடிச்சிடலாம்.

— வசீகரன்

கல்லை நோக்கி நடந்தாள். நினைத்தபடி அது ஓர் ஆமை.

"ஆமைதான்", அருணாவுக்கும் அம்பிகாவுக்கும் தெரியப்படுத்தினாள்.

"நாங்களும் வர்றோம்மா." இரண்டு பேரும் காரின் அருகில் நின்றபடி குதித்தார்கள்.

"அங்கேயே இருங்க இரண்டு பேரும். இல்லேன்னா நாய்க்குட்டி கிடையாது." விது அவர்களை நோக்கிக் கத்தினாள். இரண்டும் அவளைப் பார்த்து முறைத்தன.

"அந்த ஆமையைக் காப்பாத்தும்மா," அருணா பதிலுக்குக் கத்தினாள். "இல்லேன்னா நீ ரொம்ப மோசம்," அம்பிகா சேர்ந்து கொண்டாள். விதுவின் முகத்தில் தன்னையறியாமல் ஒரு புன்னகை விரிந்தது. "நீ ரொம்ப மோசம்" என்று சொன்னால் எல்லாரும் பயந்து விடுவார்கள் என்று நம்புகிறது இந்தக் குழந்தை. நல்லவர்களாக இருக்க விரும்புவோரை மட்டும்தானே இப்படிச் சொல்வதால் கொஞ்சமாவது பயமுறுத்த முடியும்.

அவள் பக்கத்தில் வருவது புரிந்ததும் ஆமை நின்றது. தன் கை கால்களை ஒட்டுக்குள் இழுத்துக் கொண்டு அசையாமல் கிடந்தது. இது கடிக்கும் ஆமை வகையைச் சேர்ந்ததாக இருக்குமோ? அதனருகே குனிந்த விது மீண்டும் நிமிர்ந்து நின்றாள். "அம்மா, அங்கே சும்மா நின்னு என்ன பண்றே?" நானும் வரப் போறேன்." அருணா மிரட்டினாள்.

ஆமை இன்னும் அசையாமல் கிடந்தது. காலணி நுனியால் ஆமையை உதைத்து வீசினாள். ஆமை பக்கத்து வயலுக்குள் பொத்தென்று விழுந்தது. "ஹை, நல்ல அம்மா..." சாலையோரத்தில் கார் பக்கத்தில் நின்ற இரண்டு நண்டுகளும் கைதட்டிக் குதித்துச் சந்தோஷப்பட்டன. விது கார் பக்கம் வந்ததும் இரண்டு பேரும் ஓடி வந்து அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள். விது வெற்றி வீராங்கனையாய், பெரிய சாதனைப் பெண்ணாய் உணர்ந்தாள்.

"பசிக்குதும்மா." வழக்கம் போல் சின்னவள் ஆரம்பித்தாள்.

"நாம் இங்கேயே பிக்னிக் சாப்பிட்டா என்ன?" அருணாவின் யோசனை.

விது சுற்றிலும் பார்த்தாள். வறண்ட பொன்னிறத்தில் சாலையோரத்துப் புல்லாந்தரிசு சுத்தமாகத் தெரிந்தது. குளிர்காலத்தில் இடையிடையே வரும் மிதமான சில நாட்களில் ஒன்று அது. பிக்னிக்குக்குச் சரியான நாள். செல்போனில் நாய்க்குட்டிச் சொந்தக்காரர்களைக் கூப்பிட்டுக் கொஞ்சம் தாமதித்து வருவதாகச் சொன்னாள். குழந்தைகளின் உதவியோடு புல்லாந்தரிசில் போர்வையை விரித்தாள். அருணா பிக்னிக் கூடையிலிருந்து நொறுக்குத்தீனி எடுத்து அம்பிகாவுக்குக் கொடுத்தாள்.

"பிக்னிக் சாப்பாடு எப்பவுமே நல்ல ருசி, என்னம்மா? காத்து இரகசியமா ஏதோ ருசியைத் தூவிட்டு போகுது." அம்பிகாவுக்கு நல்ல கற்பனை.

தன் ஸ்ட்ராபெர்ரி பழரசத்தை உறிஞ்சியவளாய் அருணா மௌனமாய் இருந்தாள். "அம்மா, இந்த ஆமையைச் செஞ்சவங்களுக்குக் காலம் மாறினது தெரியலியா?"

"ஏன் அப்படிச் சொல்றே, அருணா?"

"ஆமை என்னதான் தன் தலையையும் காலையும் ஓட்டுக்குள்ளே இழுத்துக்கிட்டாலும், வர்ற கார் அது மேலே ஏறினா செத்து தானே போகும்! இந்தக் காலத்துல அதுக்குப் பாதுகாப்பு இல்லை."

போர்வை மேல் நீட்டிப் படுத்து வானம் பார்த்துக் கொண்டிருந்த விது, ஒருக்களித்து அருணாவின் பக்கம் திரும்பினாள். "இந்தக் காலத்தில் எதுக்குத்தான் பாதுகாப்பு இருக்கு, சொல்லு அருணா?"

அருணா வெகு நேரமாய் ஒன்றுமே பேசாமல் அம்மாவைப் பார்த்தாள். பிறகு அம்மாவின் கையை இறுகப் பிடித்துக் கொண்டாள். "வீட்டுக்குப் போகாம இங்கேயே இருந்திட்டா நல்லாருக்கும், இல்லியாம்மா?" என்றாள்.

(தொடரும்)

# அரசியலுக்கு வருகிறார் புது மகாராஜா?

குவாலியர் ராஜபரம்பரை மீது அபிமானம் கொண்ட மத்தியப் பிரதேசத்து மக்களின் மனத்தில் இப்போது எழுந்துள்ள கேள்வி: புதிய மகாராஜாவாக பட்டம் ஏற்றுள்ள ஜோதிர் ஆதித்ய சிந்தியா, தன் அப்பா மாதவராவ் சிந்தியாவைப் போல, முழு மூச்சுடன் அரசியலில் ஈடுபடுவாரா? என்பதுதான். காங்கிரஸ் கட்சியின் முக்கிய தலைவர்களுள் ஒருவராக விளங்கிய மாதவராவ் சிந்தியா, ஹெலிகாப்டர் விபத்தில் பரிதாபமாக மரணமடைந்ததை அடுத்து பட்டத்துக்கு வந்திருக்கிறார் ஆதித்யா.

இவருக்கு அரசியல் புதுசுதான். காரணம், தன் மகனை அப்படித்தான் வளர்த்தார் மாதவராவ் சிந்தியா.

"குவாலியரில் வளர்ந்தால், அரச பரம்பரையைச் சேர்ந்த தம் மகனுக்கும், சாமானிய மக்களுக்கும் இடைவெளிதான் மிஞ்சும்'' என்று சொல்லி, குவாலியரில் சிந்தியா குடும்பத்தினர் நடத்தி வரும் பிரபல பள்ளியில் படிக்க வைக்காமல் புகழ் பெற்ற டூன் பள்ளியில் படிக்க வைத்தார் மாதவராவ். தவிர, அதற்கு இன்னொரு முக்கிய காரணமும் இருந்தது. குவாலியர் ராஜ குடும்பத்தில் உட்பூசல்கள் அதிகம். அரசியல் ரீதியாக மட்டுமின்றி, குடும்பச் சொத்து விஷயங்களிலும்கூட மோதல்தான். இந்தச் சச்சரவுகளால் தம் மகன் பாதிக்கப்பட்டுவிடக் கூடாது என்று மாதவராவ் சிந்தியா கருதினார்.

படிப்பில், ஜோதிர் ஆதித்யா ரொம்ப கெட்டிக்காரரில்லை. பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, டெல்லியில் செயின்ட் ஸ்டீபன்ஸ் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். பின்னர் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில், அப்பா விருப்பப்படி சேர்ந்தார். அங்கே எம்.பி.ஏ முடித்துவிட்டு, சில மாதங் களுக்கு முன்புதான் இந்தியா வந்தார் ஜோதிர் ஆதித்யா.

சின்ன வயசில், காட்டுப்பக்கம் போய் வாத்துகளைச் சுடுவது, ஆதித்யாவின் பொழுதுபோக்கு. இப்போது, படுவேகமாக கார் ஓட்டுவது! "அவர் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டால், பத்திரமாய்த் திரும்பி வர வேண்டுமே என்று ஒரே பதற்றமாக இருக்கும்'' என்கிறார்கள் குவாலியர் அரண்மனை ஊழியர்கள்.

தன் தந்தையின் திடீர் மரணச் செய்தி அறிந்தவுடன், மும்பையில் இருந்த ஜோதிர் ஆதித்யா, டெல்லிக்குப் பறந்துவந்து, தந்தையின் உடலைப் பெற்று, குவாலியருக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடுகளைக் கவனித்தது, வந்திருந்த அரசியல் பிரமுகர்களைக் கவனித்துப் பேசியது, அரண்மனை நிர்வாகம் மற்றும் அரசியல் விஷயங்களில் அதிக ஆர்வம் காட்டி வருவது இவற்றையெல்லாம் பார்க்கிறபோது, அப்பா போல நிச்சயம் அரசியலுக்கு வருவார்'' என்கிறார் ஆதித்யாவின் பால்ய நண்பரான சுக்லா!

— மௌலி





# வயது தடையல்ல!

எந்தச் செயலுக்கும் காரணம் தேடும் கால மிது. 'ஏன் என்ற கேள்வி கேட்காமல் வாழ்க்கை யில்லை!' நிஜம்தான். இந்த உண்மை யோகா சனப் பயிற்சிகளுக்கும் பொருந்தும்.

யோகாசனப் பயிற்சி பற்றிய விழிப்புணர்வு கூடியிருக்கிறது என்பது உண்மைதான். யோகா சன நூல்கள், டி.வி. நிகழ்ச்சிகள் தினமும் வந்து கொண்டிருக் கின்றன. பத்திரிகை களிலும் எழுதுகிறார்கள். இவற்றுக்கு நல்ல வர வேற்பு உள்ளதாகத் தெரி கிறது. ஆனால் டி.வி. பார்க்கும் நேயர்கள், அதை ஒரு நிகழ்ச்சி போல பார்த்து மறந்து போகிறார்கள். பத் திரிகையில் படிப்பவர் களும் ஒரு தகவல் கட்டுரையாக வாசித்து வைக்கிறார்கள். உடனடியாக ஒரு நல்ல யோகா பள்ளியில் சேர்ந்து பயிற்சி எடுத்துக் கொள்ள எத்தனை பேர் தயாராக இருப்பார்கள்? மிக சொற்பமே!

இவர்கள், யோகா சனங்களைப் பழகிச் செய்யாததற்குக் கார ணங்களைத் தயாராக வைத்திருக்கின்றனர்.

- "அதெல்லாம் சின்ன வயசுலேயே ஆரம்பிச் சுடணும்ங்க!"
- யோகா செய்ய கொஞ்சம் கூட நேரம் இடையாது."
- "விருப்பமில்லாத விஷயம் விட்டுப் போகும். எனக்கு இதில் ஆர்வம் இல்லை..."

இந்த சமாதானங்கள் சரியா, தவறா என் பதை முதலில் பார்ப்போம்.

யோகாப்பியாசத்துக்கு வயது வரம்பு கிடையாது. இளம் வயதில் ஆரம்பிப்பது நீண்ட பலனைத் தரும். ஆரோக்கியமான, ஒழுக்கமான வாழ்வுக்குப் பலமான அஸ்தி வாரம் அமைத்துக் கொடுக்கும். மற்றபடி, யோகா பயிற்சிகளை, நிபுணர்களின் ஆலோ சனைப்படி, யார் வேண்டுமானாலும் எந்த வயதிலும் செய்யலாம். வயது ஒரு தடை அல்ல! தினசரி வேலைகளில் நிறைய

புதுயுக யோகா 8

டாக்டர் ஏ.எஸ். அசோக்குமார்




''என்ன சார்? ரயிலுக்கு அடியில குனிஞ்சு பார்த்துட்டு இருக்கீங்க? எதையாவது தொலைச்சிட்டீங்களா?''

''அதெல்லாமில்லை. எக்மோர் 'ரயிலடியில் சந்திக்கறேன்'னு என் ஃப்ரெண்ட் லெட்டர் போட்டிருந்தான்... அதான்.''

— சி.பி. செந்தில்குமார்

உடற்பயிற்சி கிடைத்து விடுகிறது என்பதும் சரியல்ல. உடம்பை வருத்திச் செய்யும் வேலைகள், ஓரளவுக்கு உடற்பயிற்சிதான் என்றாலும், யோகா பயிற்சியால் மனம் ரிலாக்ஸாகின்றதே, அந்த பலன் கிடைக்காது. எந்த வேலையும், உடலின் எல்லா பாகத்துக்கும் தேவையான முழுமையான பயிற்சியைக் கொடுக்க இயலாது. அதை சரிவரத் திட்டமிட்ட யோகாசனப் பயிற்சியால் மட்டுமே முடியும்.

தண்ணீர், உணவு, உடை, தூக்கம், ஓய்வு, எவ்வளவு முக்கியமோ, அது போலவே தினசரி யோகாசனப் பயிற்சியும் முக்கியமானது. 'யோகா'வை உங்கள் தினசரி வேலை பட்டியலில் சேர்க்காமல், 'ஓய்வு' பட்டியலில் சேருங்கள். பொழுது போக்குக்காக மணிக்கணக்கில் செலவு செய்து மனமுவக்கும் நாம், உடல், மன வளர்ச்சிக்கு உறுதுணை செய்யும் யோகாப்பியாசத்துக்கு என இருபது நிமிடம் ஒதுக்க முடியாதா?

'யோகாப்பியாசத்தில் எனக்கு விருப்பமில்லை' என்பது மிக அவசரமான காரணம். கேழ்வரகுக் கஞ்சி உடலுக்கு நன்மை தரும். ஆனால் நமக்கெல்லாம் உடலுக்குத் தீமை தரும் காபி, மது, குளிர்பானம் போன்றவைதான் பிடிக்கிறது. இப்படி, ஒவ்வொருவரும் தங்கள் விருப்பு, வெறுப்பு என பிடிவாதமாக, தன்னிஷ்டத்துக்கு நடந்தால், வாழ்க்கையில் ஒழுக்கம் இருக்காது. தனி மனிதனோ, சமூகமோ, முன்னேற கட்டுப்பாடான வாழ்க்கை அவசியம். அதற்கு யோகா உதவுகிறது.

சாதா ஆளைவிட, யோகா கற்ற மனிதனால், கடின வேலைகளைத் துரிதமாகவும் துல்லியமாகவும் செய்ய முடியும் என்பதால், அவனுக்கு எதிலும் எங்கும் வெற்றியே கிடைக்கிறது.

இனியாவது யோகா செய்யாமல் இருப்பதற்குக் காரணம் தேடாமல், முழு முயற்சியுடன் யோகாவைச் செய்ய ஆரம்பிப்போம்.

இந்த வாரம் நீங்கள் தெரிந்துக் கொள்ளப் போகும் ஆசனம், 'அர்த்த சக்ராசனம்'.

சக்ரம் போன்று பாதி நிலையில் பின்னால் வளைந்து செய்வதால் அந்தப் பெயர்.

**எப்படிச் செய்வது?**

1) தரையில் விரிப்பை விரித்து, கால் பாதங்களை ஒன்று சேர்த்து வைத்து நிற்கவும்.

2) கைகளால் இடுப்பைப் பிடித்து, கை கட்டை விரல்களால் முதுகை அழுத்தி பின்னோக்கி, முடிந்தளவு வளைய வேண்டும்.

3) கால் முட்டிகளை வளைக்கக் கூடாது. அப்படியே இருபது எண்ணிக்கை இருக்கவும்.

4) மெதுவாக நிமிர்ந்து நிற்கவும். கைகளை இடுப்பிலிருந்து பிரித்து தளரவிட்டு சிறிது ஓய்வு எடுக்கவும்.

5) மூன்று முறை இவ்வாசனத்தைச் செய்து முடிக்கவும்.

மிக எளிமையான ஆசனம். ஆனால் கிடைக்கும் பலன்களோ எக்கச்சக்கம்.

• முதுகெலும்பு உறுதியாக இருக்கும். கிழவி கூட கம்பை வீசிவிட்டு, கலகலப்பான நடை நடப்பாள்.

• இரவு நேரத்தில் வண்டி ஓட்டும்போது, எதிரே வரும் வாகனங்களின் வெளிச்சத்தால் சிலருக்குக் கண் கூசிப் போகும். இவர்கள் இந்த ஆசனம் செய்து வந்தால் கண் பார்வை தெளிவடையும்.

• தொடர்ந்து செய்து வந்தால், ஆஸ்துமா, நீரிழிவு, காசநோய், இதய பலவீனம், சிறுநீரகக் கோளாறு போன்றவை கட்டுப்படும்.

• மேடைப் பேச்சாளர்கள், ஆசிரியர்கள், பாடகர்கள் போன்றவர்கள் 'அர்த்த சக்ராசனம்' செய்து வந்தால் குரல் வளம் கணீரென்று இருக்கும்.

படம்: ஸ்ரீஹரி

**எச்சரிக்கை: இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.**

# ஜெயகாந்தன் குறுநாவல்கள்

## முன் வெளியீட்டுத் திட்டம்

1961 முதல் 1986 வரை ஜெயகாந்தன் எழுதிய அனைத்துக் குறுநாவல்கள் அடங்கிய முழுத் தொகுப்பு - மூன்று தொகுதிகள் - 2000 பக்கங்களுக்கு மேல் - டெம்மி உயர்ரக மேப் லித்தோ பேப்பர் - கண்களைத் தழுவும் சீரான அச்சு - வலுவான நேர்த்தியான ஸ்ட்ரா போர்டு பைண்டிங்

மூன்று தொகுதிகளும் சேர்த்து விலை ரூ.1000/-

**முன் வெளியீட்டு விலை ரூ 800/- மட்டும்**

- M.O / டிராப்ட் அனுப்புபவர்கள் **MEENAKSHI PUTHAKA NILAYAM, MADURAI** என்ற பெயருக்கு அனுப்பவும்.
- முன் பதிவு செய்வோருக்கு தபால் செலவை பதிப்பகமே ஏற்றுக் கொள்கிறது.
- பதிவு செய்வதற்கான கடைசி நாள் 30.11.2001

முன் பதிவு செய்வோருக்கு நூல்கள் ஜனவரி முதல் தேதி முதல் அனுப்பி வைக்கப்படும்

**மீனாட்சி புத்தக நிலையம்**

48, தானப்ப முதலி தெரு, மதுரை-1. © 745971.



# "கல்கி ஷாப்பிங்"

பக்கங்களில்

விளம்பரம்

செய்ய ரூ.1250/-

மட்டுமே. செய்து

பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,

ஈக்காடுதாங்கல், சென்னை – 97.

போன்: 2345622, 2345623



# INSTITUTE FOR PSYCHOTHERAPY & MANAGEMENT SCIENCES

*67, Hemm Villa, 2nd Flr., Jawahar Nagar, Near Rly. Station, Goregaon (W), Mumbai - 400 062. • ☎ : 879 0850 / 891*

*E-mail : ipms@mantraonline.com*

## அஞ்சல் வழி கல்வி சேர்க்கை அறிவிப்பு

- **எம்.எஸ்.** (ஆங்கிலம் / தமிழ்)
  (உளநல சிகிச்சை & ஆற்றுப்படுத்துதல்)
  *M.S. (Psychotheraphy & Counselling)* .... 2 வருடம்
- **பி.ஜி.டி.பி.சி.** (ஆங்கிலம் / தமிழ்)
  *P.G. Diploma in Psychological Counselling* .... 1 வருடம்
- **பி.ஜி.டி.சி.சி.** (ஆங்கிலம் / தமிழ்)
  *P.G. Diploma in Career Counselling* .... 1 வருடம்
- **எம்.பி.ஏ.** (ஆங்கிலம் மட்டும்)
  *M.B.A. (Master of Business Administration)* .... 2 வருடம்

**தகுதி : பட்டப்படிப்பு**

விளக்கவுரை மற்றும் விண்ணப்பப்படிவம் ரூ. 50 நேரில் அல்லது M.O. / D.D. மூலம் செலுத்தி பெறலாம்.

**• சிறப்பு அம்சங்கள் •**

- இந்தியாவிலேயே எம்.எஸ். அளவில் உளநல சிகிச்சை பயிற்சி அளிக்கும் மிகச்சிறந்த கல்வி நிலையம்.
- பட்ட மேற்படிப்பு பயிலுவோரும் அனுமதிக்கப்படுவர்.
- கல்விச் சான்றிதழ்களின் ஜெராக்ஸ் பிரதிகளை மாத்திரம் சேர்க்கைக்கு இணைத்தால் போதுமானது.
- எமது கல்வி நிறுவனம் திறந்த நிலை பன்னாட்டு பல்கலைக்கழகத்தினரால் அங்கீகரிக்கப்பட்டது.
- திறமை வாய்ந்த நிபுணர்களால் தயாரிக்கப்பட்ட பாடத் தொகுப்புகள் வழங்கப்படுகிறது.

***For Spot Admission Contact :***

**Mrs. UMA JAYRAMAN :**
36, Ayyapan Street, Vijaya Laxmi Puram, Ambattur, CHENNAI - 600 053 • Tel. : 044 - 6571479

**Mr. M. NAGESWARAN :**
P. No. 28, Meenakshi Hospital, Krishna Nagar, MADURAI - 625 014.
Tel. : 0452 - 681777 / 681920 • Mobile : 09842181818

**Mrs. K. REVATHI :**
172, Neghru Street, Ramnagar, COIMBATORE - 641 009
Tel. : 04122 - 234663

**Mr. DEVRAJ MICHAEL :**
4/467, Mehala Bhavan, 20th Street, Shanthi Nagar, PALAYAMKOTTAI - 627 002.
Tel. : 0462 - 540208 • Mobile : 98430 77420

**Mrs. SHAKUNTALA SENGUPTA :**
23/J, Bade Raipur Road, Near Shaktigarth Play Ground, Jadavpur, KOLKATA - 700 032.
Tel. : 033 - 4140781 / 4141689 • Mobile : 09831006207



# 17

பெருமாயிக் கிழவியின் குரல் அந்த வயதிலும் பிசிறு அற்றுத் தெளிவாக இருந்தது. அந்த இரவின் அமைதியில் சீரான ஏற்ற, இறக்கங்களுடன் கிழவி பேசினாள். சரவணனுக்கு அதைக் கேட்கையில் வசியப்பட்டது போன்று ஓர் உணர்வு எழுந்தது.

"மாமா கொஞ்சம் திமிரான ஆளு. சாமியாரு என்ன சொன்னாரு?" தேடி வரும் பெண்ணைத் தீண்டாதே... தென்படும் பொன்னைத் திரும்பிப் பார்க்காதே..." அப்படின்னாரு... இதை பயபக்தியோடதான் மாமா கேட்டுட்டு வந்து வீட்ல சொன்னாரு. ஆனா சாமியாரு போயி ஒரு வாரத்துல பயம் போயிடுச்சு. ஒரு நாளு இளக்காரமாச் சிரிச்சுக்கிட்டே "அந்தச் சாமியாரு என்னமோ பொன்னு வருது..... பொம்பளை தேடி வர்றான்னாரு.... ஒண்ணையும் காணமே. வந்தாத் தேவலை அப்படின்னு சொல்ல, எம்மாமியாரு அவரை இப்படியெல்லாம் பேசாதீகன்னு சொல்லிச்சு. அதுக்கு அவரு உன் வேலையைப் பாருடி.

எல்லாம் எனக்குத் தெரியும்னு சொல்லி அடக்கிட்டாரு.

ஆனா அந்த சாமியாரு சொன்ன மாதிரி தான் நடந்தது. பஞ்சம் பொழைக்க இந்த ஊருக்கு ஒரு அண்ணனும் தங்கச்சியும் வந்தாங்க. வடக்கே என்னமோ ஒரு ஜில் லாவுல இருந்து வர்றோம்னு சொல்லி வந் தாங்க. அண்ணன் பேரு வேலு... தங்கச்சி

மாமா, எந்தப் பக்கமிருந்து வர்றீக? என்னா? ஏது புள்ளி விவரம்னு கேட்டாரு. அப்ப னாத்தா ரெண்டு பேரும் பிளேக் வந்து செத்துப் போனாகளாம். ஊர்ல வெள் ளாமை அத்துப் போச்சாம். கூலி வேலை கூடக் கெடைக் காம தெக்குப் பக்கமாக்

# பூவரசம் வீடு



பாஸ்கர் சக்தி

கௌம்பி வந்துட் டோம்னு அந்த வேலு சொன் னான்.

மாமா ரெண்டு பேரையும் இந்த ஊர் லயே இருந் துக்கிடச் சொன் னாரு. தோட்டத் துல வேலை செஞ்சுக் கச் சொன்னாரு. தங்குறதுக்குக் குடிசை போட இடம் கேட்டாங்க அண்ணனும், தங் கையும். அதான் இந்த ஊர்ல முக்காவாசி இடம் அப்ப மாமாகிட்டதானே இருந்துச்சு. ஒரு எடத்தைக் கைகாமிச்சு இங்கன குடிசையைப் போட் டுக்கங்கன்னு உங்க அய்யா சொன்னாரு... அது எந்த இடந் தெரியுமா?

- இப்ப பூவரசம் வீடு ருக்கே, அதே இடம்.

சின்னதா ஒரு குடிசை யைப் போட்டுக்கிட்டு அண்

பேரு பூவரசி.

பூவரசி மாதிரி ஒரு அழகான பொண்ணு அன்னையத் தேதிக்கு நம்மூர்ல இல்லைடா. செவத்தவ கிடையாது. மாநிறந்தான். ஆனா கருங்காலிக் கட்டையில கடைஞ்செடுத்த மாதிரி மேனி. பாத்துப் பாத்துப் பிடிச்சு வச்ச மாதிரி லட்சணமா மூக்கும், முழியும்... அப்படி ஒரு அழகு அவ!

ஊருக்குள்ள நேரா இந்த வீட்டுக்குத்தான் வந்தாங்க. மாமா கால்ல விழுந்தாங்க. சொன்ன வேலையை செஞ்சுக்கிடறோம். இருக்க எடமும், குடிக்க கஞ்சியும் குடுத்தாப் போதும்னு சொன்னாங்க.

ணனும், தங்கச்சியும் தங்கிக்கிட்டாங்க. அந்த வேலு இருக்கானே அவனைப் போல ஒரு உழைப்பாளியை நாங்க யாரும் கண்டதில்லை. அவன் வேலை பாக்குற நேர்த்தியையும், வேகத்தையும் பாத்து ஊருசனம் மூக்கு மேல விரலை வச்சுச்சு. அம்புட்டு வெரசா வேலை செய்வான். செஞ்சு முடிச்ச வேலையில ஒரு சின்னக் குறை கூட கண்டுபிடிக்க முடியாது. அம்புட்டுப் பதனமா, கச்சிதமா காரியம் பண்ணுவான். 'நல்ல ஆளு தான்யா வந்து வாச்சிருக்கான்' அப்படின்னு ஊர்ல எல்லாரும் மெச்சிக்கிட்டாங்க. மாமாவுக்கும் பெருமையாத்தான் இருந்துச்சு.

சாமியார் சொன்னது வீண் போகுமா? ஒரு அடைமழைப் பொழுதுல என் மாமனாரு வேலுவோட குடிசைக்குப் போனாராம். தற்செயலாப் போனாரோ, இல்லை வேணுமுன்னுதான் போனாரோ . அது அந்த சாமிக்குத்தான் தெரியும். குடிசையில வேலு இல்லை. அது தெரிஞ்சுதான் இவரு அங்க போனாருன்னு சொல்றாங்க. எனக்கென்ன தெரியும்.... போனாரு.... அப்புறமென்ன? பூவரசி அவருகிட்ட சரணாகதி ஆயிட்டா. சப்தமில்லாம வந்துட்டாரு.

அப்புறம் இது தொடர்ந்துச்சு. அப்பப்ப அங்கயும், இங்கயும் நடக்குற கூத்துகள்லாம் காதுல வந்து விழும். அப்பல்லாம் ஆம்பளைக இந்த மாதிரி இருக்கிறது ரொம்ப சகஜம். அதுனால இது ஒண்ணும் எங்களுக்கு வித்தியாசமாப் படலை. பூவரசி மாதிரி லட்சணமானவளை அவரு சும்மா விட்டு வச்சிருந்தா அதுதான் ஆச்சர்யம்.

இந்தச் சங்கதி வேலுவுக்குத் தெரியும்னும் சொல்றாங்க. தெரியாதுன்னும் சொல்றாங்க. எது உண்மையோ தெரியலை.

இப்படி இருக்கையில ஒரு நாளு...

கிழவியின் குரலில் ஒரு வித அமானுடத் தன்மை இப்போது இடம் பெற்றிருந்தது. சரவணன் மகுடிக்குக் கட்டுப்பட்டது போல் அமர்ந்திருந்தான். கிழவியின் வார்த்தைகள் அவனது மனசுக்குள் காட்சிகளாய் உருக்கொண்டு விரிந்து கொண்டிருந்தன. அக்காட்சிகள் கிழவி சொல்வதை விடவும் அழுத்தமான காட்சி ரூபங்கள்.

கிழவி தொடர்ந்தாள்.

"ஒரு நாளு வேலு உழுதுக்கிட்டிருந்தான். ஊரிலேருந்து ரொம்பத் தொலைவு தள்ளியிருக்கிற காடு அது. இப்ப தோப்பாக்கி வச்சிருக்கமே அந்தக் காடுதான். அதில தனியாளா வேலு உழுதிக்கிட்டு இருந்திருக்கான். பொழுது சாஞ்சு வர்ற நேரம். கொஞ்ச நேரத்துல உழுகிறதை நிறுத்திட்டுக் கௌம்பலாம்னு நினைச்சுக்கிட்டே வேலு மாட்டைப் பத்தியிருக்கான். மாடு நகரலை. சாட்டையில அடிச்சிருக்கான். மாடு முக்கி முக்கி இழுக்கப் பாத்தும் ஏரு நகரலை. என்னடா இதுன்னு வேலு ஏரை இழுத்துப் பாத்து இருக்கான். மண்ணுக்குள்ள இறுக்கிப் புடிச்ச புடியாய் ஏரு நிக்கிது. என்ன ஏது?ன்னு வெளங்கலை. வேலுக்கு என்ன செய்யறதுன்னு புரியலை. மாடுகளை அவித்துக்கிட்டு ஓட்டமும், நடையுமா வீடு வந்த வேலு விஷயத்தை மாமாகிட்ட சொன்னான்.

மாமா யோசிச்சாரு. ரெண்டு காளை மாடும் கொம்பும், திடகாத்திரமான மாடுக. அதுகளால இழுக்க முடியாத படிக்கு ஏரு சிக்கியிருக்கான்னு ஒரு நிமிஷம் மலைச்சுப் போனாரு மாமா.

இருட்டிப் போச்சு. இருந்தாலும் இது என்ன சங்கதின்னு தெரிஞ்சுக்கிட ஆசைப்பட்டு அரிக்கன் லைட்டு ரெண்டை எடுத்

''அந்த ஆள் சாராய வியாபாரம் பண்ணியே அந்த வீட்டைக் கட்டினாரு.''

''நிஜமாவா...?''

''ஆமாம்! புது வீட்டுக்குக் குடி போகும் போது கூட பால் காய்ச்சறதுக்குப் பதிலா சாராயம்தான் காய்ச்சினாருனா பாருங்க!

– வி. சாரதி டேச்சு





''மரியாதையா நகையை எல்லாம் கழட்டு.''

''கொஞ்சம் இருப்பா... விளம்பர இடைவேளை வரட்டும்.''

- அதிரை யூசுப்

தூக்கிட்டு, கத்தியை எடுத்து இடுப்புல சொருகிக்கிட்டு, வேல்கம்பு ஒண்ணையும் கைல புடிச்சு மாமாவும் வேலுவும் இருட்டுல கௌம்பிப் போனாங்க.

நல்ல இருட்டு. காடா மண்டிக்கிடக்கிற தோட்டங்களையும், தோப்புகளையும் தாண்டி நம்ம காட்டுக்குப் போயிருக்காங்க மாமாவும் வேலுவும். ரெண்டு பேருமா சேர்ந்து ஏரைப் புடிச்சு இழுத்திருக்காங்க. அசைக்கக் கூட முடியலை.

"தோண்டிப் பாத்துருவோம்'னு மாமா சொல்லவும் வேலு தோண்டியிருக்கான். தோண்டிப்பாத்தா...?"

"என்ன பாட்டி புதையலா?" என்றான் சரவணன் ஆர்வத்தை அடக்க முடியாமல்.

"இல்லை... ஆனா புதையல் மாதிரிதான். நாலடி உயரத்துல ஒரு சாமி சிலை. ஐம்பொன் சிலை. அம்புட்டு அழகு. அவ்வளவு வேலைப்பாடு. கையில வேல் வச்சிக்கிட்டு அது முருகன் சாமி மாதிரி இருந்துச்சு. மாமாவும், வேலுவும் பேச்சு வராம அப்படியே நின்னுட்டாங்க. என்னமோ ஏதோன்னு நினைச்சுத் தோண்டும்போது இப்படி சாமி வந்துச் சுன்னா.... அந்த இருட்டுலயும், அரிக்கன் லைட்டு வெளிச்சத்துல பளபளன்னு மின்னுச்சாம் அந்தச் சிலை.

வேலு, "ஐயா, இது இங்கியே இருக் கட்டும். ஊர்ல போயி ஆளைக் கூட்டி வர லாமான்னு கேட்டிருக்கான். மாமா யோசிச்சிருக்காரு. "வேலு, நான் சொல்றபடி செய்வியா?'ன்னு கேட்டிருக்காரு. வேலு 'சரி'ன்னு தலையாட்டிருக்கான். "ஒரு சாக்குல சிலையைத் தூக்கிட்டு எங்கூட வா''ன்னு சொல்லியருக்காரு. வேலு யோசிச்சிருக்கான். அதுக்கு மாமா, "பஞ்சம் பொழைக்க வந்த உனக்கு இடமும், சோறும் கொடுத்தவன் நான். நான் சொல்றபடி கேள்'ன்னு சொல்லியிருக்காரு. வேலுவும் 'சரி'ன்னு சொல்லியிருக்கான். மாமா தன் விரலில் அரிவாளால் கீறி அந்த ரத்தத்தைத் தரையில விட்டு ரத்தப்பலி குடுத்திருக்காரு. குடுத்திட்டு, சிலையை சாக்குல கட்டி வேலுவோட தலையில ஏத்திக்கிட்டு ரெண்டு பேருமா வேலுவோட குடிசைக்குப் போயிருக்காங்க.

அங்கே இருந்த பூவரசியை வெளியே வந்து உட்காரச் சொல்லிட்டு வீட்டுக்குள்ள தரையைத் தோண்டி அந்த சிலையை உள்ளே வச்சுப் புதைச்சிட்டாங்க. புதைச்சிட்டு பழைய படிக்குச் சாணியை வச்சு தரையை மெழுகி முன்னே இருந்த மாதிரியே ஆக்கிட்டாங்க.

பிரமிச்சுப் போயி பாத்துக்கிட்டு நின்ன பூவரசிகிட்ட இந்த விஷயத்தை யாருகிட்டயும் சொல்லக் கூடாதுன்னு பால் மேல சத்தியம் வாங்கிக்கிட்டாரு மாமா. வேலுகிட்டயும் சத்தியம் வாங்கிக்கிட்டாரு. சாயங்காலம் வெளியில போன மாமா விடியற நேரந்தான் வீட்டுக்கு வந்தாரு. என்ன? என்னன்னு தொளைச்சுக் கேட்டப்பவும் அவரு சரியான பதில் சொல்லலை. மழுப்பிட்டாரு. எனக்கும், என் வீட்டுக்காரருக்கும் சந்தேகம். ஆனா அவருகிட்ட அதட்டிக் கேக்க முடியுமா? பேசாம விட்டுட்டோம். ரெண்டு மூணு நாளு அவரு மூஞ்சியில ஒரே யோசனை. சிலையை என்ன பண்றதுன்னு மனசைப் போட்டுக் குழப்பிக்கிட்டிருந்தாரு போலத் தெரியுது.

வேந்தன் சும்மா விட்டாலும் விதி சும்மா விடுமா? சாமியாரு சொன்னது பலிக்க ஆரம்பிச்சுடுச்சு...

இவரு இங்க யோசனையில இருக்கையில வேலு வேற மாதிரி கணக்குப் போட ஆரம்பிச்சுட்டான்.

(தொடரும்)

"எழுபத்திஒன்னு, எழுபத்தி இரண்டு, எழுபத்திமூனு..." என்று உற்சாகம் வழிய வட்டமாய் நின்று கோரஸ் குரலில் எண்ணிக் கொண்டிருந்தது மாணவர் கூட்டம். இடம் சென்னை வேளச்சேரியில் உள்ள குருநானக் கல்லூரியின் என்.சி.சி. அறை.

மாணவர் வட்டத்திற்குள் தலையைவிட்டு எட்டிப்பார்த்தால் அங்கே ஒரு மாணவர் தரையில் தண்டால் எடுத்துக் கொண்டிருந்தார். "எழுபத்திநாலு, எழுபதஞ்சு...ஹேய்ய்ய்... தூள்டா மச்சி, கங்கிராட்ஸ்" என்று தண்டால் முடித்து எழுந்தவரை ஆளுக்கொரு பாணியில் பாராட்டினர். "தாங்க்ஸ், தாங்க்ஸ்" என்று பாராட்டுகளை ஆமோதித்தபடி எழுந்தவர் குணசேகரன்.

பி.ஏ.இன் டிபென்ஸ் அண்ட் ஸ்ட்ரட்டஜிக் ஸ்டடீஸ் என்ற பாதுகாப்புத் துறை பாடத்தில் இரண்டாமாண்டு மாணவர். (தமிழகத்தின் நான்கு கல்லூரிகளில் மட்டுமே உள்ள இந்த படிப்பிற்கு உடனடி வேலை வாய்ப்பு உறுதியாம்!)




"ஒரே நேரத்தில், எழுபத்தைந்து தண்டால் போடுவேன், எங்கள் விளையாட்டு மைதானத்தைச் சுற்றி பதினைந்து முறை ஓடுவேன். இந்த இரண்டு தகுதிகளையும் பார்த்துவிட்டு, எங்கள் கல்லூரியின் பாதுகாப்புத் துறை மூலம் தேசிய மாணவர் படை, மலையேறும் பயிற்சியில் என்னைச் சேர்த்துக் கொண்டார்கள். கடுமையான பயிற்சிக்குப் பிறகு, ஹிமாச்சல் பிரதேசத்தில் உள்ள

• கயல்விழி

• கார்த்திக்



என்று சாந்தியிடம் சாந்தமாக பேச்சுக் கொடுத்தோம்.

"இல்லை.... இதை ஒரு கலைப்படிப் பாகத்தான் சொல்லித் தருகிறார்கள். அறிவியல் படிப்பாக்கி, ப்ராக்டிகல் என்று வந்துவிட்டால், மாணவர்கள், வெடி குண்டு செய்து அதைத் தவறாகப் பயன்படுத்தும் நிலைக்குப் போய்விடுவார்கள். ஆனாலும் முறையான ராணுவ, டிரில் பயிற்சி தரு கிறார்கள். இது தவிர துப்பாக்கிச் சுடுதல், மலையேறுதல், மேப் ரீடிங், ஹார்ஸ் ரைடிங் போன்ற பிரத்யேக பிரிவுகளிலும் அவரவர் தகுதிக்கேற்ப பயிற்சி தருகிறார்கள்" என்று சொல்லும் சாந்தி, தமிழகம் முழுவதுமிருந்து, என்.சி.சி. ஏர் விங்கிற்காகத் தேர்வு செய்யப்படும் இரு நூறு மாணவிகளில் முதலிடத்தில் இருக் கிறார்.

புது டெல்லியில் கடந்த ஜனவரி மாதம் நடைபெற்ற குடியரசு தின அணி வகுப்பில் தமிழகத்திலிருந்து கலந்து கொண்ட மூன்று என்.சி.சி. மாணவர்களில் இவரும்





• குணசேகரன்

மணாலி பனிச்சிகரத்தில் பதினாறா யிரம் அடி ஏறினேன்'' என்று அடக்கமாகச் சொல்லும் குண சேகரன், மாநில அளவிலான மலை யேறும் போட்டியில் முதல் பரிசை வென்று வந்திருக்கும் மாணவர்.

''இந்திய ராணுவத்தில் இணைந்து, கார்கில் சிகரங்களில் இந்திய எல்லையைக் காக்கப் போராடுவதுதான் எனது இலட்சி யம்" என்ற குணசேகரனுக்கு ஒரு ரியல் சல்யூட் வைத்துவிட்டு திரும்பினால் இன்னொரு வீராங்கனை கண்ணில் படுகிறார், சாந்தி!

# கல்லூரி வைரம்!

இவரும் இதே பாதுகாப்புத் துறையில் இறுதியாண்டு மாணவி. அவரை நெருங்கவே கொஞ்சம் தயக்கமாக இருந்தது.

இருக்காதா பின்னே! என்.சி.சி. அறையில் நின்று கொண்டிருந்த மூன்று மோட்டார் ரக பீரங்கிகளின் பாகங்களை, எப்படி இயக்குவது என்பது குறித்து ஜுனியர் என்.சி.சி. மாணவர்களுக்கு வகுப்பெடுத்துக் கொண்டிருந்தார். "நிஜ பீரங்கிகளையே வைத்துப் பாடம் சொல்லித்தரும் அளவிற்கு இது ப்ராக்டிகல் அதிகமுள்ள படிப்பா?"

புதிய பகுதி

ஒருவராம். இதற்காகக் குடியரசு தலைவரின் கையால் பாராட்டும் பதக்கமும் பெற்றுத் திரும்பியதைச் சந்தோஷமாக நினைவுகூரும் இவருக்கும், இந்திய இராணுவத்தில் அதிகாரி ஆவதுதான் லட்சியம்!

"இசையிலும் ஒரு கை பார்ப்பேன்" என்றவர் கீ போர்டு வாசிப்பதிலும் கில்லாடியாம். அது மட்டுமா? கல்லூரி சார்பில் கலந்து கொள்ளும் ஓவியப் போட்டிகளில் முதல் பரிசும் வாங்கி வந்து விடுகிறார். "அப்பா இப்போது இல்லை. அம்மாதான் என்னை உருவாக்கினார். அவங்க பேரு மேரி தனசீலி, மறக்காமல் எழுதுங்க" என்கிறார்.

'குருநானக் கல்லூரியில் தோண்டத் தோண்ட, சாரி தேடத் தேட கல்லூரி வைரங்கள்தானா?' என்று பிரமிப்பாய் நிமிர்ந்த நம்மை, கல்லூரியின் மாணவர் தலைவரிடம் அழைத்துப் போனார்கள்.



''அங்கே 'துணை மேயர்' என்ன பிரச்னை பண்ணிக்கிட்டு இருக்காரு?''

''மேயரை 'மாநகரத் தந்தை'னு சொல்ற மாதிரி தன்னை 'மாநகர சித்தப்பா'னு அழைக்கணுமாம்!''

– ஆண்டாள் வேணுகோபால்

"ஒரு விஷயம் சார்... உள்ளாட்சித் தேர்தலில் மட்டும்தான் அன்னப்போஸ்டாக தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதில்லை. கல்லூரியின் எல்லா துறை மாணவர்களோடும், இனிமையாகப் பழகிய கார்த்திக்கையும் மாணவர் தலைவராக, தேர்தல் இன்றித் தேர்ந்தெடுத்திருக்கிறோம். மற்ற பொறுப்புகளுக்கெல்லாம் தேர்தல் நடத்தினோம் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்" என்றார்கள்.

அட, யார் அந்த நம்பிக்கை நட்சத்திரம்? தேடினால் கல்லூரியின் கலையரங்கில் ஐம்பதுக்கும் அதிகமான மாணவர்களுக்கு மத்தியில் அமர்ந்து எதையோ தீவிரமாக டிஸ்கஸ் செய்து கொண்டிருந்தார், எளிய தோற்றத்தில் இருந்த கார்த்திக். ஆனால் அவர் நம்மிடம் பேசியதோ பெரிய பெரிய விஷயங்கள்.

"எங்கள் கல்லூரி மாணவர்கள் அத்தனை பேரும் ஒழுக்கத்திற்கும் கட்டுப்பாட்டிற்கும் பெயர் போனவர்கள். ஆனாலும் போதை மருந்துகளை பயன்படுத்துவதில் ஏற்படும் தீமைகள், அந்த பழக்கத்திற்கு அடிமையானவர்களை எப்படி அதிலிருந்து விடுபட உதவலாம் என்ற விழிப்புணர்வு கருத்தரங்கம் நடத்துவது தொடர்பாக ஆலோசித்துக் கொண்டிருக்கிறோம். இப்படி அடிக்கடி எங்கள் கல்லூரியில் எதாவது ஒரு கூட்டம் நடத்திக் கொண்டேயிருப்போம். கல்லூரிக்கு வந்து வெறும் பட்டத்தோடு மாணவர்கள் திரும்பிப் போகக் கூடாது. நல்ல மனுஷங்களாத் திரும்பிப் போகவேண்டும். அதற்காக செல்ப் மோட்டிவேஷன் கேம்ப் அடிக்கடி நடத்த திட்டமிட்டிருக்கிறோம். முதல் முகாமை இறையன்பு இ.ஆ.ப வந்து தொடங்கி வைத்தார்.

"இங்கே ராகிங்; ஈவ்டீசிங், கிடையாதுன்னாலும், ஸ்டூடண்ட் கவுன்சில் மூலமாக இதற்கெல்லாம் கமிட்டி போட்டுப் பார்த்துக்கிறோம். மாணவ, மாணவியர்கிட்டே, இங்கே பாலின வித்தியாசம் கிடையாது. மரியாதையாகப் பழகுவாங்க. காரணமில்லாமல் ஸ்டிரைக் கிடையாது" என்று சொல்லும் கார்த்திக், வணிகவியல் மூன்றாமாண்டு படித்து வருகிறாராம். ஒரு சாஃப்ட்வேர் நிறுவனத்தைத் தொடங்கி பலருக்கு வேலை கொடுத்து தொழில் அதிபர் ஆகவேண்டும் என்பதுதான் இலட்சியமாம்.

"ரொம்ப சந்தோஷம், ஒட்டுமொத்த கல்லூரியும் கிரீடம் சூட்டுகிற கல்லூரி வைரம் யாராவது உண்டா?" என்றால், எல்லோரும் கைகாட்டுவது மூன்றாமாண்டு பொருளாதாரம் படிக்கும் சுபஸ்ரீயை!

கடந்த இரண்டு வருடமாக கல்லூரியிலே படிப்பில் முதலிடம் பிடித்திருக்கும் இவரைத் தேடினால், கல்லூரியின் விளையாட்டு மைதானத்தில் கிரிக்கெட் மட்டையோடு நின்று கொண்டிருக்கிறார் என்றார்கள். 'ஓ... அவர் கிரிக்கெட் வீராங்கனையா?' என்று யோசித்தபடி மைதானத்திற்கு

விரைந்தால், அங்கே மாணவர் குழாம் விறுவிறுப்பாக ஆடிக் கொண்டிருந்த கிரிக்கெட்டை ரசித்தபடி அதில் மூழ்கிப் போயிருந்தார்.

"எனக்குக் கிரிக்கெட் பிடிக்கும், ஆனால் இசைதான் உயிர்'' என்று சொல்லும் சுபஸ்ரீதான் கல்லூரியின் ஆஸ்தானப் பாடகி. தமிழ்த்தாய் வாழ்த்தில் தொடங்கி, பாட்டுப் போட்டிகளுக்குப் பயிற்சி அளிப்பதுவரை இவர்தான் மாணவர்கள் மத்தியில் இசை குரு.

"என் குரு கிரிஜா சுப்ரமணியம். இந்த படிப்பு முடிந்ததும் எம்.ஏ. இசை, பிறகு அதிலேயே டாக்டரேட் என்று போய்க் கொண்டிருப்பேன். இசையில் எனக்கென்று ஓர் இடத்தைச் சம்பாதிக்க வேண்டும்'' என்று சொல்லும் சுபஸ்ரீ, மாநில அளவில் நடத்தப்பட்ட பாட்டுப் போட்டிகள், கல்லூரிகள் இடையே நடத்தப்பட்ட பாட்டுப் போட்டிகளில் முதல் பரிசுகளை அள்ளி வந்திருக்கிறார். கடந்த அக்டோபர் இரண்டாம் தேதி அன்று காந்தி பேரவை நடத்திய காந்தி பிறந்த நாள் விழாவில், காந்தியின் வாழ்க்கையை வில்லுப்பாட்டாக தமது குழுவுடன் தொகுத்து வழங்கி அசத்தியிருக்கிறார். கல்லூரியில் இவரது பிரபலத்தைப் பார்த்துவிட்டு, மாணவியர் பேரவையின் செயலாளராகவும் இவரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்.

சுபஸ்ரீயிடமும், அங்கே குழுமியிருந்த மாணவர்களிடமும் விடைபெற்றுத் திரும்பும் சமயம் கண்களை குளுகுளுவென பசுமை நிறைத்துக் கொண்டிருந்தது. எழுபதுகளில் தொடங்கப்பட்ட இக்கல்லூரியின் பரப்பளவான இருபத்து இரண்டு ஏக்கரில் முக்கால்வாசியைத் தன் வயப்படுத்திக் கொண்டிருக்கும், புல்மெத்தை விளையாட்டு மைதானம் ஒரு பசுமைக் கவிதையாகவே கண்களுக்குப்பட்டது. இந்தியா சிமெண்ட்ஸ் பராமரித்து வரும், இந்த மைதானத்தில்தான், சென்னையில் நடைபெறும் டெஸ்ட், ஒருநாள் போட்டிகளுக்கு முன்பு, இந்திய கிரிக்கெட் வீரர்கள் பயிற்சிபெறுகிறார்கள். இதே கல்லூரியில் படித்த சடகோபன் ரமேஷ், இந்திய அணிக்கு எப்படிக் கிடைத்தார் என்பதற்குக் காரணம் விளங்கியிருக்கும்தானே!

சந்திப்பு: **ஆர்.சி. ஜெயந்தன்**
படங்கள்: **ஸ்ரீஹரி**

# கலைஞர் காவியம்!

"உன் கை பட்டால் தமிழ் துலங்கும்; உன் மேல் கை வைத்தால் தமிழ்நாடு கலங்கும்''– கலைஞரை இவ்வாறு சிலாகித்து கவிஞர் வாலி பேசிய இடம் அறிவாலயம், கலைஞர் அரங்கம். நிகழ்ச்சி: நிர்மலா சுரேஷ் எழுதிய 'இயேசு மா காவியம்' புதுக்கவிதை நூல் வெளியீட்டு விழா.

வரவேற்றுப் பேசிய கிறிஸ்துவ கல்லூரி பேராசிரியர் மைக்கேல் ஃபாரடே தொடங்கி அனைவரும் கலைஞரைப் புகழ்



மலர்களால் திக்குமுக்காட வைத்து விட்டார்கள். எழுத்தாளர் வாஸந்தி மட்டும் விதிவிலக்கு. தாங்க முடியாத கலைஞர், தான் பேசும்போது, ''நான் இந்த விழாவுக்கு வர ஒப்புக் கொண்டதை ஒரு குறையாகக் கருதுகிறேன். இங்கு நான் இல்லையென்றால், பேசியவர்கள் நிர்மலா சுரேஷையும் அவரது நூலையும் முழுவதுமாகப் பாராட்டிப் பேசியிருப்பார்களே'' என்றார்.

கலைஞர் அரங்கம் அன்று பாதி கூட நிரம்பவில்லை. காரணம் பஸ் ஸ்டிரைக். குறைவான கூட்டம் நிர்மலாவை உறுத்த, பஸ் தொழிலாளர் சார்பில் கலைஞரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். ''கலைஞரை வைத்து வெளியீட்டு விழா நடத்துவேன் என்பதால் ஒரு பதிப்பாளர் இடையில் நழுவி விட்டார். எனவே நானே 'இதயப் பதிப்பகம்' என்று துவங்கி அதன் சார்பில் வெளியிட்டு விட்டேன்'' என்றார் நிர்மலா. 'இதயப் பதிப்பகம்' என்பது மிகவும் பொருத்தமான பெயர். அண்ணாவுக்கு நெருக்கமான, நிர்மலாவின் அப்பா பெயரும் 'இருதயராஜ்தானே' என்று குறிப்பிட்டார் கலைஞர்.

– ரமா

# கல்யாண முருகன்

சூரபத்மனுக்கும் முருகனுக்கும் நடந்த போரைப் பற்றிச் சொன்னேன் அல்லவா...? உண்மையில் சூரபத்மன் அழிந்து போகவில்லை. 'பணிப்பகை மயிலும் சேவற்பதாகையும்' என்பதற்கு ஏற்ப முருகனின் வாகனமான மயிலாகவும் கொடியில் நிமிர்ந்து நிற்கும் சேவலாகவும் உருவேற்று முருகனின் தொண்டனாகிவிட்டான்.

ஆறுமுகப் பெருமானுக்கு முன் போய் நின்றால் தீயவர்களும் நல்லவர்களாகி விடுவார்கள் என்றுதானே முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது. அதற்கேற்பத்தான் கச்சியப்பரும் பாடி வைத்திருக்கிறார்:

தீயவை புரிந்தாரேனும் குமரவேள்
திருமுன் நின்றால்
தூயவர் ஆகி மேலைத் தொல்கதி
அடைவர் என்கை
ஆயவும் வேண்டும் கொல்லோ
அருசமர் இந்நாட் செய்த
மாயையின் மகனு மன்றோ வரம்பிலா
அருள் பெற்றுய்ந்தான்.

(கந்த புராணம்)

முருகப் பெருமான் முன்னிலையில் தீயவரும் தூயவராகிவிடுவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? என்று கேட்கிறார் கச்சியப்பர்!

வரம்பிலா அருள் வழங்கி சூரபத்மனை ஆட்கொண்ட முருகன் அதே கணத்தில் தேவர்களுக்கும் அருள் செய்தான் என்பதைப் பார்க்க வேண்டும். சூரபத்மனால் அது நேரம் வரை ஆட்டிப் படைக்கப்பட்டு அடங்கி நின்றவர்கள் அக் கொடுமையிலிருந்து விடுதலையுற்றார்கள். இந்திராதி தேவர்களைச் சிறைமீட்ட முருகன், அவர்களுடைய சிங்காதனத்தில் அமர்த்தப்பட்டான், அவர்களால் பூஜிக்கப்பட்டான். செந்தூரிலிருந்து திருப்பரங்குன்றம் வந்து சேர்ந்தான்.



குருஜி ஏ.எஸ். ராகவன்

தேவர்கள் சேனைக்கு அதிபதியாய் இருந்தவனை மேலும் கௌரவிக்க, இந்திரன் தன் மகளான தேவசேனையை மணம் முடித்துக் கொடுத்தான். தேவசேனை ஏதோ 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்று வந்து முருகன் கரம் பற்றி விடவில்லை. அவளும் முருகனை அடையத் தவமிருந்து வென்றவள்தான்!

திருமாலின் இரு கண்களிலிருந்தும் தோன்றிய அமிர்தவல்லி, சுந்தரவல்லி என்ற இரு பெண்கள், முருகனின் அழகில் மயங்கி அவனையே அடைய வேண்டும் என்று தவமிருந்தார்கள். அவர்களுள் அமிர்தவல்லி, இந்திரனின் மகளாக தேவசேனை என்ற பெயரில் வளர்ந்தாள்.

தேவர்கள் சேனைக்கு அதிபதியான முருகன், இந்த தேவசேனைக்கும் அதிபதியாகி மணங்கொண்ட தலம் திருப்பரங்குன்றம்.

தொன்றுதொட்ட தமிழ்ப் பண்புகளான காதலும் வீரமும் ஒரு சேர வெற்றி பெற்ற தலம் என்றும் சொல்லிக் கொள்ளலாம்.

திருப்பரங்குன்றம் வந்தடைந்த முருகப்பெருமான் தேவதச்சனை அழைத்து அங்கே ஒரு கோயிலை அமைக்கச் செய்து தங்கியிருந்ததாகக் கந்தபுராணம் கூறுகிறது.

திருப்பரங்குன்றம் மதுரைக்கு மேற்கே இருப்பதாக திருமுருகாற்றுப்



படையும் கந்தபுராணமும் கூறுகின்றன. ஆனால், இன்று மதுரை விரிந்து, பரந்துவிட்டது. பரங்குன்றத்தை உள்ளே அடக்கிக் கொண்டுவிட்டது!

பரங்குன்று என்று அழைக்கப்படும் குன்றுருவில் சிவபெருமானே காட்சியளிக்கிறாராம். 'சத்யகிரி' என்றும் இக் குன்றுக்குப் பெயர். முருகப் பெருமான் இங்கு வந்து தவம் செய்தார் என்றும் பார்வதி-பரமேசுவரர்கள் அவனுக்குக் காட்சி அளித்து பரங்கிரிநாதர், ஆவுடை நாயகி என்று பெயர் பெற்றார்கள் என்றும் சொல்வதுண்டு. இது நிகழ்ந்த

தைப் பூச தினத்தன்று சிவனையும் முருகனையும் தரிசிப்பவர்கள் அனைத்து நலங்களும் பெறுவர் என்பது நம்பிக்கை.

குன்றின் மேல் பாகத்தில், குகைக் கோயிலில் நடராஜர் முதலான சிற்ப வடிவங்கள் உள்ளன. மலை உச்சியில் சிக்கந்தர் பாஷா என்ற இஸ்லாமிய மகானின் சமாதி இருக்கிறது. சமாதி அமைந்துள்ள மண்டபம் இந்து சமய முறைப்படியும், ஸ்தூபிகள் இஸ்லாமிய முறைப்படியும் கட்டப்பட்டுள்ளன!

இதற்குத் தெற்கே காசி விசுவநாதர் ஆலயம்; காசிச் சுனை என்னும் நீர் நிலை. என்றும் வற்றாது. வண்ண மீன்கள் தேவசேனையின் விழி மீன்களை நினைவூட்டியபடி நீந்திவருகின்றன. பக்தர்கள் அளிக்கும் கடலை, பொரிக்காகக் காத்துக் கிடக்கின்றன!

மலையடிவாரத்தில் 'சத்யகூபம்' என்ற தீர்த்தமும் உள்ளது. தெப்போற்சவம் நடைபெறும் நீர்நிலை இதுதான். கீழே சரவணப் பொய்கை. முருகனின் வேலினால் தோற்றுவிக்கப்பட்ட புண்ணிய தீர்த்தம்.

கீழிருந்து மேல் நோக்கிச் செல்வோம்...

குன்றின் வடபாகத்தில் முருகன் கோயில். உள்ளே நுழைந்ததும் அகன்ற மண்டபம். அதன் தூண்களில் நுண்ணிய வேலைப்பாடமைந்த எழில்மிகு சிற்பங்கள். அவற்றுள் தேவசேனை-முருகன் திருமணக் காட்சியும் உண்டு.

அருகே 'லக்ஷ்மி தீர்த்தம்' என்ற குளத்தில் உப்பு, மிளகு போட்டால் சரும நோய் நீங்கும் என்கிறார்கள்.

இன்னும் சற்று மேல் சென்றால் கொடிமர மண்டபம். இரு மருங்கிலும் இரட்டை விநாயகர்கள். மயில், நந்தி, மூஷிகம் என்று மூன்று வாகனங்களும் காணப்படுகின்றன. அதோடு அதிகார நந்தி.

அருணகிரி நாதர், பஞ்சலிங்கம், சனீஸ்வரர் என்று தனித்தனி சன்னதிகள் உண்டு. மூலஸ்தான கல்யாண முருகனை அடைய 'ஷடாக்ஷரப் படிகள்' என்று ஆறு படிகள் ஏறிச் செல்ல வேண்டும்.

கர்ப கிருஹம் என்பது மற்ற கோவில்களைப் போன்று கட்டட அமைப்பின்றி மலையைக் குடைந்து உருவாக்கப்பட்டது. பாறையின் மத்தியில் மஹிஷாசுரமர்த்தினி உருவமும் அதனையடுத்து, சற்று கீழே முருகப் பெருமானும் உள்ளனர். மேற்குப் பக்கத்தில் கற்பக விநாயகர் அர்தசித்ர வடிவில் செதுக்கப்பட்டுள்ளார்.

மேலே சூரிய-சந்திரர் சாட்சியாக இருக்க, பக்கத்தில் கலைமகள் முதலானோருமிருக்க, நாரதர் ஆசி கூற, தேவ குஞ்சரியுடன் அமர்ந்த கல்யாண கோலத்தில் காட்சி தருகிறான் முருகன். இடது கால் மடக்கி, வலது காலைத் தொங்க விட்டு நிமிர்ந்த பார்வையுடன் அவன் நேர்நோக்க, தெய்வயானை, பக்கத்தில் பணிந்து, பக்தியும் பிரேமையும் பொங்க, அவனைத் தொழும் நிலையில் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

சுப்ரமண்ய புஜங்கத்தின் பல ச்ருதியில் பார்த்தோமானால் இக-பர சுகங்களை ஒருங்கே அளிக்கிற கடவுள் முருகன்தான் என்று குறிப்பிட்டிருக்



## அருள்வாக்கு

ஜன ஸமூஹத்தில் யோகம், வேதாந்தம், மீமாம்ஸை என்றெல்லாம் தத்வ ஆராய்ச்சியில் போகாதவர்கள்தான் நிறைய இருப்பார்கள். இவர்கள் உள்பட ஸகலமான பேருக்கும் அல்பமாகவோ ஸ்வல்பமாகவோ பக்திதான் ஏதோ ஒரு விதத்தில் ஸ்வாபாவிகமாக (தன்னியல்பாக) அமைந்தது. நாஸ்திகர்களைப் பற்றியும், ஈச்வரப் பிரஸ்தாபம் வேண்டியதில்லை என்று ஒதுக்கிய மீமாம்ஸகர்களைப் பற்றியும் இங்கே பேச்சில்லை. ஸாதாரணமாக யாராயிருந்தாலும், 'இந்த லோகம் இப்படித் தோன்றி நடந்து கொண்டிருப்பதற்குக் காரணமாக ஒரு மஹா சக்தி இருக்க வேண்டும். அதனிடம் நாம் அடங்கியிருக்கவேண்டும்' என்ற அளவுக்கு ஒரு பக்தியெண்ணம் தோன்றாமலிருக்காது. கர்ம ஸங்கிகளாகவே இருந்தாலுங்கூட, 'பலதாதாவாக ஒரு ஈச்வரன் இருக்க வேண்டிய அவசியமில்லை' என்ற மீமாம்ஸைக் கொள்கையைப் பொதுவாக ஜனங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். மஹாசக்தனான அவனைத்தான் தங்களுடைய எந்த விருப்பத்தையும் ஈடேற்றுபவனாகக் கருதி ப்ரார்த்திப்பார்கள். பணம், படிப்பு, ஆரோக்யம், ப்ரமோஷன் எதுவானாலும், இதற்கெல்லாம் தாங்களும் முயற்சி மேற்கொண்டு கார்யங்கள் பண்ணிக் கொண்டேயிருந்தாலும், அவனருள் இருந்தால்தான் நமக்கு வேண்டியது பலிக்கும் என்று, தங்களுக்குத் தெரிந்த அளவில் பக்தி செய்து



கிறார் ஆதிசங்கரர். அதனை ஆமோதிப்பது போல் அழகுணர்ச்சிக்கும் பக்திக்கும் விருந்தாக இங்கே காட்சி தருகிறான் கல்யாண முருகன்.

முருகப் பெருமான் கருவறை அருகிலேயே மற்றொரு கருவறை. அங்கே பவளக் கனிவாய் பெருமாளும் மகாலக்ஷ்மியும் மதங்க முனிவரும் காட்சி தருகிறார்கள். கற்பக விநாயகர் அருகிலுள்ள குடவறையில் ஸத்யகிரீஸ்வரர் லிங்க வடிவத்தில் காணப் படுகிறார்.

பல்லவர் காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் முன்னரே, பாண்டிய மன்னர்கள் குடவறைக் கோயில்கள் அமைத்தார்கள் என்பதைத் திருப்பரங்குன்றம் கோயில் அமைப்பின் மூலம் காணலாம். மலைச் சுவரோடு பதிந்திருக்கிறபடியால் மூலவருக்கு அபிஷேகங்கள் செய்யப்படுவதில்லை. அபிஷேகங்கள் அத்தனையும் அவன் திருக் கரத்தில் உள்ள வேல் படைக்குத்தான்! முருகனுக்குப் புனுகும் எண்ணெய்க்காப்பும் தான்.

பங்குனி உத்திரம் இந்த தேவ-தம்பதியின் திருமண நாள்! அன்று தங்கக் கவசம் அணிந்து ஜொலிக்கிறார் மாப்பிள்ளை முருகன்! திருவிழா கோலாகலமாக நடைபெறும்.

தேவசேனைக்குக் கல்யாணம் நடந்த

---

கொண்டிருப்பார்கள். 'இது பக்தியே இல்லை, வ்யாபாரம்தான்' என்று சொல்பவர்கள் சொன்னாலும், தங்களளவில் பக்தியாக இருப்பதாகத்தான் இந்த ஜனங்கள் நினைக்கிறார்கள். ஒரே கடவுள் பல தேவதைகள் மூலம் அருள் செய்கிறாரென்பதைப் புரிந்து கொள்ளாமல் ஒவ்வொரு தேவதையையும் ஒவ்வொரு காமனைக்காக ஆராதிப்பதோடு நின்று விடுபவர்களை, விஷயம் தெரிந்தவர்கள் பரிஹாஸம் செய்தாலும், இவர்களிடமும் எங்கேயோ ஒரு மூலையில் ஏக பரமாத்மாவிடம் ஒரு நிஜமான பக்தியெண்ணம் இல்லாமலே போய்விடவில்லை.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

இத்தலத்தில் மற்றொரு அற்புதத்தையும் நிகழ்த்திக் காட்டியிருக்கிறான் முருகன். - திருமுருகாற்றுப்படை என்ற தமிழ் அற்புதம் நிகழ காரணமாயிருந்திருக்கிறான்.

தீர்த்த யாத்திரை மேற்கொண்ட நக்கீரர், வழியிலே திருப்பரங்குன்றத்தில் ஒரு குளக் கரையில் அமர்ந்து பூஜா அனுஷ்டானங்கள் செய்து கொண்டிருந்தார். குளக்கரை அரச மரத்து இலையொன்று உதிர்ந்து பாதி நீரிலும் பாதி தரையிலுமாக விழுந்தது. நீரில் விழுந்த பகுதி மீனாகவும் தரையில் விழுந்த பகுதி பறவையாகவும் மாறின. ஒன்றை யொன்று இழுத்துக் கொள்ள ஆரம்பித்தன.



இதைப் பார்த்த நக்கீரரின் அனுஷ்டானம் கலைந்து போயிற்று. உடனே, கற்கிமுகி என்ற பூதம் நக்கீரரை மலைக்குகை ஒன்றில் சிறை வைத்தது.

குகைக்குள்ளே பார்த்தால், இன்னும் பல பேர் சிறைவைக்கப்பட்டிருந்தனர்! ஆயிரம் பேர் சிறையில்சேரக் காத்திருந்து கற்கிமுகி ஒருசேர அவ்வளவு பேரையும் விழுங்கிப் பசியாறக் காத்திருந்ததாம்! நக்கீரர் முருகனை மனதிலிறுத்தி திருமுருகாற்றுப்படையைப் பாடி முடித்தார். வேலனும் தன் வேலால் அக்குகையைப் பிளந்து அவ்வளவு பேருக்கும் விடுதலை தந்து பூதத்தை அழித்தான்!

இந்த வரலாறை அருணகிரி நாதரின் பாடல்களில் நாம் காணலாம்.

பழுத்தமுது தமிழ்ப்பலகை யிருக்கு
மொரு
கவிப்புலவன் இசைக்குருகி
வரைக்குகையையிடித்து வழி காணும்
மயில் நடத்துகுகன் வேலே...
(வேல் வகுப்பு)

நக்கீரர் இங்கே முருகன் கை வேலால் காப்பாற்றப்பட்டதும் அல்லாமல் ஒரு கோயிலும் பெற்றிருக்கிறார்!

திருப்பரங்கிரி தலபுராணத்தைப் படித்தால் இத்தலம் பற்றிய மேலும் பல விவரங்கள் கிடைக்கும். தற்போது மீனாக்ஷி சுந்தரேசுவரர் ஆலய (மதுரை) நிர்வாகத்துக்கு உட்பட்டிருக்கிறது பரங்குன்றப் பெருமான் கோயில். மூலவர் பிராகாரத்தை வலம் வர வழியில்லை. காலாற நடந்து மலையையே சுற்றி இரண்டு மைல் வலம் வரலாம்.

அந்த நடையும் முருகன் நினைவும் உடலுக்கும் மனத்துக்கும் உரமேற்றிவிடுகின்றன. வஜ்ரம் பாய்ந்து திண்மையுடன் வந்து நின்று அருணகிரி நாதர் பாடியதை எண்ணிப் பார்க்கலாம்:

கலக்கு றுஞ்செயல் ஒழிவர அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு
தளவைகொள்
கணத்தில் என்பய மறமயில் முதுகினில்
வருவாயே
வினைத்த லந்தனில் அலகைகள் குதிகொள
விழுக்கு டைந்துமெய் உகுதசை
கழுகுண
விரித்த குஞ்சியர் எனுமவு ணரை அமர்
புரிவேலா
மிகுத்த பண்பயில் குயில்மொழி அழகிய
கொடிச்சி குங்கும முலைமுக குழுநறை
விரைத்த சந்தன ம்ருகமத புயவரை
உடையோனே
தினத்தி னஞ்சதுர் மறைமுநி முறைகொடு
புனற்சொ ரிந்தலர் பொதியவி
ணவரொடு
சினத்தை நிந்தனை செயுமுநி
வரர்தொழ மகிழ்வோனே

தெனத்த னந்தன எனவரி யளிநறை
தெவிட்ட அன்பொடு பருகுயர்
பொழில்திகழ்
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண
பெருமாளே..."

ஆயுதம் கொண்டு போர் புரியும் நேரமாயினும் சரி என் மனத்தோடு ஓய்தலின்றிப் போராடி நலிவுறும் நேரமாயினும் சரி, செயலில் தடுமாற்றம் ஏற்படும்போதும் சரி, யமதூதர்கள் வந்து அழைத்தாலும் சரி... என் அச்சம் நீங்குமாறு நீ மயில் மீது வந்து அருள வேண்டும் என்று உரிமையோடு வரிசைப்படுத்தி அழைக்கிறார் அருணகிரியார்.

'நீ இவ்வளவு சொன்ன பிறகும் நான் வராது இருந்து விடுவேனா!' என்பதுபோல் அங்கே சிரிக்கிறான் கல்யாண முருகன்.

(அடுத்த வாரம் : ஆவினன்குடி அழகன்)




✉ கல்கியில் முதலில் நான் படிப்பது காஞ்சி மஹா பெரியவாளின் 'அருள்வாக்கை'த்தான். எனக்குத் தெரிந்தவரை 'அருள்வாக்கு' இல்லாத கல்கி இதழே இல்லை. 11.11.2001 இதழில் எப்படி 'அருள்வாக்கை' நீக்கி விட்டீர்கள்? ஏற்கெனவே ஒரு பக்கத்திற்கு வந்து கொண்டிருந்த 'அருள்வாக்கை' கால் பக்கமாகக் குறைத்து விட்டீர்கள். இனி அதுவும் இல்லையா?

சென்னை – 28, வி. அனந்தநாராயணன்.

✉ 'உள்ளாட்சி மன்றங்கள்' கார்ட்டூன் டூ மச்! ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்ததில் மண்டைக்குள் பூரான் ஊர்வது போல் ஓர் உணர்வு! ஆனாலும் என்ன செய்வது? உண்மை அதுதானே!"

ஆதமங்கலம்புதூர், கே. சண்முகம்.

✉ கேவி. சகோதரர்களின் ஆராய்ச்சியில் உருவான டெக்கோ மற்றும் கப்போ பிளாண்டுகளை வளர்க்க குறைந்த அளவு இடமும், தேக்கரண்டி அளவு தண்ணீர் மட்டுமே போதும் என்பதால் அவற்றை வீட்டில் வளர்த்து அழகு பார்க்க வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டு விட்டது.

மதுரை–4, வீ.பா. கிருஷ்ணன்.

## அடிக்கும் முன் ரசிக்கிறேன்!

✉ 'கழகத்தை வளர்க்க நிறைய சுற்றுப்பயணம் மேற்கொள்ள ஆசை' எனும் கருத்து, ஸ்டாலினின் அரசியல் ஆர்வத்தையும், 'மக்களுக்குத் தேவையான நற்பணிகளை மேற்கொள்ள வேண்டும்' எனும் பேச்சு அவரது உழைப் பார்வத்தையும் வெளிப்படுத்தியது.

சென்னை – 26, சி. மகேஷ்.

✉ பயங்கரவாதத்தை வேரறுக்க மத்திய அரசு கொண்டு வரும் 'பொடோ' சட்டத்தை வரவேற்றும், அதனை எதிர்ப்பவர்களைக் கண்டித்தும் எழுதப்பட்டுள்ள தலையங்கம் அருமை. அதேசமயம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை இந்தப் 'பொடோ' சட்டத்தைச் செல்வி. ஜெயலலிதா வரவேற்றிருப்பதையும், கருணாநிதி வரவேற்கத் தயக்கம் காட்டுவதையும் தலையங்கத்தில் குறிப்பிடாது விட்டது ஒரு குறையே.

சென்னை – 42, எம். சிவகுருநாதன்.

✉ 'நில்... கவனி... வெற்றி கொள்' நிகழ்ச்சியைத் தொகுத்துத் தந்ததில், பாரபட்சமில்லாமல் எல்லா சேனல் நிகழ்ச்சிகளிலிருந்தும் 'தலைப்பு' தேர்ந்தெடுத் திருந்தது 'இனிமை... புதுமை...!'

திருச்சி–4, ஆர். பிரகாஷ்.

✉ சிலந்தியை, ஒரு என்ஜினீயருடன் ஒப்பிட்டு நோக்கிய கட்டுரை புதிது. நானும் இப்போது ஒட்டடை அடிப்பதற்கு முன் அதன் வலைப் பின்னலை ரசிக்க ஆரம்பித்து விட்டேன்.

சின்மயாநகர், என்.ரஜினி.

✉ கல்கி 28.10.2001 இதழில், காதில் விழுந்தவை பகுதியில், டான்ஸி பொது மேலாளர் டி..ஆர். ஸ்ரீநிவாஸனுக்காக, டான்ஸி வழக்கில், தனிக்கோர்ட்டில் ஆஜரான நான், அ.தி.மு.க. வினரால் மிரட்டப்பட்டதாகவும், அதனால் பின் வாங்கி, எனது ஜூனியர் சத்திய நாராயணாவை மட்டுமே உயர்நீதிமன்றத்தில் வாதிட அனுப்பியதாகவும் செய்தி வெளியாகியுள்ளது. இது முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது. என்னை யாரும் மிரட்டவும் இல்லை. நான் மிரட்டலுக்குப் பணிபவனும் இல்லை. மேல் முறையீடு என்னால் தாக்கல் செய்யப்பட்டது; என்னுடன் சத்தியநாராயணாவும் ஆஜராகிறார்.

சென்னை-20, கே.எஸ். தினகரன்.

# நடக்குமென்பார்; நடக்கும்!

**அக்னிசர்மா பக்கம்**

நவம்பர் 21 முதல் 27 வரை

**மேஷம் :** சந்திரபலம் கூடி இருப்பதும், ராசிநாதன் செவ்வாய் 10-ல் பலம் பெற்று உலவுவதும், நிச்சயம் நன்மையை வாரி வழங்கும் அமைப்பாக இருக்கிறது. ஸ்திர சொத்துக்கள் சேர்க்கை, மாணவர்களின் நிலை உயர்வு, உடன் பிறந்தவர்களால் அனுகூலம், திடீர் அதிர்ஷ்டம் என ஆதாயம் காண்பீர்கள். சனிபகவான் 2ல் வக்கிர நிலை என்பதால், உழைப்பும் களைப்பும் அதிகரிக்கும். சாதுக்கள் தொடர்பு மன அமைதி தரும்.

**ரிஷபம் :** வார ஆரம்பமே படு ஜோர்! புதன் சஞ்சாரம் படு வசீகரம் என்பதால் வளர்ச்சிக்கு தடையேதுமில்லை. காசு, பணம் கலகலக்கும். கொடுக்கல் - வாங்கல் விவகாரங்கள் சுபமாயும் சுகமாயும் முடியும். மனையோ, நிலமோ, வீடோ, வாகனமோ ராசியான அமைப்புகளோடு வந்து சேரும். கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு 'மவுஸான' காலம். கலைத் துறைக்காரர்களுக்கு சிறுசிறு இடையூறுகளும் எதிர்ப்புகளும் மிக்ஸ் அண்ட் மேட்ச்சாக வந்து கடுப்பேத்தும். சர்ப்பசாந்தி செய்தால், துன்பங்கள் தாலிபான் வீரர்கள் போல புறமுதுகிட்டு ஓடிவிடும்.

**மிதுனம் :** எடுங்க பேப்பரை! பிடியுங்க பேனாவை! போடுங்க, பல திட்டங்களை. 'மடமட'னு முடிஞ்சுடும் பாருங்க! ஏன்னா, புதன், சுக்ரன், சூரியன் ஆகியோரது சஞ்சாரம் திருப்தி.. திருப்தி... மனசுக்கு ரொம்பவே திருப்தி... முத்து போல மூன்று பலன்கள் சொல்லணும்னா, ஸ்பெகுலேஷனில் லாபம், மக்களால் நன்மை, உற்சாகம் கூடும். 7ல் கேது, 8-ல் செவ்வாய் இருப்பது அவ்வளவு நல்ல அம்சமில்லை. அதனாலே, போக்குவரத்துத் தொழிலாளர்கள் ஸ்டீரைக் சுமூகமா முடிஞ்ச பிறகு பயணம் போறது பெட்டர்!

**கடகம் :** 'தேர்தல் வந்தாலும், அதிபர் பதவியைக் கைவிட மாட்டேன்' என சூளுரைத்திருக்கும் பாக் அதிபர் முஷாரப் போல, உங்கள் கிரக சஞ்சாரமும் உங்களைக் கைவிடப் போவதாக இல்லை. வியாபாரிகள் ஆதாயம் பெறுவார்கள். அலுவலகப் பணியாளர்களுக்கு சுபிட்சமான சூழ்நிலை. பெண்களுக்கு உற்சாகமான வாரம். வேலையில்லாமல் திண்டாடிக் கொண்டிருந்த காலமெல்லாம் ஓடிப்போச்சு! வாழ்க்கை வசதிகள் அதிகரிக்கும். நல்ல பலன்களாகவே சொன்னதற்காக 'தேங்க்ஸ்' சொல்லிவிட்டு, உற்சாகமாக கொண்டாடுங்க!

**சிம்மம் :** தீபாவளிக்கு ரேஷனில் கூடுதல் சர்க்கரை போடாமல் தமிழக அரசு ஏமாற்றியிருக்கலாம். ஆனால் உங்களோட கிரக சஞ்சாரம் அப்படிச் செய்வதாக இல்லை. துணிச்சலான, தெம்பான வாரமாக அமைவதற்கான அனைத்து ஏற்பாடுகளும் தடபுடலாக செய்யப்பட்டுள்ளன. வி.ஐ.பி.கள் வீடு தேடி வந்து உறவு கொண்டாடுவார்கள். மாணவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். கணவன்-மனைவி உறவு நிலை தி.நகர் ரங்கநாதன் தெரு ஷாப்பிங் கும்பல் போல உற்சாகமாக இருக்கும்.

**கன்னி :** புதுப்படங்களோட ரிலீசிங்கை, டி.வி.க்குக் கொடுக்கறது நல்லதா இல்லையானு சினிமா இண்டஸ்ட்ரியே, குழப்பத்துல இருக்கிற மாதிரி, உங்களுக்கும் மினி குழப்பங்கள், மைக்ரோ இடையூறுகள் வரும். அதற்குக் காரணம் 4ல் கேது, 5ல் செவ்வாய் 9ல் சனி.. கிரக வழிபாடு, தான தருமம்னு நிறைய செஞ்சுதான், இவங்களைச் சரிகட்ட வேண்டி வரும். மற்றபடி திருவாளர் குருபகவான், 10ல் வக்கிரம் பெற்று இருப்பதால், நன்மையும் நன்மை சார்ந்த நலன்களை மட்டுமே தருவார் என எதிர்பார்க்கலாம்.



**மகர ராசிக்காரரான பாடகர் ஸ்ரீனிவாஸுக்கு செல்வாக்கு உயரப் போகுதாம்!**

**துலாம் :** போக்குவரத்து ஊழியர் செய்யும் ஸ்டிரைக்கினால், ஆம்னி பஸ், வேன் உரிமையாளர்கள் காட்டில் வசூல் மழை பொழிவதுபோல துலாம் ராசிக்காரர்களுக்கும் ஆதாய மழை அலங்கட்டியோடு பொழியும். செல்வாக்கு உயருதேனு சந்தோஷப்பட்டா, இன்னொரு பக்கம் நவீன பொருள்கள் வந்து சேரும். மனகல தெம்பு கூடுதேனு மகிழ்ந்து போனால், இன்னொரு பக்கம் தெய்வப் பணிகளில் ஈடுபாடு உண்டாகும். 9ல் குரு இருந்தாலும் வக்கிரம் என்பதால், தந்தை நலனில் அக்கறை தேவை. தெய்வ பிரார்த்தனை, துன்பம் விலக்கும்.

**விருச்சிகம் :** தள்ளுபடி கொண்டாட்டம், எக்ஸ்சேஞ் மேளா, தீபாவளி சூப்பர் ஸேல் என கோலாகலமாக மிடில் கிளாஸ் மாதவன்களின் பட்ஜெட்டைப் பதம் பார்த்த தீபாவளி பண்டிகை போல, விருச்சிக ராசி அன்பர்களுக்கும் சுபச் செலவுள்ள விசேஷமான வாரம்தான். போட்டி, பந்தயம், வழக்கு, வியாஜ்ஜியம், விளையாட்டு, விநோதங்களில் வெற்றி கிடைக்கும். வெளிநாட்டுப் பயணம் நன்மையே தரும். எழுத்து, கணிதம், பத்திரிகை துறைக்காரர்களின் எண்ணம் நிறைவேறும். எதிரிகள் அடங்கிப் போய் 'வணக்கம் அண்ணாத்தே!' என்பார்கள்.

**தனுசு :** உங்களைப்பழி வாங்குவதற்கென்றே, ராகு, கேது, சூரியன், செவ்வாய் நான்கு பேரும் ஏனோ தானோ இடத்தில் ஸ்லோமோஷனில், சாதா மனநிலையோடு உலவுகிறார்களே. அதனால் இந்த வாரம் மிகமிகச் சுமாரான வாரமாகத்தான் இருக்கும். வீண் அலைச்சல், பண விரயம், மனக் கஷ்டம், உடல் நலம் பாதிப்பு போன்றவை நேரும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் புதன்-சுக்கிர பலத்தால் வளர்ச்சி காண்பார்கள். உடன் பிறந்தவர்களால் அளவோடு பலன் கிடைக்கும். கிரக வழிபாடு, தெய்வ பிரார்த்தனை நலம் தரும்.

**மகரம் :** 'தடா' ஆபத்தானதா 'பொடோ' ஆபத்தானதா என்ற பட்டிமன்றம் ஒரு பக்கம் நடக்கட்டும். குரு வக்கிரம் பெற்று உலவுவது நன்மையா, 6ல் ராகு இருப்பது நன்மையா என நீங்கள் கேட்டால், 'இரண்டுமே!' என்று நடுநிலைமையாகச் சொல்லி விடுவதுதான் சுலபம்! அரசாங்க ஆதரவு கிடைக்கும். செல்வாக்கு உயரும். ஆசிரியர், மதபோதகர், சட்ட வல்லுனர்களுக்கு ஏற்றமான காலம். எதிலும் அவசரம், பதற்றம் இல்லாமல் நிதானமாகச் செயல்பட்டால், நன்மையே நடக்கும்!

**கும்பம் :** சமையல் எரிவாயு விலை முதலில் உயருமா, ரயில்வே கட்டணம் உயருமா என்று 'திக்.. திக்..' இதயத்துடன் உட்கார்ந்திருக்கும் இருவானர் பொது ஜனம் நீங்கதான். பொருளாதாரத்தில் சுமாரான வளர்ச்சி இருப்பதால் இந்த போஸ்லதான் இருக்க முடியும். ஆனால் மற்ற விஷயங்களில் நீங்க தப்பிச்சுட்டீங்க. உடல் ஆரோக்கியம் சீராக இருக்கும். தாய் தந்தை மூலம் நன்மை உண்டு. மகான்கள் தொடர்பு கிடைக்கும்.

**மீனம் :** ஏதோ பட்டிக்காட்டில் ஓடிக் கொண்டிருந்துவிட்டு, சென்னை அண்ணா சாலையில் ஓடும் திடீர் அதிர்ஷ்டம் பெற்ற ஆம்னி பஸ்கள் போல மீன ராசிக்காரர்களும் திடீர் யோகசாலிகள் ஆவார்கள். சிவப்பு நிற பொருள்கள், மின்சார உபகரணங்கள் லாபம் தரும். உடன்பிறந்தவர்கள் உற்ற பலமாக இருப்பார்கள். புதியவர்கள் அறிமுகம் ஏற்படும். பத்திரிகை மற்றும் எழுத்தாளர்கள் பாராட்டும் வரவேற்பும் பெறுவார்கள். பெற்றோர் நலனில் கவனம் தேவை.

தமிழ்ச்சினிமாவை உலக அரங்கில் சேர்க்கத் துடிக்கும் கலைஞர்களின் வரிசையில் வரும் கமலின் கலைப் பயணத்தில் 'ஆளவந்தான்' படமும் ஓர் அடையாளம்.

நிறைய ஆங்கில வசனங்கள் இடம் பெற்றிருக்கின்றன. நேரடி ஆங்கிலப் படமாகத் தயாரிக்கப்பட்டிருக்குமானால், உலக சந்தைக்கான வியாபார சினிமா என்றும் சொல்லி விடலாம். (கமலின் அடுத்த பெரிய முயற்சியாக அது இருக்கக்கூடும்)

"சமூகத்தோடு இயைந்து வாழ முடியாதவர்" என்று நீதிமன்றமே நிராகரித்த நந்து, இருபத்து இரண்டு வருடமாக மனநலக் காப்பகத்தில் அடைக்கப்பட்டு, தீவிர மனச் சிதைவு நோய்க்கு ஆளானவர். இவரின் டுவின் சகோதரர் விஜய் ஒரு ராணுவ அதிகாரி. விஜய் தமது இளம் மனைவி தேஜஸ்வினியுடன், காப்பகத்திற்குப் போய் நந்துவைப் பார்க்கிறார். அங்கேதான் விபரீதத்திற்கான விதை விழுகிறது. தேஜஸ்வினியைத் தமது சதிகாரச் சித்தியாக, மனம் பதிவு செய்து கொள்ள, காப்பகத்திலிருந்து தப்பிக்கும் நந்துவின் நோக்கம் தேஜஸ்வினியைக் கொல்வதுதான். இந்த மரண விளையாட்டு எங்கே முற்றுப் பெறுகிறது என்பதுதான் எஞ்சிய கதை.

நந்து பாத்திரத்திற்காக உடற்கட்டு, உடல் மொழி, நடிப்பு என எல்லாவற்றிலும் பிரம்மாண்ட வேறுபாட்டைக் காட்டி மற்றொரு பரிமாணத்தைச் சாதித்திருக்கிறார் கமல்.

தமிழ் வசனங்களை நிஜமாய் உச்சரிப்பது போன்ற ரவீணாவின் கச்சிதமான உதட்டசைவுகளில் அவரின் உழைப்பு வெளிப்படையாகத் தெரிகிறது. போதை மருந்து பழக்கமுடைய நடிகையாக முற்றிலும் மாறுபட்ட நடிப்பை வழங்கியிருக்கும் மனிஷாவும் அதிகம் கவனிக்க வைக்கிறார்.

குடும்பச் சூழல் காரணமாக,

# ஆளவந்தான்

பன்னிரண்டு வயதில் நந்து மனநல பாதிப்பிற்கு ஆளாவதைக் காட்டும் பிளாஷ்பேக் காட்சிகள், திரைக்கதையைக் கையாண்டிருக்கும் நேர்த்திக்கு நல்ல எடுத்துக்காட்டு. பாடல்கள், பின்னணி இசை இரண்டையும் வழங்கியிருக்கும் சங்கர்-எசான்-லாய் ஆகியோரின் வரவு நல்வரவு. நந்து கமலின் உடலில் பச்சை குத்தியதைப் போன்று, கொடூர டிசைன்களைப் போட்டு அசத்தியிருக்கும் ஒப்பனைக் கலைஞர் அனில் பெம்கிரிஹார், ஸ்டண்ட் கலைஞர் விக்ரம் தர்மா, படத் தொகுப்பாளர் காசி விஸ்வநாத், ஒளிப்பதிவாளர் திரு. ஆகிய நால்வரின் பங்களிப்பும் அபாரம்.

---

முழுநேர நடிகராகிவிட்ட மணிவண்ணன், தமக்கேயுரிய 'மெசேஜ் மசாலா' மூலம், மறுபடியும் தமது இயக்குநர் நாற்காலியை தூசிதட்டி அமர்ந்திருக்கிறார்.

ஐந்து வயதுச் சிறுவனாக திருவிழாக் கூட்டத்தில் தொலைந்து போகும் அக்கிரஹாரத்து சத்யராஜ், துப்புறவுத் தொழிலாளர் குடியிருப்பில் வளர்ந்து, ஆளாகிறார். எதிர்பாராமல் கிடைத்த புதையல் மாதிரி பெற்றோர்களைக் கண்டு கொண்டு, கடனில் மூழ்க இருந்த தமது குடும்பத்தைக் காப்பாற்றுகிறார். அவர் எங்கு வளர்ந்தார் என்ற ரகசியம் உடைகிறபோது அவரை ஏற்றுக் கொண்டார்களா? என்பதுதான் கதை. இதைக் காதல், செண்டிமெண்ட் கலந்து, கொஞ்சம் 'பகுத்தறிவு' டச்சுடன் சொல்லியிருக்கிறார் இயக்குனர். ஆனால் பல இடங்களில் கவலைப்படாமல் கத்தரி வைத்திருக்க வேண்டிய எடிட்டர் என்ன செய்து கொண்டிருந்தாரோ தெரியாது. நமக்குக் கண்கள் செருகியது உண்மை.

நூறு ரூபாய் கூலிக்காக கட்சிப் பேரணிக்குக் கோஷமிட்டபடி லாரியில் பயணிக்கும் மந்தைத் தொண்டர்களையும்(?) இறைச்சிக்காக லாரியில் கொண்டு செல்லப்படும் அடிமாடுகளையும், ஒப்புமைபடுத்திக் காட்டும் அந்த ஒப்பனிங்காட்சி, சூப்பர் அரசியல் நையாண்டி. அதே கருத்தை வலியுறுத்தி மறுபடி எதற்கைய்யா, ஓப்பனிங் பாடல்?

செருப்பு தைக்கும் தொழிலாளி



முக்கியமாக நந்துவின் பிறழ்ந்த மனநிலை தீவிரமடையும் தருணங்களில், அவரது பார்வையில் விரியும் 2D, 3D அனிமேஷன் மற்றும் கிராபிக்ஸ் காட்சிகளின் கலவை அற்புதம். இவற்றுக்கு இணையான துல்லிய தொழில்நுட்பத்துடன் கம்பாசிட்டிங் காட்சிகள். இந்தத் தொழில் நுட்பத்தை வெறும் இரட்டை வேடக்காட்சிகளுக்கு மட்டும் பயன் படுத்தாமல், பல்வேறு ஆக்ஷன் சீக்குவென்ஸ் காட்சிகளுக்கும் திறம்பட பயன்படுத்தி, ஹாலிவுட் போன்ற பிரமிப்பை ஏற் படுத்துகிறார்கள். எனவே, ஆளவந்தானை, 'கமல் பாதி, தொழில் நுட்பம் மீதி' என்று பாராட்டலாம்.

• அபல் ஆவரெஜ்



சிவராமன், குருக்கள் சங்கரன் ஆகிய இரண்டு பரிமாணங்களில் சத்யராஜ் வழக்கம்போல ஜமாய்த்திருக்கிறார். சத்யராஜுக்கும், நடுத்தர வகுப்பைச் சேர்ந்த ரஞ்சித்திற்கும் இடையே சித்திரிக்கப்பட்டிருக்கும் பேதமற்ற பால்ய நட்பில் நல்ல உயிர்ப்பு.

சுவலட்சுமி, திவ்யாஉண்ணி இருவரும் அவுட் ஆஃப் ஃபீல்டு என்றாலும், சொதப்பவில்லை. வங்கியில் கடன்வாங்கி, அதிலொரு யானை வாங்கி, அதற்குப் பாகனாகி, நகைச்சுவை விருந்து வைக்கிறார் இயக்குனர் மணிவண்ணன். ஆனால் யானை, சாலைகளில் வசூல் செய்வது, (பிச்சை யெடுப்பது) தணிக்கை குழுவின் கண்களில் தட்டுப்படாதது ஏன்? என்று நம் அறிவுக்கு எட்டவில்லை.

நம்மை உட்காரவைக்கும் ஒரு சிலரில், இசைஞானி, ஒளிப்பதிவாளர் டி. சங்கர், கலை இயக்குனர் வி. கலை போன்றவர்கள் முக்கியமானவர்கள்.

வசனத்தை நம்பி க்ளைமாக்ஸ் காட்சியை அமைத்திருக்கும் இயக்குனர், இன்னும் கொஞ்சம் சிரத்தை எடுத்து, பஞ்சரான வசனங்களுக்குப் பதிலாக'பஞ்ச்' வசனங்களைப் பிடித்திருக்கலாம்.

ஆறுதல்: இப்படியொரு கதைக்குப் பிரசாரத்தொனி இல்லாத இயக்கம்.

— விஷ்வல்தாசன்

• ஆவரெஜ்

## ஆண்டான் அடிமை



• லலிதா சுபாஷ்

தமிழகத்தில் என்ன; புதுதில்லியில் உள்ள டிரிபியூனலும் கூட இஷ்டத்திற்கு இழுத்தடித்த படம். படத்தின் இயக்குனர் சாகும்வரை உண்ணாவிரதம் இருக்கத் துணிந்தார்; சென்னை மெரீனா கடற்கரையில் பொது மக்களுக்குத் திரையிட்டுக் காட்டுவோம் என்று தமிழ்த் திரையுலகம் ஓரணியில் திரண்டு அறிவித்த படம் என்று பரபரப்புக்குப் பஞ்சமேயில்லாத அந்தப் படம்; தீபாவளிக்குத் திரையரங்குகளை ஆக்கிரமித்திருக்கும் காற்றுக் கென்ன வேலி!

"கடந்த ஆண்டு பிப்ரவரி மாதம் பதினெட்டே நாட்களில் முழுப் படத்தையும் எடுத்து முடித்தோம். ஆனால் பதினெட்டு மாத போராட்டத்திற்குப் பிறகு, உயர் நீதிமன்றம் எங்கள் படத்தை விடுவித்திருக்கிறது" என்று வலியும், சந்தோஷமும் கலவையாய் வெளிப்படச் சொல்கிறார் படத்தின் இயக்குனர் புகழேந்தி தங்கராஜ். "கட்சி அரசியலில் இருப்பவர்களும், சினிமா தெரியாதவர்களும், உறுப்பினர்களாக இருக்கிற தமிழக தணிக்கை குழு, உள்நோக்கத்தோடு செயல்படுவதால் தான், தமிழில் கருத்துச் சுதந்தரமுள்ள, நல்ல சினிமாக்கள் காணாமல் போய்விட்டன." என்று எடுத்த எடுப்பிலேயே கொதித்தார் புகழேந்தி.

"புலிகளுக்கு ஆதரவானது என்றும், நாங்கள் பரிந்துரைத்த வெட்டுகளைத்தான் இப்போது உயர்நீதிமன்றமும் பரிந்துரைத்திருக்கிறது என்றும் தமிழக தணிக்கைக் குழுவில் உள்ள பலரும் சொல்லி வருகிறார்களே?" என்றால் "இது முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதுபோன்ற அபத்தம். வெட்டுக்களே கொடுக்க முடியாது என்று படத்தை திர்தாட்சண்யமாக மறுத்தார்கள். இது தமிழர் சம்பந்தப்பட்ட பிரச்னை கூட இல்லை. மனிதர் சம்பந்தப்பட்ட பிரச்னை என்று வாதாடினேன்.

"தமிழக தணிக்கைக் குழுவின் இயக்குனர் ராஜு ஏதோ சொல்ல வந்தார். ஆனால் "'உங்களுக்கு ஒன்றும் தெரியாது; சும்மா இருங்கள்' என்று ஒரு சாதாரண உறுப்பினரான லலிதா சுபாஷ், தனக்கு மேல உள்ள ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரியை அடக்கினார். அதன்பிறகு அந்த மனிதர் வாயே திறக்கவில்லை." என்றவரிடம், "சென்ஸார் உறுப்பினர்கள் இப்படிச் சுதந்தரமாகச் செயல்படுவதில் என்ன தவறு இருக்க முடியும்! இப்படிச் சுதந்தரமாகச் செயல்படவில்லை என்பதுதானே நீண்ட கால மாக இருந்து வரும் குற்றச்சாட்டு." என்றோம்.

"சென்ஸார் ஒரு நல்ல அமைப்பாக இருக்கட்டும். இது போன்ற ஒரு மோசடி அமைப்பாக இருக்கக் கூடாது என்றுதான் நான் போராடினேன். இந்த அமைப்பு ஏன் அப்படி இருக்கிறது. ஆளுங்கட்சியைச் சேர்ந்த பிரமுகர்களைத் திருப்திபடுத்த வேண்டும் என்பதற்காக டெலிபோன் கமிட்டி, சிறைச்சாலை கமிட்டி என்று பல்வேறு கமிட்டிகளில் பதவி கொடுக்கிறார்கள். கட்சியில் சண்டைபோடும் எஞ்சிய பிரமுகர்களை உங்களுக்கு சென்ஸார்போர்டு கொடுத்துவிடுகிறோம் என்கிறார்கள். அவ்வளவு கேவலமாகவா இருக்கிறது தணிக்கைக் குழு? சினிமாவில் சாதித்துவிட்டு, ஓய்வு பெற்ற ஜாம்பவான்கள் எல்லாம் எங்கே போனார்கள்?" என்றவரை இடைமறித்து, "சர்ச்சைக்குரிய படமாக வருமென்று தோன்றினால், படத்தின் திரைக்கதையைப் படப்பிடிப்பிற்கு முன்னதாகவே தணிக்கைக் குழுவிடம் கொடுத்து அனுமதி வாங்க வேண்டியது தானே?" என்று கிடுக்குப்பிடி போட்டோம்.

"தீபா மேத்தா 'வாட்டர்' படத்தின் ஸ்கிரிப்டை தணிக்கைக் குழுவிடம் காட்டி அனுமதி வாங்கிய பிறகுதானே படப்பிடிப்பிற்குப் போனார். அவரைப் படமெடுக்க

# "கருத்து

## புகழேந்தி Vs லலிதா சுபாஷ்

விட்டார்களா? இவர்களிடம் எப்படி நியாயத்தை எதிர்பார்க்க முடியும்? என் படத்தைப் பார்த்த அத்தனை பத்திரிகையாளர்களும் நடுநிலையாளர்களும் இதில் தடை செய்ய என்ன இருக்கிறது? என்று கேட்டார்கள். ஆனால் ஆரம்பம் தொட்டே தணிக்கை உறுப்பினர் லலிதா சுபாஷ்தான் முழு மூச்சாகப் படத்தை எதிர்த்தார். இந்தப் பதினெட்டு மாத காலத்தில் ஏற்பட்ட பொருள் இழப்பை லலிதா சுபாஷ் தர முடியுமா? இப்போது உயர்நீதி மன்றம் படத்தின் தடையை நீக்கிவிட்ட பிறகு, தார்மிக அடிப்படையில் அவர் தமது தணிக்கைக் குழு உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்யத் தயாரா?" என்று கேள்வி எழுப்பினார் புகழேந்தி.



• புகழேந்தி

அந்தக் கேள்வியைச் சுமந்தபடி பாரதிய

# சுதந்தரத்துக்கு வேலி!"

ஜனதா கட்சியின் மாநில மகளிர் அணித் தலைவியாகப் பொறுப்பு வகித்து வரும் லலிதா சுபாஷை சந்தித்தோம்.

"தமிழக தணிக்கைக் குழுவில் எக்ஸாமினிங் கமிட்டி, ரிவைசிங் கமிட்டி என்று இரண்டு கமிட்டிகள் இருக்கின்றன. முதல் கமிட்டியில் நான்கு உறுப்பினர்களும் ஓர் இயக்குனருமாக ஐந்து பேர். இதில் நான் உறுப்பினராக இருக்கிறேன். எக்ஸாமினிங் கமிட்டி படத்தை நிராகரித்தால், அடுத்து பத்து உறுப்பினர்களும் இயக்குனரும் கொண்ட ரிவைசிங் கமிட்டிக்கு வரும். இந்தக் கமிட்டியில் பல்வேறு துறையைச் சேர்ந்த நிபுணர்கள் இருக்கிறார்கள். இதிலும் நான் அங்கம் வகிக்கிறேன். ஆனால் தனிப்பட்ட எந்த உறுப்பினரும் அதிகாரம் செலுத்த முடியாது என்பதுதான் உண்மை.

"நாங்கள் அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட மக்கள் பிரதிநிதிகள். மக்களை பாதிக்கிற கருத்துகளைத் தடுக்க வேண்டும் என்பதுதான் எங்கள் பணி. எங்கள் பணியை நாங்கள் ஒழுங்காகச் செய்திருக்கிறோம். அந்த வகையில் எங்களின் நடவடிக்கை சரி. பிறகு எதற்கு ராஜினாமா செய்ய வேண்டும்? இதில் எங்கே தார்மிகப் பொறுப்பு வந்தது. தொடர்ந்து என்னை மட்டுமே புகழேந்தி குற்றம் சாட்டி வந்தால் அவர்மீது மான நஷ்ட வழக்கு தொடருவேன்." என்று முடித்துக் கொண்டார் லலிதா சுபாஷ்.

இலங்கை இனப் பிரச்னையோடு தொடர்புடைய படம் என்ற குற்றச்சாட்டினால் ஒரு படம் இங்கே படாதபாடு பட்டு விடுவிக்கப்பட்டிருக்கும் நிலையில், ஒரு சிங்களப் படத்திற்குக் கிடைத்த தீர்ப்பைக் கேட்டால் ஆச்சர்யப்படுவீர்கள். புரஹந்தகளுவர (பூரண தினத்தில் ஒரு மரணம்) என்ற படம் சிங்கள ராணுவ வீரர்களின் மனத் தைரியத்தைக் குலைப்பதாகச் சொல்லி இலங்கை அரசு தடைசெய்தது. படத்தின் தயாரிப்பாளர் பிரசன்ன விதானகே 'உயர்நீதி மன்றத்தில் அடிப்படை மனித உரிமை மீறல் மனுவொன்றைத் தாக்கல் செய்ய, ஒரு திரைப்படத்தை கலைபூர்வமாக எடுத்துக், காட்டும் சுதந்திரத்தை அந்தத் தடை பாதிப்பதாகக் கூறி தடையை உயர்நீதிமன்றம் நீக்கியதோடு, ஐந்து லட்சம் ரூபாய் நஷ்ட ஈடாக அரசே வழங்கவும் ஆணை பிறப்பித்தது. அது மட்டுமா? படத்திற்குத் தடையுத்தரவு பிறப்பித்த அமைச்சர் சரத் அமுனுகம தனது சொந்தப் பணத்தில் ரூபாய் ஐம்பதாயிரம் தயாரிப்பாளருக்கு தர வேண்டும் எனவும் தீர்ப்பளித்திருக்கிறது.

சந்திப்பு : சக்கரத்தாழ்வார்
படங்கள் : ஸ்ரீஹரி









**கல்கி - டயானா வோர்ல்டு டிராவல்ஸ் இணைந்து நடத்திய 'அழைக்கிறது அமெரிக்கா' குவிஸ் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்று ஐரோப்பா பயணம் சென்று வந்த ரமணியின் சுற்றுலா அனுபவங்கள்...**



ராஜாவும் ராணியும் தன்னந்தனியாக காதில் காதல் இசைத்தப்படி அந்தச் சாலையில்தான் நடந்து போவார்கள். இவர்கள் வரும் நேரம் காக்காகூட இருக்காது, அந்த பல கிலோ மீட்டர் சாலைகளில். கண்ணைப் பறிக்கும் பச்சைப் புல்வெளி தரைகளும் நெடுமென நீண்ட மரங்களும் காற்றில் காதல்பாட, குதிரைகளில் ராஜாவும் ராணியும். அவர்கள் சென்று வந்த பாதையென்பதால் இதற்கு 'காதல் சாலை' என்றே பெயர் வைத்துவிட்டார்கள். அந்தச் சாலையில் கால் வைத்ததுமே எனக்கும் காதல் உணர்வு வந்துவிட்டது. (அறுபது வயதுக்கு மேல் காதல் உணர்வு வரக்கூடாதா என்ன?)

இந்தச் சாலை இருப்பது ஆஸ்திரியா நாட்டில்.

'அதற்கென்ன வந்தது இப்போ?' என்று நீங்கள் முணகுவீர்கள் என்பதால் நான் சொல்லித்தான் ஆக வேண்டும்.

'கல்கி'யும் டயானா வோர்ல்டு டிராவில்ஸ் திறுவனமும் இணைந்து 'அழைக்கிறது அமெரிக்கா' போட்டி நடத்தியதே ஞாபகமிருக்



# சொர்க்கமே என்றாலும்...

ரமணி



'நினைச்சேன்; நடந்தது!' என்று சத்தியம் பண்ணாத குறையாக நான் சொன்னால் நீங்கள் ஏற்பீர்களா? குவிஸ் போட்டியில் வென்றால் எனக்கு இரண்டாம் பரிசுதான் கிடைக்க வேண்டும் என்று

கிறதா? ம்... அந்தப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்ற பாக்கியத்தில் ஐரோப்பாவைச் சுற்றக் கிளம்பினேன். டூர் ஏற்பாடுகளிலிருந்து மற்ற அனைத்து வசதிகளையும் அட்டகாசமாய்ச் செய்திருந்த இரண்டு நிறுவனங்களுக்கும் ஸ்பெஷல் தேங்க்ஸ் சொல்லியாக வேண்டும்.

இஷ்டதெய்வம் மட்டுமின்றி எல்லாத் தெய்வங்களையும் வேண்டினேன் நான். காரணம், அப்போதுதானே ஐரோப்பா நாடுகளைச் சுற்ற முடியும். (மற்ற நாடுகளை நான் ஏற்கெனவே 'லுக்கி'விட்டேன்!) நினைத்தேன்; நடந்தது! அப்போது நானடைந்த சந்தோஷத் துள்ளலில் என் ப்ளாட்டே அதிர்ந்து அக்கம்பக்கத்து மாமிகள் முறைத்த கதை தேவையில்லாதது.

என் பிறந்த நாளுக்கு முதல் நாள் நள்ளிரவு சென்னையிலிருந்து விமானத்தில் புறப்படும் முன் என் குடும்பத்தினர் ஹேப்பி பர்த்டே சொல்லியே வழியனுப்பினர். வாழ்த்துகளை அசை போட்டுக் கொண்டே விமானத்தில் கனவு கண்டேன். பத்து மணி நேரப் பயணத்தில் லண்டன்!

தங்குவது உட்பட அனைத்து ஏற்பாடுகளையும் முன்பே செய்துவிட்டதால் 'லண்டன் கபே' ஹோட்டலில் தூங்கி, மறுநாள் காலை எழுந்ததும் டோவர் போர்ட்டுக்குப் பஸ் கிளம்பியது. மொத்தம் முப்பத்தெட்டு பேர். பல நாடுகளைச் சேர்ந்தவர்கள். பதினெட்டு பேர் இந்தியர்கள். ஒரு தமிழர் இருக்கக் கூடாதா? என்று ஏங்கினேன். அட கிருஷ்ண மூர்த்தி. கோவைக்காரர் கிடைத்தார். அவருடன் தமிழ் பேசி (மனசுக்குள்ள மொழி பெயர்த்து இங்கிலீஷ் பேசறது எரிச்சல்ப்பா!) கிளம்பினோம். அடுத்த எட்டு நாட்கள் அந்த பஸ்ஸே எங்களுக்கு வீடு.

பஸ் கிளம்பியதுமே ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார் சுற்றுலாக் குழுவின் வழிகாட்டியான மரியா! 'பஸ்ல யாரும் எந்த நொறுக்குத் தீனியும் திங்கக் கூடாது!' என்பதுதான் அந்தக் குண்டு. இந்த குண்டு விழுந்ததில் நொறுங்கிப் போனவர்கள் இந்தியர்கள்! (குஜராத்தியர்கள்)

பெல்ஜியம் சென்

றடைந்தோம். எங்கு திரும்பினாலும் குட்டி அரண்மனை வீடுகள். அந்தக்கால கட்டடங்கள் என்பதால் வியக்க வைக்கின்றன. ப்ரஸ்ஸல்ஸ் என்ற தலைநகரில் உள்ள அரண்மனைகளும் ஆட்டோமியம் என்ற மில்லெனிய நினைவகமும் மனத்தைக் கவர்ந்தன. படங்களில் பார்த்த அந்த 'மேனகின் பிஸ்' என்ற சிலையை நேரில் பார்த்தோம். சிறுநீர் கழிக்கும் சிறுவனின் சிலை! அந்த ஊரைக் கண்காணித்தவனாம் அந்தச் சிறுவன்!

ரைன் நதியில் உல்லாசப் படகில் பயணித்தோம். படகிலிருந்து கொண்டே தண்ணீரை அள்ளிக்குடிக்க ஆசைதான். கை எட்டவில்லை. பளிங்கு மாதிரி செல்லும் அந்த நதியின் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல் இருக்கிறது. நதியின் இரு கரைகளிலும் அழகான அட்டகாசமான கட்டடங்களும் கோட்டை மாதிரியான வீடுகளும் மலைச்சரிவில் இருக்கும் பழத்தோட்டங்களும் அந்தக் குளிரையும் மீறி குளுகுளுக்க வைத்தன.

பஸ்ஸில் திங்காத 'நொறுக்ஸ்' களைச் சக பயணிகள் இங்கே நொறுக்கிய கதை 'ருசி'யானது.

மறு நாள் காலை ஆஸ்த்ரியா நாட்டு ஆல்ப்ஸ் சிகரங்களை நோக்கிப் புறப்பட்டோம். இங்கு முதலில் பார்த்ததுதான் நீங்கள் படித்த முதல் பாரா.

மூன்று நாட்களாய் 'நான்-வெஜ்' அயிட்டங்களை மட்டுமே கண்ணில் காட்டியதால் பிரெட்டையும் பிட்ஸாவையும் மட்டுமே தின்று பாதி உயிர் போயிருந்த எனக்கு இங்கு காத்திருந்தது இன்ப அதிர்ச்சி! ஆமாங்க, சப்பாத்தியும், காய்கறி கூட்டும்... ஆ- ஒரு வெட்டு வெட்டினேன். (அடுத்த வேளைக்கு பார்சல் வாங்கலாம் என்று நினைத்தேன். பக்கத்து நண்பர், ஊர் புத்தி போகாதே என நினைக்கக்கூடும் என்பதால் கப்சிப்!)

அடுத்த நாள் இத்தாலிக்குப் பயணம் - போகும் வழியில் 'ப்ரென்னர் பாஸ்' என்கிற உலகின் மிக நீண்ட (17 கிலோ மீட்டர்) சுரங்கப் பாதையை கடந்து பஸ் சென்றது. இந்த இரு வழிப்பாதைச் சுரங்கம் முழுவதும் மஞ்சள் ஒளி விளக்குகள் மின்னலடித்தன. சுரங்கம் முடிந்ததும் வந்தது வெரோனா நகரம். இதில்தான் உலகப் புகழ் பெற்ற ரோமியோ ஜூலியட் பால்கனி உள்ளது. இங்குள்ள ஜூலியட் சிலையருகில் நின்று புகைப்படம் எடுத்துக் கொள்வோருக்கு, காதலர்களாய் இருந்தால் உடனே கல்யாணம் நடக்குமாம்! மற்றும் கல்யாணம் ஆனவர்களுக்கு, புதுக் காதலன் / காதலி கிடைப்பார்களாம். (அறுபது வயதுக்கு மேல் இந்த விபரீதமெல்லாம் எதற்கு என்று நான் பேசாமல் கேமராவை மூடி வைத்தேன்.) - எங்கள் குழுவில் ஏற்கெனவே கல்யாணம் ஆகி, ஆனால் தனியாய் இந்தச் சுற்றுலாவுக்கு வந்த பலர் புகைப்படம் எடுத்துக் கொண்டார்கள். ஒன்று நிச்சயம் - போட்டோ எடுத்துக் கொண்ட காரணக் கதையை யாரும் வீட்டில் சொல்லப் போவதில்லை!

அடுத்து நாங்கள் சென்றது 'வெனிஸ்' என்கிற நீரில் மிதக்கும் நகரம். ஆச்சர்யம் அணை போட்டது. இங்கு உள்ள வீடுகளுக்கும் கடைகளுக்கும் சிறிய 'கண்டோலா' என்கிற படகிலோ அல்லது இரு வரிசை வீடுகளுக்கு நடுவே அங்கங்கே உள்ள சிறிய பாலங்களில் நடந்தோதான் போக முடியும். பக்கத்துத் தெருவுக்குப் பாலம்ங்க! நாங்கள் படகில் சென்று பிரசித்தி பெற்ற பதினைந்தாம் நூற்றாண்டு செயின்ட் மார்க்கின் பாசிலிகா என்ற சர்ச்சைப் பார்த்தோம். என்ன அருமையான கட்டட

---

**"நீங்க சொன்னீங்களேன்னு என் மாமியாருக்குப் பழம் வாங்கிக் கொடுத்தேன். ஆனா அவங்க சாப்பிடவே மாட்டேங்கறாங்க, டாக்டர்!"**

**"என்ன பழம் வாங்கிக் கொடுத்தீங்க?"**

**"மிளகாய்ப் பழம்!"**

**- ஜோசப் காமராஜ்**



வேலைப்பாடு! பிரமிக்க வைக்கிறது நம்மை! இதன் அருகில் உள்ள சதுக்கத்தில்தான் கலிலியோ என்கிற வான சாஸ்திர நிபுணர் வாழ்ந்தார். பல உண்மைகளைக் கண்டு பிடித்து உலகுக்கு உணர்த்தினார்.

இத்தாலிக்கு 'குட்பை' சொல்லிவிட்டு, உலகின் மிக அழகிய நாடான ஸ்விட்சர் லாந்து நோக்கி எங்கள் பயணம் தொடர்ந்தது. ஆல்ப்ஸ் மலைமீது பஸ் ஏறும் போது மற்றொரு நீண்ட சுரங்கப் பாதையில் (14 கி.மீ.) சென்று மனத்தை மயக்கும் லூஸெர்ன் ஏரிக் கரையில் அமைந்துள்ள ஒரு ஹோட்டலில் இரவு தங்கினோம். உலகப் புகழ் வாய்ந்த தரமான கைக்கடிகாரங்கள் இங்கு தயார் செய்யப்படுகின்றன. இங்கு பல இடங்களில் யந்திரங்கள், கம்ப்யூட்டர்கள் உதவின்றி பழமையான முறையில் வாட்ச் தயாரிக்கும் நிபுணர்கள் தொடர்ந்து இருபது தலைமுறைகளுக்கும் மேல் அத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். சாதாரணமாக நினைக்க வேண்டாம். இந்த மாதிரி தயாரித்த சாவி கொடுக்கும் வாட்ச்கள் எந்த ரிப்பேரும் இல்லாமல், தொடர்ந்து 50 வருடங்கள் வேலை செய்யுமாம்!

அடுத்து டிட்லிஸ் சிகரம். (சுமார் 10000 அடி) நம் நாட்டு இமயமலையில் இதற்குத் 'தாத்தாவாக' பல சிகரங்கள் உள்ளன என்று அனைவருக்கும் தெரியும். ஆனால் இந்தச் சிகரத்திற்குக் குட்டி ரயிலில் முதலில் பயணித்து பிறகு கம்பியில் தொங்கும் கேபிள் காரில் சென்றது நல்ல அனுபவம். மேலே போகப் போக மேகங்களும், பனிச்சாரல்களும் நம்மை அவ்வப்போது அரவணைத்துச் செல்லும். உடல் முழுவதும் (தலை உட்பட) கம்பளி ஆடைகள், கிளவுஸ்கள் அணிந்திருந்தாலும் அவற்றையும் மீறி குளிர் எலும்புகளைத் தொட்டது.

நடு நிலைமை நாடாக விளங்கும் ஸ்விட்சர்லாந்து, இரண்டு உலக மகா யுத்தங்களிலும் பாதிப்படையாமல், தன் சிதையாத, மாறாத அழகை இன்னும் பாதுகாத்துக் கொண்டிருக்கிறது. ஆல்ப்ஸ் சிகரங்கள் வருடம் முழுவதும் பனிப் போர்வையுடன் காட்சி அளிக்குமாம். இங்கு சதா கடுமையாக உழைக்கும் மக்களின் வாழ்க்கைத் தரமோ மிக உயர்ந்தது. அவர்கள் கேளிக்கைகள், விளையாட்டுக்கள், விருந்துகள் இவற்றையும் நன்கு ரசித்து அனு




# கல்கி-

# B. M. SILK SAREES




## இணைந்து வழங்கும்

## பட்டுப் புடவை

## பரிசுப் போட்டி முடிவு – 14

வைர விழா காணும் கல்கி இதழில் உங்களுக்குப் பிடித்த (அ) பிடிக்காத விஷயத்தை எழுதி அனுப்புங்கள் என்று கேட்டிருந்தோம். வந்து குவிந்த கடிதங்களில் பரிசு பெற்றவர்கள் விவரம்.

முதல் பரிசு :

**"பாரம்பரிய வேரூன்றி, பக்தி உரமுடன்**
**நவீன கிளை பரப்பும் பல்சுவை**
**கனிமிகு விருட்சம்."**

ஆர்.வெங்கட்ராமன்,
பிளாட் எண்.F3, நித்யா பிளாட்,
1/24, மேக்மில்லன் காலனி 2வது
தெரு, உள்ளகரம், சென்னை - 61.

ஆறுதல் பரிசு :

**நெற்றிக்கண் திறப்பினும் நேர்மையே குறி. அன்றும் இன்றும் என்றும் கல்கியின் தலையங்கமே சரி!**

- சுந்தரன், எஸ்.சந்தானம்,
1/52, திருமால் நகர், அழகாபுரம்,
சேலம் - 636 004.

---

**அருள்வாக்கு நெறிப்படுத்த**
**அமரக(ா)தைகள் குஷிப்படுத்த**
**தலையங்கம் தெளிவுபடுத்த**
**தராசு எடைபோட**
**கல்கி முழுமைப்படுத்த**

- சுமித்ரா கல்யாணராமன்,
61-43, அஷ்டலட்சுமி அபார்ட்மெண்ட்ஸ்,
அருண்டேல் பீச் ரோடு, பெசன்ட் நகர்,
சென்னை - 90.

**அ**இமூவேந்தர் முன்னேற்றக் கழகத் தலைவர் டாக்டர் சேதுராமனைச் சந்திக்கச் செல்லும் நிருபர்களுக்குக் கொஞ்சம் கணக்கும் தெரிந்திருக்க வேண்டும். இல்லையேல் 'பே' என்றாகி விடுவோம். "இது பாருங்க தம்பி. ஒரு ஒன்றிய கவுன்சிலருக்கு அ.இ. அதிமுகவில் 15 ஆயிரம் ரூபாய் செலவுக்கு கொடுத்தாங்க. மொத்தம் 360 கவுன்சிலர். எவ்வளவு ஆச்சு? ஐந்து பஞ்சாயத்துக்கு ஒரு கிளைக்கழகம் எங்களுக்கு இருக்கு. ஆறு தென்மாவட்டங்களில் 4000 பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. அப்போ எங்க கிளைக்கழகம் எவ்வளவு இடத்தில் இருக்கு..? உள்ளாட்சிகள் சுயமா நிதி திரட்டணும். அரசை எதிர்பாக்கக் கூடாது. ஒரு நகர சபையில் 100 தெருக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு தெருவிலும் சராசரி 50 வீடுகள் இருக்கு என்று வைத்துக் கொள்ளுங்கள். வீட்டுக்கு இரண்டு ரூபாய் வளர்ச்சி நிதி போட்டா எவ்வளவு வசூலாகும்?" இப்படிப் பல கேள்விகளைக் கேட்டு நமது மூளைக்கு வேலை கொடுப்பார் டாக்டர் சேதுராமன்.

**- கௌசி**



பவிக்கின்றனர். இந்த நாட்டில் தயாராகி உலக முழுவதும் ஏற்றுமதியாகும் மற்றொரு முக்கியப் பொருள் சாக்லேட்.

'**அ**டுத்த நாள் உலகின் ஃபாஷன் தலைநகர் என்று அழைக்கப்படும் பாரீஸ். நம்மை வியக்கவைக்கும் அளவுக்கு அகலமான சாலைகள் - இவற்றுள் சிலவற்றில் எதிரும் புதிருமாக 14 வழிப் பாதைகள்! குறுக்கே, திடீரென்று பாயும் பாதசாரிகள். 'கட்' அடிக்கும் சைக்கிள்கள், கதிகலங்க வைக்கும் பஸ், லாரிகள்?... மூச்! சீரான போக்குவரத்து மட்டுமே இங்கு.

ஆயிரக்கணக்கான வாகனங்கள் சென்றாலும், 'ஹார்ன்' சப்தமே கேட்கவில்லை. தங்கள் நகரத்தெருக்களும், பெரிய சாலைகளும் அமைதியாக இருக்க வேண்டும் என்றே மக்கள் விரும்புகிறார்கள். சரித்திரப் புகழ் வாய்ந்த நாட்டர்டாம் சர்ச், அதன் ஒரு கோபுர மூலையில் உட்கார்ந்து நம்மை தீர்க்கமாக பார்க்கும் நாட்டர்டாம் கூனன், உலகப் போர் வெற்றிச் சின்னமான நினைவு வளைவு, அதிலிருந்து கீழ் நோக்கிப் போகும் இருபுறங்கள் அழகான மரங்கள் அமைந்த சாம்ப்ஸ் எலிஸ் என்ற ராஜபாட்டை;... ஒரு ஸ்வப்பன லோகம்போல் தோன்றியது.

ஆயிரம் அடி உயரமான, முழுவதும் இரும்புக் கம்பிகளிலும் தடவாளங்களிலும் ஆன ஈபிள் கோபுரம் உலக அற்புதங்களில் ஒன்று. அதன் உச்சிக்குப் பெரிய லிஃப்ட்டில், பாரிஸ் நகரத்தை நான்கு புறமும் பார்த்துக் கொண்டே ஏறிப்போவது ஒரு தனி சுகம்.

**ஐ**ரோப்பா பயணத்தை முடித்துவிட்டு லண்டனுக்குத் திரும்பி வந்தேன். எட்டு நாட்களில் எத்தனை அனுபவங்கள். பல்வேறு நாடுகளின் அழகையும், மாறுபட்ட கலாசாரங்கள், மக்கள் வாழ்க்கை முறைகள், தரங்கள், உணவுப் பழக்கங்கள், சட்ட திட்டங்களையும் பார்த்த திருப்தியும், சந்தோஷமும் நிறைந்திருந்தாலும், மனத்தில் ஒரு ஓரத்தில் நான் கேட்டு ரசித்த ஒரு பாட்டு ஞாபகத்திற்கு வந்தது - 'சொர்க்கமே என்றாலும், அது நம்மூரைப் போலாகுமா?'

**"தலைவர், பொது மக்கள்கிட்ட மனுக்கள் வாங்கறதையே விட்டுட்டார்."**

**"ஏன், என்ன ஆச்சு?"**

**"ஆந்தராக்ஸ் பயம் இந்த அளவுக்குப் போகும்னு நான் நினைக்கவேயில்லை..!"**

**- அம்பை தேவா**









# மழ... மழ... மழ... சென்னைலே மழே!

- மாதுரி
படம் : சேகர்






**செ**ப்டம்பர் 11 பின்லேடன் நடத்தின தாக்குதலை விட அதிக அதிர்ச்சி தரக்கூடிய நியூஸ் ஒண்ணு ரீசன்டா படிச்சேன்... இந்த வருஷம் தீபாவளியையொட்டி சென்னையில முன்னணி ஜவுளிக் கடையான போதீஸ்ல ஒரு புது டிஸைன் ஸாரி விற்பனைக்கு வந்ததாம் - அதுல அப்படியே உலக வர்த்தக மையம் தாக்கப்பட்ட காட்சியை பிரிண்ட் பண்ணி வித்திருக்காங்க!

இத்தனை கோர சம்பவத்தைப் புடைவைல போடணும்னு முதல்ல எந்த மஹானுபாவருக்குத் தோணிச்சோ தெரியலை. அதை வாங்கிக் கட்டிக்கவும் பெண்கள் தயாராயிருக்காங்கன்னு தெரிஞ்சதும் பெண் குலத்தை நினைச்சு.... ஐ ஹாங் மை ஹெட் இன் ஷேம்!

இப்படியொரு உலக மகா துயரம் நாம் வாழ்ந்த காலத்தில் நடந்ததுன்றது ஒரு பக்கமிருக்க அந்தச் சம்பவத்துக்கு உலகம் எப்படி ரியாக்ட் பண்ணுதுன்னு பார்க்கிறபோது இன்னும் அதிக பயமாயிருக்கு. இப்படிப்பட்ட சம்பவத்தை ஆடையாக்கி உடுத்திக்கிறது எந்த வகை டேஸ்ட்ல சேர்த்தின்னே புரியலை. மன்ற உறுப்பினர்கள்ல சைக்கியாட்ரிஸ்ட் யாரேனுமிருந்தா எழுதிப் போடலாம்.



# ஆண்டிபயாட்டிக்கும் ஆனந்தபைரவியும்!

**போ**தீஸ் நியூஸ் படிச்ச கையோட ஒரு 'புக்'கைப் புரட்டினேன்...

'மனிதன் யார்?'னு தலைப்பு! வெ. சாமிநாத சர்மா எழுதினது (சாந்தி பதிப்பகம், 27, அண்ணா சாலை, சென்னை 600 002)

ரொம்ப எளிமையான அழகான தமிழ்ல ரொம்ப பெரிய சிந்தனைகள்:

*எவனொருவன் வெறுந்துறவியாயில்லாமல் உயிரும் ஊக்கமும் நிறைந்தவனாய், தனது உணர்ச்சிகளையெல்லாம் தனது மனோபலத்துக்குக் கட்டுப்படுத்துகிறவனாய், தனது மனச்சாட்சிக்குக் கீழ்படிந்து நடக்கிறவனாய், இயற்கையழகையும் கலையழகையும் அனுபவிக்கக்கூடியவனாய், இழிவான எண்ணங்களையும் செயல்களையும் புறக்கணிப்பவனாய், தன்னைப் போல் பிறரையும் மதிக்கக்கூடியவனாய் இருக்கிறானோ,*

*அவனே மனிதன்*

தன்னைப் போல் பிறரை மதிப்பவன் மனிதன்னு சொல்றாரே சர்மா, அது ரொம்ப கரெக்ட். இப்போதைய சூழல்ல நாம நம்மையே மதிக்கிறோமான்றது ரொம்ப சந்தேகமாயிருக்கு... அதனால தான் மத்தவங்களை நம்மால மதிக்க முடியலை. ட்வின் டவர் டிசைன்ல ஸாரி போடறதும் வாங்கறதும் நடைபெறுது.

பஸ் ஸ்டிரைக்ல நாடே அவதிப்பட்டுக்கிட்டிருக்கறப்போ

ந் ஃவற ஏன் பிரவசனமெல்லாம் பண்ணி அறுக்கறேன்னு கேட்கறீங்களா...? நிறுத்தியாச்!

**லேட்டஸ்ட் எபிசோட்**

ரமணி VS ரமணி யார்லாம் பார்த்திங்க...? அந்த புருஷன் பொண்டாட்டி சண்டையில (லைஃப்ல ரொமான்ஸே இல்லைன்றதுதான் சண்டை!) இன்ஸ்பையர் ஆகி ஒரு காதல் கவிதை அடெம்ப்ட் பண்ணினேன். சுத்தமா வரலை! ஸோ படித்ததில் பிடித்தது இதோ:

காலில் பீங்கான் கிழித்து
படுத்திருந்த நாட்களில்
அவன் ரகசியமாய்க்
கொடுத்த
கருவாட்டுத் துண்டும்
கத்தரி வத்தலும்
எந்தக் காதலனுக்கும்
கிடைக்காத மருந்து

— இதுவும் இதைவிட பவர்ஃபுல்லான சில கவிதைகளும் ஏக்நாத்தோட 'கெடாத் தொங்கு' தொகுப்பிலே இருக்கு.. (இலக்குமி நிலையம், 115, கௌடியா மடம் சாலை, சென்னை - 14, விலை ரூ.20) 'கெடாத் தொங்கு'ன்ற பயங்கரமான டைட்டிலை ஏன் இந்தப் புத்தகத்துக்கு வைச்சார்னுதான் புரியலை. தலைப்புக்கு அர்த்தம் புரியலைன்னு பல பேர் வாங்காம போயிடுவாங்க; வேறு பலர் அர்த்தம் புரிஞ்சா வாங்காம ஓடியே போய்டுவாங்க. பலி கடாவை வெட்டுறபோது கழுத்து தொங்கிப் போகுறதைத்தான் 'கிடா தொங்கு'ன்னு சொல்வாங்களாம்!

மியூசிக் சீசனுக்கு இன்னும் டூ வீக்ஸ்தான் இருக்கு.... பாடறவங்களும் கேட்கறவங்களும் பட்டுப் புடைவைகளை ரெடி பண்ணி புதுபிளவுசெல்லாம் தைச்சு வைச்சுக்கிட்டிருப்பாங்க... ஒரு கர்டன் ரெய்ஸர் கவிதை படிக்கறீங்களா...?

வடை சுட்டு
கடை விரித்து
விளக்கு வைத்து
பசி வேளை
நிசி வேளை பாராத
பிசியான இசை விழா.

மேடை நிறைய
பக்க வாத்தியம்,
பக்கா வாத்தியார்,
கூடம் நிறைய
கூடை நாற்காலி, மனித
வாடை இல்லை, காலி.

தனிமையில் தவிக்கும்
ரசிகனுக்கும் துணையாய்
சுற்றிலும் சுவரில்
மங்கிய படமாய்த்
தங்கிப் போன
முந்தைய தலைமுறை.

குளிர் காலத் தொத்து.
நாளொன்றுக்கு நாலு டோஸ்
குளிர் அதிகரித்தால்




ஜன்னி கண்டு விடும்.
சில வேளை
தியேட்டரில்
அறுவைக் கேஸும் உண்டு.
தெரியாமலா சொன்னார்கள்
சங்கீதத்திற்கு
மருத்துவ குணமுண்டென்று

சரியாய்த் தான் இருக்கிறது.
சாத் ருது முடிவில்
சீசன் வந்து
சாமியாடும் சபாக்களுக்கு
மாமி - மாமா தேவையில்லை.
மருந்துக் கம்பெனி
மானியமே போதும்.

'ஆண்டி பயாடிக்கும் ஆனந்த பைரவியும்'ன்ற தலைப்போட இந்தக் கவிதையை அனுப்பினவர் வீ.வி. ராகபுர!

வித்வான்கள், வித்வாம்ஸினிகள், சபா செயலர்கள், ஸ்பான்ஸர்கள், ரசிகர்கள் அத்தனை பேரும் சப்ஜாடா மன்னிப்பார்களாக - என்னையில்லை... வீ.விஜயராகவனை!

அப்புறம் வீ.வியும் மன்னிப்பாராக - போன வருஷம் அனுப்பின கவிதையை இந்த வருஷம் சாவகாசமாக ஷோகேசுக்குக் கொண்டு வந்த என் சுறுசுறுப்பை!

— சுமி



சுமி
சூப்பர்மார்க்கெட்





• சங்கரன்



• வெங்கடேசன்

# சென்னைக்கு வந்த மினி பஸ்!

அ.தி.மு.க.வின் தொழிற்சங்கமான அண்ணா தொழிற்சங்கத்தைத் தவிர அனைத்து போக்குவரத்துத் தொழிலாளர் சங்கங்களும் நீட்டித்து வரும் அதிரடி வேலை நிறுத்தத்திலிருந்து சென்னை மக்களை ஆறுதல் படுத்திக் கொண்டிருப்பது சிற்றுந்துகள்தான். (அதாங்க... மினி பஸ்). இத்தனைக்கும் கடந்த தி.மு.க ஆட்சியில் இந்தத் திட்டத்தை வாய்க்கு வந்தபடி விமர்சித்த இவர்கள், மினி பேருந்துகளைப் பிடித்து வந்து சிங்காரச் சென்னைக்குக் 'கிராம எபெக்ட்' கொடுத்து போக்குவரத்து வரலாற்றில் புதிய தடம் பதித்து விட்டார்கள்.

"சென்னை மாநகரப் போக்குவரத்துக் கழகத்தில் வேலைக்குச் சேரணும்கிறதுதான் என்னோட லட்சியமா இருந்தது. அது நிறைவேறலை. ஆனால் இப்படி திடுதிப்புன்னு இங்கே வந்து ஓட்டுவோம்னு நினைக்கலே" என்று சொல்லும் திருச்சியைச் சேர்ந்த மினி பஸ் டிரைவர் சங்கருக்கு நூற்று ஐம்பது ரூபாய் தினசரி சம்பளமாம்.

"ஊரில் மக்கள் எங்கே வேணுமானாலும் நிறுத்தி ஏறிக்குவாங்க. இறங்குவாங்க. மினி பஸ் கான்செப்ட் அதான். அதே ஞாபகத்துலே இங்கேயும் அங்கங்க நிறுத்தி ஏத்திக்கிறோம். இதனால் பின்னால் வர்ற வாகனங்கள் கிட்டே அடிக்கடி இடி வாங்க வேண்டியிருக்கு" என்கிறார் சங்கரனுடன், இணைந்து பணியாற்றும் நடத்துனர் வெங்கடேசன்.

சென்னையில் ஓடும் ஆம்னி பஸ்களின் நடத்துனர்களிடம் விசில் கூட கிடையாது. பயணிகளிடமிருந்து வாங்கும் பணத்தை ஜவுளிக்கடை துணிப்பையில் போட்டுக் கொள்கிறார்கள். புதிதாகத் தேர்வு செய்யப்பட்ட தற்காலிக ஓட்டுனர், நடத்துனர்களின் நிலையோ இன்னும் பரிதாபம். வசூல் பணத்தை எடுத்துக் கொண்டு ஓடி விடுவார்களோ என்று சந்தேகித்து, இவர்களின் கல்விச் சான்றிதழ்கள், ஓட்டுனர் உரிமம் இரண்டையும் பிடுங்கி வைத்துக்கொண்டு விட்டார்களாம்!

— ஜெ

படங்கள்: ஸ்ரீஹரி

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

